உ

# முன்னுரை

“உடம்பினு லான பயனுவ தெல்லாம்
திடம்பட ஈசனைத் தேடு.”

என்று திருவாய் மலர்ந்தருளினுர் ஒளவையார் என்னும் அருந்தமிழ் மூதாட்டியார். அவ்வம்மையார் இயம்பிய நல்லுரைக் கேற்ப, மக்களின் மன மொழி மெய்களைக் கடந்து நிற்கும் கடவுளை யாராய்ந்தறிந்து, அவருடைய திருவடித்தாமரைகளை யெய்தி, என்று மழியாத இன்பப் பெரும்பேறு எய்திய பெருமக்கள் பலர். அவர்தம் சரிதைகளைக் கற்பதனுலும், கற்றதற் கேற்ப நன்னெறி நின்றொழுகுதலாலும் மக்கள் அடைதற்கரிய பயன் இவ்வுலகத்துமில்லை; அவ்வுலகத்துமில்லை; மற்றெவ்வுலகத்து மில்லை.

‘தம்பிரான்றேழர்’ எனும் பெயரிய இந்நூல், சைவ சமயாசாரியர்களுள் ஒருவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திப்பியச் சரித்திரத்தைத் தெள்ளிய உரை நடையான் விளக்க வெழுந்ததாகும். ஆதலின், தமிழறிஞர்கள் இதனைத் தமிழ் மாணவர்க்குப் பயன்படச் செய்யுமாறு அவர்களை வேண்டிக்கொள்ளுகிறேம்.

பிரசுர கர்த்தர்

# பொருளடக்கம்

கணபதி துணை.

# தம்பிரான்றோழர்

## 1. வரலாறு

திருக்கயிலாய மலையிலே அருட்கடலாகிய கறைமிடற்றண்ணல், மலைமகளாராகிய எம்பிராட்டியார் தம் இடப்பாகத்தே மேவ, பேரொளி உடைய பெரிய இருக்கையிலே எழுந்தருளி யிருந்துகொண்டு, அடியவர் வேண்டுவனவெல்லாம் தந்தருள்வார். அவர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலின் முன்னே நந்திப் பிரான் பிரம்புப் படையைக் கையிலேந்தி, இறைவனார் திருவுருக் காண வந்திருக்கும் இந்திரன், மால், அயன் முதலாம் எண்ணில் விண்ணவர் கூட்டத்து வீசி, ஒழுங்கு பெற நிறுத்தி நின்றருள்வார். அடியார்களெல்லாம், ஐயரது கண் கொள்ளாக் காட்சியைக் கண்டு, என்புருக, உளங்கரைய, அன்பு மேலீட்டால், 'அரகர,' என்று ஆரவாரம் செய்து ஆடிப்பாடி, உச்சிமேற் கரங் குவித்துப் பணிந்து நிற்பார்கள். அம்மலையோ, வெள்ளி மயமாகப் பல முடிகளோடும் விளங்கிக்கொண்டு இருக்கும். அம்மலையின் அடிவாரத்திலே, சிவனாரடிக்கு உண்மை யன்பராகிய உபமன்னிய மாமுனிவர் பல முனிவர்கள் சூழ இருந்தருளினார். அவர் புலிக்கால் முனிவருக்குத் திருமகனார். சிதம்பரத்திலே ஒரு நாள் அவர் பாலை விரும்பி அழ,

எம்பிரானார் அவர் உண்ணும்படி திருப்பாற் கடலையே வருவித்துத் தந்தார்.

துவாரகைக்கு இறைவராகிய கண்ணபிரானார் முடி மேல் தமது திருவடியை வைத்து, அவருக்கு ஞானாசிரிய ராய் அமர்ந்த பெருமையுடையவர் உபமன்னியு முனி வர். அவர் பல முனிவர்கள் தம்மைச்சூழ அங்கிருக்கும் பொழுது, அவர்களுக்கு முன்னால் ஆயிரம் ஞாயிறு தோன்றினாற் போல ஓர் ஒளி தோன்றிற்று. அங்கிருந்தா ரெல்லாரும் அது கண்டு வியப்படைந்தனர். உபமன் னியரோ, உடனே யெழுந்து, கீழ் வீழ்ந்து இறைஞ்சிக் கைகள் கூப்பித் தொழுது நின்றனர். அம்முனிவர்கள் அவரை நோக்கி, "பெரியீர், தாம் சிவபிரான் அடிமலரே யல்லாமல் பிறரொருவரையும் வணங்காத பெருந் தகைமையினர் அன்றே? இதனை வணங்கியதேது?" எனத் தமது மனத்து நிகழ்ந்த ஐயம் நீங்க வினவினர். உடனே அப்பெரியார், "எம்பிரான் றோழர் எழுந்தருளி வருகின்றார். அவர் நாம் தொழும் தகைமையர்," என்ற னர். அது கேட்ட அந்தணர் அதனை வணங்கி, "இப் பேரொளி உடையார் வரலாறு கேட்க யாங்கள் விரும்பு கின்றோம். உரை செய்தருள்க," என்று வேண்டினர். உபமன்னிய மாமுனிவர் அவர்களுக்கு அவ்வரலாற்றைப் பேரன்போடும் சொல்லத் தொடங்கினார் :

" இக்கயிலையிலே மலர்கள் பல எடுத்து வந்து அவைகளைத் தொடுத்து எம்பிரானுக்கு அணியாக்கும் சிறந்த தொண்டினைச் செய்து வரும் பெருமையை யுடைய அடியவர் ஒருவர்; அவர் பெயர் சுந்தரர். அவ ருக்குத் திருநீறு தாங்கும் பணியு முண்டு. ஒரு காலத்

தில் தேவர்களும் அசுரர்களும் கூடி அமுதம் பெறுமாறு மந்தர மலையை மத்தாகவும் வாசுகி என்ற பாம்பைக் கடை கயிறாகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்தனராக, அவணின்றும் ஆலால நஞ்சு தோன்றி, யாவரையும் அழிக்கத் தொடங்கிற்று. தேவர்தலைவனும் மலரோனும் திருமாலும் அது கண்டு அஞ்சினராகி, இரிந்தோடி, இடைவிடாது பரம சிவனாரை நோக்கித் தவங் கிடந்தனர். அவர் துன்பங் கண்டிரங்கிய எம்பிரானார், விடைமீதூர்ந்து தோன்றி, 'அஞ்சலீர்,' என்றருளி, அருகு நின்ற சுந்தரரை நஞ்சைக் கொணருமாறு ஏவினர். அவ்வாணை வழிச் சென்ற சுந்தரரோ, 'உலகம் யாவையும் அழிப்பல்!' என்று எழுந்துவந்த நஞ்சினைத் தம் கையில் வந்துறப் பண்ணினர். அந்நஞ்சும் அவர் அங்கையில் கடுகளவாகி வந்திருந்தது. அதைக் கொண்டு போய்ச் சுந்தரனார் எம்பிரானாருக்குத் தர, அவர், கவலையுறும் போது காக்கும் கடவுள் தாமே என்பதை உலகினர் உணர்ந்து உய்தற்காக, அக்கடுவினை யுண்டு, கறுத்த கழுத்தினர் ஆனார். இவ்வகையாக ஆலாலத்தைக் கொண்டு வந்து ஐயருக்கு அளித்த பெற்றியால், நம் சுந்தரனார் அது முதல் ஆலால சுந்தரர் என அழைக்கப் பெற்றார். அச்செயலால், விண்ணவர் பலரும் பிழைத்தனர்.

"ஒரு நாள் நம் ஆலால சுந்தரர் மலர் கொய்திடப் பூஞ்சோலை சென்றனர். அங்கே அவர் செல்லு முன்னரே எம்பிராட்டியாராகிய மலைமகளார்க்குப் பூ வெடுத்தற்காகப் போந்திருந்த சேடிய ரிருவர் அனிந்திதை, கமலினி என்பவர், நிற்கக் கண்டனர். அப்பொழுது

அவரை அம்மங்கையரும் பார்த்தனர். உடனே தம் முன் அவர்கள் மன்றல் எண்ணினர். ஆயினும், அவர் ஒருவர்மீது ஒருவர் சென்ற உள்ளத்தைத் திருப்பிக் கொண்டு, தாம் வந்த வினை முடித்துத் திரும்பினர். சுந்தரர் எம்பிரானார் திரு முன் எய்தலும், யாவருள்ளத் தும் கலந்துறையும் அவ்வருட் கடல், அவரை நோக்கி, "அப்பா, நீ மாதர்மேல் மனம் வைத்தனை. ஆதலின், தென்னாட்டிற் பிறந்து, இப்பெண்களை மணந்திருந்து வா," என்று ஆணை யிட்டார். அது கேட்ட அடியவர், அகமிகக் கலங்கி, கைகளைச் சிரமேற் குவித்துச் சேவடி தொழுது, "எம்பெருமானே, உம்முடைய திருவடி நீங் கத் தீவினை செய்தேன். இச்சிறு தொழிலாளன் சீர் கெட்டு மயங்கும்போது எழுந்தருளி வந்து அடியேனைத் தடுத்தாண்டு அருள் செய்யும்," என வேண்டி நின்றார். நெற்றியங்கண்ணனார் அதற்கு, 'ஓம்' என்று இசைந் தருளினார். சுந்தரனார் தென்னாட்டிற் றோன்றி, இரு மங்கையரையும் மணந்திருந்து, இப்போது எம்பிரானார் திருவடித் தொண்டு செய்ய எழுந்தருளி வருகின்றார்."

இவ்வாறு உபமன்னிய மாமுனிவர் உரைத்தருள, முனிவர் பலரும் அவர் பொன்னடி பணிந்து போற்றி, "ஐயன்மீர், அவர் வரலாறு முழுதும் கேட்கப் பேராவல் உடையேம். சொல்லி யருளுக," என்று தொழ, அப் பெரியார் அதனைச் சொல்லி யருளினார். அது பின் வருமாறு:

300-



## 2. இறைவர் தடுத்தாட் கொண்டது

வளமிகுந்த திருமுனைப்பாடி நாட்டிலே சிறந்து விளங்கியது திரு நாவலூர். அதிலே சிவ பெருமானுக்கு வழி வழி அடிமை செய்யும் மாட்சி பெற்ற அந்தணர் குலத்திலே, ஒழுக்க மிக்கவர் ஒருவர், சடையனார் என்பவர். அவர் கற்பித்தவற்றைக் கடைப்பிடித்தொழுகும் கற்பு மிக்கார் இசை ஞானியார். அவ்வம்மையார் திரு மணி வயிற்றிலே தோன்றினார் நம் சுந்தரனார். அவருக்குத் தந்தையும் தாயும் நம்பி யாரூரர் எனப் பெயரிட்டு, அணி பல அணிந்து, அன்பொடும் வளர்த்து வந்தனர்.

நம்பி யாரூரர் சிறு தேருருட்டும் பருவ மடைந்தனர். அக்காலத்திலே ஒரு நாள் அத்திருமகனார் தெருவில் தேருருட்டி விளையாடி நிற்பதை அந்நாட்டுக் கரசராகிய நரசிங்க முனையர் கண்டு, அன்பு மிகக் கொண்டு, அவர் இருமுது குரவர்பாற் சென்று, மிகுந்த நண்போடும் அவரைத் தமக்கு வளர்ப்புப் பிள்ளையாகத் தர வேண்டிப் பெற்று, அம்மகனாரோடும் தம் அரண்மனையை யடைந்து, அவரை யரசிளங் குமரர்க்கேற்ற சிறப்புப் பல செய்து வளர்த்து வந்தனர். அங்கே ஆரூரர் அறிவு நூல் பலவும் ஆவலோடும் ஓதி உணர்ந்து, மணப் பருவ முற்றார்.

அது கண்ட சடையனார், சைவ அந்தணர் குலத்துள் புத்தூரில் சடங்கவி மறையோர் என்பவரிடத்துச் சில பெரியோரை யனுப்பி, அவர் மகளாரைத் தம் மகனாருக்கு மணம் பேசுவித்தார். அவரும் இசைந்தனராக மன மகிழ்ச்சியோடு மண நாள் குறிக்கப்பட்டது.

புத்தூரிலே மணத்துக்கு வேண்டிய ஏற்பாடுக ளெல்லாம் செய்து முடிக்கப்பட்டன. மண நாளுக்கு முன்னுள் மாப்பிள்ளைக்குக் காப்புக் கட்டப்பட்டது. மண நாளன்று காலையிலே நம்பி யாரூரர் விதிப்படி குளித்துப் பல கலன்களையும் பூண்டு, மணக் கோலங் கொண்டார். பின்பு அவர் ஒரு பெரிய குதிரையிலே ஏறிக்கொண்டு, புத்தூருக்கு வந்து, அவ்வூர் வீதியிலே புகுந்து சென்ருர். அவ்வூரிலுள்ளார் யாவரும் அங் கங்கே கூடிக் கூடி அவரைக் காண நின்றனர். பலர் பாடி நின்றனர். பலர் ஆடி நின்றனர். சிலர், 'இக்காளை யைக் காணக் கண்கள் எண்ணில்லாதன வேண்டும்,' என்றனர். இவ்வாறு ஆவ்வூர்ப் பெண்கள் யாவரும் புகழ்ந்து காண, நம்பி யாரூரர் சடங்கவியார் வீட்டு வாயிலிலே போடப்பட்டிருந்த திருமணப் பந்தலுக்கு முன்பு சென்று, சங்க மொலிக்கக் குதிரையினின்று மிறங்கி, அப்பந்தலிலே தமக்கிட்டிருந்த பேரிருக்கையிற் சென்றிருந்தார்.

அப்பொழுது கைலையிலே அவரைத் தடுத்தாட் கொள்வதாக வாக்களித்த எம்பெருமானுர், தம்சொல்லை நிறைவேற்றத் திருவுளங் கொண்டார். அவர் நெற்றி யில் திருநீறு விளங்க, நரைத்த முடி அங்கு மிங்கும் அசைய, மார்பில் முப்புரி நூலோடும், தோளின்மேல் அணிந்த வெண்ணிறமான மேலாடையோடும், கையிற் குடையோடும், மற்றொரு கையில் மூங்கிற்றடி கொண்டு அதனைக் கீழே ஊன்றி ஊன்றி நடக்கும் கிழ அந்தண உருவோடும், தள்ளாடித் தள்ளாடிப் புத்தூரை நோக்கி நடந்து வந்தார். அவரைக் கண்டா ரெல்லோரும், "இவ்

வுரு அழகெல்லாம் திரண்டு வந்ததோர் உருவோ! இவருக்குமேல் வயது முதிர்ந்தோர் இருப்பரோ! இவர் தான் உண்மையான நெறியாகிய வைதிக சைவத்தை உலகில் முதல் முதலாக நிலை பெறச் செய்தவரோ!" என ஐய முற்றனர். அம்முதியார் அப்புத்தூரிலே புகுந்து, சடங்கவியார் வீட்டின் முன் வந்து, சிறந்த மறை முறை திறம்பாது மணத் தொழில் தொடங்கும் பந்தலிலே கூடியிருந்த பெரியோர் முன்னிலையிலே நம்பி யாரூரருக்கு எதிராக வந்து நின்று, "யாவரும் நாம் சொல்லப் போகிற இச்செய்தியைக் கேளுங்கள்," என் றார். அது கேட்ட மறையோரும் நம்பியாரும் அவரை நோக்கி, "ஐயரே, உமது வரவு நல்வரவாகுக. நீவிர் இவண் போந்தது எங்கள் தவமே. நீர் சொல்ல வேண்டு வதைச் சொல்லியருளும்," என்றனர். எம்பிரானும் நம்பியாரூரரை நோக்கி, "எமக்கும் உனக்கும் பண்டு தொட்டு ஒரு பெருவழக்குண்டு. அதனை முடித்து விட்டு, உன் மண வினையை முயலுக," என்றார். அது கேட்ட நம்பியார், "அவ்விதமாயின், அவ்வழக்கினை முடித்தா லல்லாமல் யாம் வதுவை செய்யேம். அதனைச் சொல்லி யருள்க," என்றார். அப்பொழுது அயனோடு மாலும் அனைத்துயிர் பலவும் தமக்கு அடிமையாகக் கொண்ட பெம்மான், "பெரியோர்களே, கேளுங்கள்: திருநாவ லூரனாகிய இந்நம்பியாரூரன் எம்மடியான். இதுவே நாம் சொல்லுவது," என்றருளினார். உடனே கேட்டவர் யாவரும், 'இவர் யாது நினைத்தார்!' என்று வெகுண் டனர். சிலர் சிரித்தனர். சிலர் வெளிச்சென்றனர். மண மகனாரோ, "இவ்வந்தணர் மொழி மிக நன்று! நன்று!!"

என்று சிரித்தார். அது கண்ட ஐயரோ, மிக வெகுண் டார்போலக் காட்டி, தம் மேலாடையை இழுத்துப் போட்டு, முன் சென்று, "இதோ பார்த்தாயா உன் பாட் டன் தந்த ஆளோலை? ஏடா, இதனை நீ இகழ்ந்ததென்?" என்றார். குற்றமற்ற குலத்திற் பிறந்த வள்ளலாராகிய நம்பி யாரூரர் இறைவனை நோக்கி, அன்பால் மன நெகிழச் சிரிப்பு நீங்கி, "குற்றமற்ற அந்தணர்கள் வேறோர் அந்தணர்க் கடிமை யாதலை இதுவரை யாம் கேட்டோமில்லை; இன்று இவர் பேசக்கேட்டோம். இம் மறையோர் பித்தரோ?" என்றார். அது கேட்ட சிவனார், "யாம் பித்தரே யாயினும் ஆகுக. அன்றிப் பேயரே ஆயி னும் ஆகுக. நீ இன்னும் எத்தனை நிந்தைகள் சொன்ன லும் நாம் அவற்றால் நாணேம். எம்மை நீ சிறிதும் அறிந்திலை. நிந்தை பேசேல். பணி செய்தலே உன் கடன்," என்றார்.

நம்பி யாரூரர் தம் முன் நிற்கும் கிழவனார் உரு வைக் காணக் காண அன்பு மீதூர, அத்துடனே அவர் சொல்லைக் கேட்கக் கேட்கச் சினம் பொங்கி எழ, அவரை நோக்கி, "பித்தரே, அவ்வாளோலை காட்டும். அதன் உண்மையை யறிவோம்," என்றனர். அவ் வந்தணரோ, "நீ ஓலை காணும் தன்மை யுடையாயோ? அதனை இப்பெரியார் முன் காட்டப் பணிசெயற்பாலை," என்றனர். அச்சொல் செவி யேறிய அளவில் மிக வெகுண்டு, திருநாவலூரர் அவ்வோலையைப் பறித்தற் காக அவரை நோக்கி ஓடி, வலிந்து பின் தொடரலுற்றார். கிழவனாரோ, அப்பந்தலில் அங்கு மிங்கும் ஓடினார். நம் பியாரோ, விரைந்து சென்று, மாலும் அயனும் காணற்

கரிய அம்மதி சூடினாரைப் பற்றி, அவர் கையிலிருந்த ஆளோலையைப் பிடுங்கி, "அந்தணர் அடிமையாதல் என்ன முறை!" என்று கிழித்தெறிந்தனர். தலைவனார் அவரைப் பற்றிக்கொண்டு, "முறையோ! முறையோ!!" என்று கூவினார். அங்கிருந்தார் அவ்விருவரையும் விலக்கி, "ஐயரே, நீர் உலகிலில்லாத வழக்குக் கொண்டு பிணங்கி நின்றீர். உம் ஊர் எது? சொல்லும்," என்றனர். உடனே ஐயர், "இப்பொழுது இங்கேதானிருக்கிறோம். எம்முடைய இருப்பிடமோ, வெகு தூரமில்லை; இந்த வெண்ணெய் நல்லூரே. அதுகிடக்கட்டும். முரட்டுத்தனமாக எம் கையிலிருந்த ஆவணத்தை வலியப் பிடுங்கிக் கிழித்தெறிந்து, தான் அடிமை என்பதைத் தானே நிலை நிறுத்தினான்," என்றருளினார். நம்பி யாரூரர் அவரை நோக்கி, "இவர் பழைய மன்றாடிபோலும்! பித்தரே, உமக்குத் திருவெண்ணெய் நல்லூர் இருப்பிடமானால் இத்தகுதியில் வழக்கைப் பேசுதற்காக அங்கே போவோம்; வாரும்," என்றழைத்தனர். அதனைச் செவியுற்ற அந்தணர், "நன்று! நன்று!! செல்வோம். அங்கே மூல ஓலை காட்டி நீ அடிமையாதல் சாதிப்போம்" என்று தம் கைத்தண்டை ஊன்றி ஊன்றி விரைந்து நடந்தனர். அப்போது காந்தத்தால் இழுக்கப்பெறும் இரும்பு போல, நம்பியாரூரர் அவர் பின் சென்றார். அவ்வழக்கின் முடிவை யறிய அங்குக் குழுமியிருந்த சுற்றத்தார் பலரும் அவர் பின் சென்றனர். அனைவரும் அவ்வெண்ணெய் நல்லூர் சென்று, ஐவர் பேரவை யடைந்தனர். அவ்வவையாரை நோக்கிக் கிழவனார், "பெரியோரே, இந்நம்பியாரூரன் எமக்கு அடிமையென்று நாம் காட்

டிய ஓலையைக் கிழித்தெறிந்து உங்கள் முன் போந்தான். இஃது எம் முறைப்பாடு,'' என்று தெரிவித்தார்.

அவ்வவைத் தலைவராகிய அந்தணர் அவரை நோக்கி, "ஐயன்மீர், இவ்வுலகில் மறையவர் அடிமை ஆதல் இல்லையே! நீர் என்ன சொன்னீர்?" என்று கேட்டார். அதற்குக் கிழவர், "பெரியீர், நாம் கொண்டு வந்தது பொய் வழக்கன்று; மெய் வழக்கே. வழக்கென்று வந்தமையால், நீவிர் உசாவி யறிந்து, முடிவு செய்ம்மின். இவன் கிழித்தெறிந்த ஓலை எமக்கு இவனுடைய பாட்டன் எழுதித் தந்ததாம்,'' என்று மறுமொழி தந்தார். உடனே அவைத் தலைவர் உளமிசைந்து, ஆரூரரை நோக்கி, "உம் பாட்டனார் எழுதித் தந்த ஓலையைக் காட்டினாரானால், அதனைப் பிடுங்கிக் கிழித்தெறிவது உமக்கு வெற்றி யாமோ? இக்கிழவர் தம் வழக்கைப் பொருந்தச் சொன்னார். உமது எண்ண மென்ன?" என்று கேட்டனர். அதற்கு நம்பி யாரூரர், "பல கலைகளிலும் வல்ல பண்புடையீர், நாம் ஆதி சைவரென்றறிவீர். எம்மை இவர் தமக்கடிமை யென்று சாதிக்கின்றார். இஃது எம் மனத்தால் உணர்தற் கெட்டாமையா யுள்ளது. ஆதலின், நாம் ஒன்றும சொல்வதற்கில்லை,'' என்றனர். உடனே ஐவரும் சிவனாரைநோக்கி, " ஐயரே, இவரை நீர் அடிமை என்ற கடுஞ்சொல்லை எம் முன்பு நிலை நிறுத்த வேண்டும்: விதி, ஓலை, சான்று இம்மூன்றி லொன்று கொண்டு சாதியும்,'' என்றனர். கிழவர் அவர்களைப்பார்த்து, "பெரியோர்களே, இவன்முன் வெகுண்டு கிழித்த ஓலை, படி ஓலை. மூல ஓலையை உங்கள் முன் காட்டுவதற்காக மறைத்து வைத்திருக்கின்றோம்,'' என்

றுரைத்தார். "அங்ஙன மாயின், அதனைக் காட்டுக," என்று அவர்கள் கூற, ஐயர், "இவன் மீட்டும் தீங்கியற்ருது காக்க வல்லீ ராகில், காட்டுவோம்," என்றிசைத்தனர். அவர் அவ்வாறே ஆணையிடத் தலைவனர் மூல வோலையென ஓர் ஓலையை அவர்களுக்குக் காட்டினர். ஐவர் ஏவலால் கரணத்தான் அதனைப் பணிவொடு வாங்கி அனைவரும் கேட்கப் படித்தனன். அவ்வோலையில்,

"திருநாவலூரில் மறை வல்ல ஆதி சைவனகிய நம்பி யாரூரன் செயல்: திருவெண்ணெய் நல்லூர் முனிவராகிய பித்தனர்க்கு நானும் என் மரபினரும் வழி வழி அடிமை செய்தற்கு உள்ளும் புறமும்இசைய இவ்வோலை எழுதித் தந்தேன். இதற்கு இஃது என் கையெழுத்து."

என்று எழுதியிருந்தது. அவ்வோலையிலே மேலெழுத்திட்ட பெரியோர் யாவரும், தம் எழுத்தை நோக்கி, "இவை எம்முடையனவே," என்றிசைத்தனர். அப்பொழுது ஐவர், நம்பியாரை நோக்கி, 'ஐயரே, இஃது உம்முடைய பேரனர் எழுத்துத் தானு? பார்த்துச் சொல்லும்,' என்ருர்கள். அது கேட்ட ஐயரோ, "இத்தனைக் கப்புறமும் இவனே ஆவணம் காண்பான்? இவன் பாட்டன் எழுதிய கைச்சாத் தழைத்து அதனை இவ்வாளோலையோடும் ஒப்பு நோக்கி நீவிர் அறிந்த முடிவைச் சொல்லுமின்," என்று பகர்ந்தனர். அவ்வாறே ஐவர் பேரவையார் காவலோடும் அவர் பாட்டனர் எழுதிய வேறு ஓலை வரவழைத்து, ஆவணத்தோடும் ஒப்பு நோக்கி, "இரண்டெழுத்தும் ஒத்திருந்தன. இனி வேறு செயல் இல்லை. நம்பி யாரூரரே, நீர் இம்முனி

வர்க்குத் தோற்றீர். இனி இவர்க்கடிமை செய்தலே உம் கடன்," என்று முடிவிசைத்தனர். நம்பி யாரூரரும், 'இதுவே விதி முறையாகில், யாம் இனி அடிமையில்லை என்னலாமோ?' என்று இசைந்தார். அப்பொழுது ஐவரும் சிவனாரை நோக்கி, "முனிவரே, நீர் எம்மிடம் காட்டிய ஓலையிலே உமக்கு இருப்பிடம் இவ்வூர் என்ற செய்தி காணப்படுகிறது. இங்கே உமக்குரிய வீடு வாசல் முதலியன எமக்குக் காட்டும்," என்று வினவினர். ஒப்பற்ற வழக்கிலே வென்ற பித்தனார், "ஒருவரும் எம்மை இன்னாரென்று உணரீராகில், எம் பின் வம்மின்; எம்மிடம் காட்டுதும்," என்றறைந்து, யாவரும் தம்மைத் தொடர்ந்து வரச் சென்று, அவ்வூரி லுள்ள தம் கோவிலாகிய திருவருட் டுறையுட் புகுந்து மறைந்தனர். பலரும் அவரைக் காணாது மயங்கினர். நம்பியாரூரரோ, நில்லாது உட்சென்று, விருப்பினோடும் தொடர்ந்து, "தலைவரே," என அழைப்ப, எம்பிரானார் விண்ணிலே அம்மையாரோடும் விடைமேற் கொண்டு தோன்றி, அவரை நோக்கி, "நீ முன்பே நம் தொண்டன். பெண்டிரை மணக்க விரும்பியதால், இங்ஙனே இம்மண்ணிற் பிறக்க எழுந்த நம் ஏவல் வழித்தோன்றினாய். துன்பம் தரும் இவ்வுலக வாழ்வு உன்னைப்பற்றாது, நாமே வலிய வந்து தடுத்தாண்டோம்," என்று அருள் மொழிதந்தார். அது கேட்ட நம்பியார் உடல் புளகிக்க, கைகள் தலைமீது ஏற, கண்ணில் மகிழ்ச்சியால் நீர் பெருக, "அடியேனை வலிய வந்து ஆட்கொண்டது எம்பிரான் செயலோ?" என்றார். அப்பொழுது விண்ணவர் பூமாரி பொழிந்தனர். மண்ணவர் மகிழ்ச்சி கொண்டனர்.

3083



எம்பிரானுர் அடியவரை நோக்கி, "நீ எம்மிடம் வன்மை பேசினமையால், உனக்கு வன்றெண்டன் என்னும் பேர் தந்தோம். எமக்கு மகிழ்ச்சி தருவது அடியார் பாடலே. ஆதலால், மண்ணில் நீ எமக்குத் தமிழ் மாலை பாடிச் சூட்டுக," என்றார். நம்பி யாரூரரும் இறைவர் முன்பு கரங் குவித்து நின்று, "மாலும் நான்முகனும் காணு மலரடி மாண்மை ஏழையேன் எங்ஙனமறிந்து பாடுகேன்? அடியேனை ஆட் கொள்ளற்காக அந்தணராகி வந்தென் முன் நின்றபோதுகூட உம்மையறியாத சிறுமையேன் யான்," என்று மொழிந்தனர். அருள் சுரந்தாண்ட ஐயரும், நம்பியாரைப் பார்த்து, "அப்பனே, முன்பு எம்மைப் பித்தனென்றா யன்றோ? அதனையே முதலாகக் கொண்டு பாடுக," என்று ஆணை தந்தார். அடியவரும், "பித்தா, பிறை சூடி," என்றையரை நோக்கி உலகம் உய்யப்பதிகம் பாடியருளினுர்.

அப்பெரியார் எம்பெருமானை நோக்கி, "அத்தரே, பல பொய்ம்மைகளை யுரைத்தேன். உமை நான் என்றும் மறவாமல் நினைக்கின்றேன். அடிகேள், உமக்கினி நான் அடிமையில்லை எனலாமே?" என்று பலவாறு துதித்து நின்றார். அதுகேட்ட திருவெண்ணெய் நல்லூர் அருட்டுறை மேவிய நம்பனுர், தமிழ் வல்ல தம் அடியவரை நோக்கி, "இவ்வுலகத்திலே நம்புகழைப் பாடுக," என்று மிகுந்த அன்போடும் கட்டளை யிட்டருளினுர்.

புத்தூரிலே சடங்கவி மறையோர் திருமகளார் நம்பியாரூரரால் மணக்கப் பெறாமையால், மண மழிந்த அன்று தொட்டுத் தம்பிரான் தோழரையே இடைவிடாது வாழ்த்தி வழிபட்டிருந்தார். அதனுல், கற்புக்

கரசியராகிய அவ்வம்மையாருக்கு முத்திப் பெரும்பேறு எளிதாயிற்று.

## 3. சுந்தரர் தில்லை மூதூரெய்தியது

நம்பியாரூரர், திருவெண்ணெய் நல்லூர் அருட்டுறை மேவிய ஐயர் தம்மை ஆட்கொண்டு அருளிய பின் திருநாவலூருக்குப் போய்த் திருக்கோவில் சென்று, தேவர் பிரானைப் பதிகம் பாடிப் பணிந்தார். பின் அங் கிருந்தும் பெண்ணையாற்றின் வடபாலுள்ள திருத்துறை யூர் சென்றடைந்து, "ஏழையேன் தவறான வழியில் சென்று தீவினை பெருக்கிப் பிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து அழுந்தாமல் தடுத்தாண்ட பெருமானே, அடியேனுக்குத் தவ நெறி தந்தருள வேண்டும்,'' என்று வேண்டிப் பதிகம் பாடி நின்றார். சிவ பெருமானும், "அன்பனே, நீ விரும்பியபடி உனக்குத் தவ நெறி தந் தோம்,'' என்றருளினார். அதுகேட்ட நம்பி யாரூரர் கீழ் வீழ்ந்தெழுந்து பல மலர்களால் பூசித்து, அங்கிருந்தும் புறப்பட்டுப் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு, பொன்னம்பலவர் திருவருட்கூத்தைக் கண்ணாரக் கண்டு கைதொழுதேத்தப் பேரவாக் கொண்டு, திருத்தில்லையை நோக்கி நடந்தார். வழியிலே பெண்ணையாற்றைக் கடந்து கரையேறி, மாலை நேரத்தில் திருவதிகை அருகே வந்தார். அத்திருவதிகை, உலக மெல்லாம் உய்யும் படி கற்றாணையே நற்றுணையாகக் கொண்டு கடலைக் கடந்து கரையேறிய திருநாவுக்கரசர் உழவாரப் படை கொண்டு பெருவிருப்போடும் கைத்தொண்டு செய் திருந்த பேரூராதலின், அதனை மிதித்தற் கஞ்சி, அத

னருகிலிருந்த சித்த வட மடத்தில் புகுந்தார். சோலை கள் சூழ்ந்த அத்திரு மடத்திலே தம்மோடு வந்த அடியார் எல்லாரும் துயில் கொள்ளத் தாமும்திருவதிகைப் பெருமானை வாழ்த்திக் கண் வளர்ந்தருளினர். அப்போது அதுகண்ட திருவதிகை வீரட்டானத் திறைவர், ஒரு முதிய அந்தணராகித் தம்மை யொருவரு மறியாத படி அப்பொழுது மடத்தினுள்ளே புகுந்து, நம்பியாரூரர் திருமுடிமேலே தம் அடியை வைத்துத் தூங்கு கின்றவர் போலப் படுத்திருந்தார். அதனை யுணர்ந்த நம்பியாரூரர் எழுந்து, "ஐயரே, உம்முடைய அடியை என் முடிமீது வைத்தீரே?" என்று வினவினர். அது கேட்ட ஐயர், "அப்பா, இவ்வாறு திசை தெரியாமல் என்காலை உன் தலைமேல் வைத்ததற்குக் காரணம் என் கிழப் பருவந்தான்," என்று அருளினர். பின்பு நம்பியாரூரர், "அப்படியா?" என்றிசைத்துத் தம்முடைய தலையை வேறொரு புறத்தில் வைத்துத் தூங்கினர். அவ்விடத்தும் அவருடைய திருமுடிமேல் தம்முடைய காலை நீட்ட, திருநாவலூரர், "இங்கே என்னை இப்படிப் பலகாலும் மிதித்த நீர் யாரையா?" என்று வினவினர். உடனே எம்பெருமான், "அறிந்திலையோ?" எனக் கூறி உருக் கரந்தார். அது கண்ட தமிழ் நாதர், "அந்தோ! அறிவில்லாமல் என்ன காரியஞ் செய்தேன்!" என்று தெளிந்து,

"தம்மானை யறியாத சாதியா ருளரே
 சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள்விகிர்தன்
கைம்மாவி னுரியானைக் கரிகாட்டி லாட
 லுடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்

தெம்மான்ற னடிக்கொண்டென் முடிமேல்வைத் திடுமென்னு
மாசையால் வாழ்கின்ற வறிவிலா நாயேன்
எம்மானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போ லியானே.''

என்று தொடங்கி, "இராவணனுடைய பத்துத் தலைகளையும் கிழுழுத்திய பெருமானை, எங்கள் எருதேறும் பெம்மானை, இசை ஞானி சிறுவன் நாவலூர்க்கோன், வன்தொண்டன், ஆரூரன், மதியாதுரைத்த அன்பனை, யாவர்க்கும் அறிவரிய அத்தனை, திருவதிகை மாநகருள் வாழ்பவனை இறைபோதும் இகழ்வன்போ லியானே,'' என்று தாம் செய்த குற்றத்தை நினைந்து நினைந்துருகி, எம்பெருமான் பெருங்கருணையை வியந்து திருப்பதிகம் பாடினார். பின் அத்திருவதிகைக்கு அருகிற் செல்லும் தென்திசைக் கங்கை எனும் திருக்கெடில நதியில் நீராடி, எம்பெருமான் கழல் பணிந்து, அங்கிருந்தும் புறப்பட்டு, அப்பேராற்றின் தென்கரைக்குப் போய், திருமாணிகுழி என்ற ஊரை அடைந்தார். அப்பேரூர், போர் வலி மிகுந்த மாவலி புரிந்த மங்கல வேள்வியில் வாமனனாய் மண்ணிரந்த செங்கணவன் வழிபட்டேத்தி உய்ந்த விடம். அவ்விடத்திலே பரம்பொருளைப் பணிந்து, அங்கிருந்தும் சென்று, திருத்தினை நகரை அடைந்தார். அங்குச் சிவபெருமான் திருமுன் பெய்தி, சிரசின்மேல் கரங் குவித்திறைஞ்சி, "மனனே, வேந்தராய் உலகாண் டறம்பல புரிந்தோரும் தேய்ந்திறந்து ஒரு பிடி சாம்பராதல் கண்டாய். பரிந்த சுற்றமும் வன்துணையும் பலருங் கண்டு அழுதெழ உயிர் உன் உடலை விட்டுப் பிரிந்து போம். இது நிச்சயம். ஒன்றலா உயிர்

வாழ்க்கையை நினைந்திட்டு, உடல் தளர்ந்து, அருமா நிதியம் தேடி என்றும் வாழலாம் எமக்கு எனப் பேசு மிதுவும் பொய் யெனவே நினை. உளமே, பிறப்பு இறப்பு என்னும் பெருங்கடல் இதனை நீந்தி உய்ந்திட வேண்டினால், சொல்வன் கேள்: நீ அஞ்சல் நெஞ்சமே, கால காலரை, கடவுளை, கடற்சூர் தடிந்திட்ட சேந்தர் தாதையை, விரும்பிச் செருந்தி செம்பொன் மலர் திருத் தினை நகருள் சிவக்கொழுந்தினைச் சென்றடை மனனே" என்று பிறவியைப் பழித்து நீங்கலா மென்று தம் மனத் தினைத் தெருட்டிச் சிவபிரான் திருவடியிணைகளை வண் தமிழ் பாடி வணங்கினர். பின்பு, அங்கிருந்தும் புறப் பட்டுத் திருத்தில்லை மருங்கணைந்தார்.

காண்பவருக்கு வீடருளும் பெருமை யுடையது அவ்வூர். அவ்வூருக்கு வெளியிலே உள்ள பூஞ்சோலை களையும் பன்மலர்ப் புனித நந்தவனங்களையும் பணிந்து சென்று நம்பியாரூரர் அகழியை எதிரே கண்டு மகிழ்ந்து அவ்வூரின் வடதிசை வாயிலின் முன் சென்றனர். அங்கே அன்போடு தம்மை யெதிர்கொண்ட அடியார்க ளோடும் கூடி, அழகாக விளங்குகின்ற மாளிகைகள் ஓங்குந் திருவீதியிலே புகுந்தார். பின்பு அவர் திருக் கோவிலைச் சூழ்ந்துள்ள தெருவிலே நுழைந்து, கோவி லின் வாயி லில் கீழ் வீழ்ந்து பணிந்தெழுந்து கோவிலுட் சென்று, பேரம்பலத்தை வலங் கொண்டு இறைஞ்சிய பின்னர், திருவணுக்கன் திருவாயிலடைந்து, திருச்சிற் றம்பலக் கூத்தரை மனமாரக் கண்ணாரக் கண்டு, திருக் களிற்றுப் படி மருங்கு சென்று தாழ்ந் தெழுந்தார்.

பின்னர் எம்பெருமானுடைய தனிப் பெருங்கூத்தைக் காண வந்த பேரின்ப வெள்ளத்து மாறிலா மகிழ்ச்சி கொண்டவராய், "பிறை சூடும் பெம்மானே, உம்முடைய திருநடனத்தைக் கும்பிடும்படிக்கான பெரும்பேறு பெற்று இம்மண்ணுலகத்தில் அடியேன் அடைந்த பிறவியே பிறவி! இதுவே எனக்கு மிக வாலிதாம்; இன்பமுமாம்," என்று சொல்லிக் கைகளும் தலைமீதேறக் கண்ணில் ஆனந்த வெள்ளம் மெய் யெல்லாம் சொரிய, வேத நாயகரைப் பதிகம் பாடிப் பணிந்தார். அப்பொழுது பொன்னம்பலவர் அவரை நோக்கி, "நம்பால் திருவாரூரில் வருக," என வானில் ஒலியாய்க் கூறியருளலும், அடியவர் பெருமான் பணிந்து, அவ்வொலிப் பொருளுணர்ந்து, அம்பல வாணரை வலங் கொண்டு வணங்கி, விடை கொண்டு, வெளிப் போந்து, அவ்வூரின் தென்திசை வாயிலைக் கடந்து, விரைந்து போய்க் கொள்ளிடமாகிய பேராற்றையும் கடந்தார்.

## 4. திருவாரூரடைந்ததும் தம்பிரான் தோழரானதும்

அவ்வாறு விரைந்து செல்லுகின்ற நம்பியாரூரர் உலகமெல்லாம் உய்யும்படிக்காக எம்பெருமாட்டியாரால் ஞானப்பால் ஊட்டப் பெற்ற திருஞான சம்பந்தப் பெருமான் பிறந்தருளும் பெரும்பேறு பெற்றதாகிய சீர்காழியை அணுகினர். 'பிள்ளையார் திரு அவதாரம் செய்தருளிய பெருமை பெற்ற இவ்வூரினுள் நான் மிதியேன்,' என்று சொல்லி, அவ்வூரின் வெளியிலே வல

மாக வந்தார். வலம் வரும் தம் அடியாரின் முன்னே எம்பெருமான் காட்சி கொடுத்தருளினார். அது கண்ட வன்றொண்டர், மிகுந்த பேரன்போடும் கடவுளை வணங்கி நின்று, "சாதலும் பிறத்தலும் தவிர்த்து எனை யாண்டு எனக்குத் தண்ணருள் தந்த என் தலைவரை, வேறொரு துணையும் காணாது, சுற்றிய சுற்றமும் துணை யென்று கருதாது, வருந்த லுற்றேன்; மெய்த்துணை யென்று கண்டு நான் தொழும் எய்ப்பனில் வைப்பை, திருத்தினை நகருறை சேந்தனப்பர் என் செய்வினை யறுத்திடும் செம்பொன்னை, கடல் கொளமிதந்த கழுமல வள நகரிலே கண்டு கொண்டேனே. ஏழையேன் எம் பெருமானை விடாது பற்றினேன். அதனால், அவரை மறவா மனம்பெற்றேன். மற்றும், பிழைத் தொருகாலி னிப் போய்ப் பிறவாமையாகிய பெருமையும்பெற்றேன். யான் பெற்றதார் பெறுகிற்பார்? விதியாலே பலநாளும் பசுபதி வாழும் பதி வினவி மறவா மனத்தோடும் உனைக் காண முயல்பவர் பின் சென்று முயல்வலை யானைபடு மென மொழிந்தவர் வழிமுழு தெண்ணி என்னிடைப் பொருளைக் கயிலையினில் வீற்றிருந்தபடி இக்கழுமல வளநகர்க் கண்டு கொண்டேனே; அவா திருவடி யிரண் டும் அப்பெருமானை நினைந்திட்டு அழும் மலர்க் கண் ணிணை யுடைய அடியவர்க்கே யல்லாமல் அறிவரிது," என்று பதிகம்பாடிப் பணிந்தார். சிவபெருமான் மறைந் தருள, நம்பியாரூரர் அங்கிருந்தும் திருக்கோலக்காவை அடைந்தார்.

அங்கே கோவிலுட் சென்று சத்தபுரீசரையும் ஓசை கொடுத்த நாயகி அம்மையாரையும் வணங்கிப் பதிகம்

பாடிப் புகழ்ந்து மகிழ்ந்தனர். பின்பு அங்கிருந்தும் புறப்பட்டுத் திருப்புன்கூர் சென்று, இறைவரைத் தமிழ் மாலை பாடி வணங்கி, மற்றும் எம்பெருமான் மகிழ்ந்துறையும் பல இடங்களையும் வணங்கிக்கொண்டு, காவிரியாற்றை யடைந்து, அதில் நீராடி, தம்பிரான் மயிலாடு துறையிற் சென்று, திருமாயூர நாதரைப் பணிந்து, பின் திருவம்பர் மாகாளம் சென்று, அங்கிருந்தும் திருப்புகலூரை யடைந்து, தொழுது, நம்பியாரூரர் திருவாரூர் சென்றணைந்தார்.

அப்பொழுது வன்மீக நாதர் அவ்வூராருக்கு, "நாம் அழைக்க நம்மிடத்தில் மிருந்த பேரன்போடும் நம்பியாரூரன் வாரா நின்றான். அவனை நீவிர் மகிழ்ந்து எதிர் கொள்வீர்," என்றருள் செய்தார். அது கேட்ட அவ்வூராரும், "எம்பிரான் திருவருள் இதுவானால், இவ்வாறே செய்வோம்," என்று யாவரும் கூடி, எதிர்கொண்டழைக்க முன் வந்தனர். அவ்வூரெங்கணும் மாளிகைகளிலும் மண்டபங்களிலும் பெருங்கொடிகள் நாட்டப்பட்டன. நெடுந்தோரணங்கள் கட்டப்பட்டன. கமுகாலும் கதலியாலும் பந்தல்கள் அணி செய்யப் பெற்றன. உயர் வாயில் தோறும் மணி விளக்குகள் ஏற்றப்பெற்றன. தெருக்களில் எல்லாம் பூ மாலைகளால் குளிர்ந்த பந்தல்கள் போடப்பட்டன. புழுதி யடங்கும்படி குளிர்ந்த நீர் தெளிக்கப்பட்டது. அப்போது அத்திருவாரூர் பொன் நகரோவெனக் கண்டோர் வியக்கப் பொலிவெய்தியது. இவ்வாறு அணி பெறச்செய்து, அவ்வூரார் அவ்வூருக்கு வெளியே வந்து பல்லிய முழங்க நம்பியாரூரரை எதிர்கொண்டு நின்றனர்.

வன்மீக நாதர்மேல் பதிந்த பேரன்போடும் வன்றொண் டர் வந்தெதிர்ந்தார். அவரைக் கண்டவுடனே அவ்வூ ரவர் படிமிசை முடிபட அவரடி பணிந்தனர். அவரை நோக்கி நம்பியாரூரர், அஞ்சலி கூப்பி வந்து, சிந்தை களிப்புற வீதியூடு செல்வார், அத்திருத்தொண்டர் தம்மை நோக்கி, "வானவர் தானவர்க்கெல்லாம் அரை யர், அல்லல் பெரிதும் அறுப்பார், புற்றெடுத்திட்டிடங் கொண்ட பொருளார், பண்டு அங்கு இலங்கையர் கோனைப்பருவரைக் கீழடர்த்திட்ட அண்டர் இருப்ப தும் ஆரூர். அவர் எம்மையும் ஆள்வரோ? கேளீர்! செல்வம் பெரிதும் உகப்பன்; அலந்தார்கள் ஒருவருக் கும் உதவியே னல்லேன்; உற்றவருக்கும் துணை யல் லேன்; கல்லில் வலிய மனத்தேன்; ஆசை பல அறுக்க கில்லேன். ஆரையும் இகழ்ந்துரை செய்வேன்; நமர் பிறர் என்பதறியேன்; நான் கண்டதே கண்டு வாழ் வேன்; குமரனும், திருமாலும், நான்முகனும், ஏனைத் தேவரும் கூடி வணங்கும் எந்தையா ரிருப்பதும் ஆரூர்; அவர் எம்மையும் ஆள்வரோ? கேளீர்!" என்று சிந்தை செய்து வினவி, சந்த இசைப் பதிகங்கள் பாடித் தம் பெருமான் பூங்கோயிலின் திருவாயிலைச் சார்ந்தார். சார்ந்தவர், வானுற ஓங்கிய வாயிலை ஐந்துறுப்பும் மண் ணுற வணங்கி, உட்புகுந்து, தேவாசிரிய மண்டபத் தைத்தொழுது, உடலையும் உயிரையும் உருக்கும்பேரன் பால், செங்கையை உச்சியிற் குவித்து, மூலட்டானத் தைச் சூழ்ந்திருக்கும் திருமாளிகை வாயிலினுட் புகுந்து, பங்கயத்தாள் பணிந்தேத்த அவளுக்கருள் புரிந்த அண்ணலை மண்மிசை வீழ்ந்திறைஞ்சி, உடம்

பாற் பெறுதற்குரிய நன்மை முழுதும் பெற்றார். பெற்றவர், வண்தமிழ் மாலை பாடி நின்றார். அப்போது புற்றிடங்கொள் மன்னவனு ரருளாலே, விண்ணி லொரு வாக்கு, "உனக்கு நம்மைத் தோழமையாகத் தந்தனம்; நாம் முன்பு தடுத்தாட் கொண்ட போது நீ கொண்ட மணக்கோலம் என்றும் புனைந்து நின் வேட்கை தீர மண் மேல் விளையாடுவாயாக," என்று ஆரூரர் கேட்க எழுந்தது. அது கேட்ட வன்றொண்டர், "ஏழையேனை ஆட்கொள்ள வந்த மறையவரே, ஆரூரமர்ந்த அருமணியே, மங்கை பங்கரே, நாயினேனையும் ஒரு பொருளாகக் கொண்டது நும் பெருங்கருணையன்றே!" என்று பல முறை பணிந்து, மன மகிழ்ந்து சென்று, வீதி விடங்கப் பெருமான் முன்பு தொழுது துதித்துப் பெருவாழ்வடைந்து, திருமாளிகையை வலம் செய்து, வெளிப் போந்தார். அன்று முதல் அடியார்க ளெல்லாரும் அவரைத் தம்பிரான்றோழர் என்றார்கள். தம்பிரான் றோழரும் அணி பல புனைந்து, சாந்தம் பூசி, பனி மலர் மாலை யணிந்து, திருமணக் கோலத்தோடும் சீரிய தவ வேந்தரேபோல எம்பெருமானைப் பாடி மகிழ்ந்திருந்தார்.

## 5. பரவையார் திருமணம்

இதற்கு முன், திருக்கயிலையிலே எம்பிராட்டியாருக்குச் சேடிமாருள் ஒருவராகிய கமலினியார், அவ்வூரில் உருத்திர கணிகைமாராம் பதியிலார் குலத்தில் தோன்றி, பரவையார் என்னும் பெயரோடும் வளர்வாராயினர். அவ்வம்மையார் பேரழகுடையார்; சிவபெருமான் திருவடிக்கே பேரன்புடையார்; நாடோறும் தம்

பெருமான் கோவில் சென்று வழிபடுவதே ஒழுக்காறுக் கொண்டவர். சேடிமார் பலர் தம்மைச் சூழ ஒரு நாள் பூங்கோவி லமர்ந்தார்தம் புனை கழல் வணங்கப் போதும் போதில், தம்பிரான்றோழரும் தலைவரைத் தொழுது செல்வார், அவ்வம்மையாரைக் கண்டார். கண்டவர், "ஈதுபொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ? அற் புதமோ? சிவனருளோ?" என்றதிசயித்து நின்றார். அவ்வாறு தம்முன் பரிசனங்கள் சூழ நின்ற ஆளுடை நம்பியாரை அண்டர் பிரான் திருவருளால் அயலறியார் மனம்விரும்ப, பண்டை விதி கடை கூட்டப் பரவையா ரும் கண்டார். உடனே அவ்வம்மையார் நம்பியாரூர ரிடம் பேரன்புடையராய், "இவர் என் மனம் திரித் தார். எம்பெருமானுடைய மெய்யருள் பெற்றுடைய வரோ?" என நினைந்து, சற்று நின்று, பின் சிவபெரு மான் திருவருளால் அவர் திருவடி தொழும் அன்பே கைக்கொண்டு, பொற்கோவில் போய்ப் புகுந்தார். அது கண்ட வன்றொண்டர், 'அப்பெண் யார்?' என வினவ, முன் நின்றார், 'அவர் பரவையார்,' என, அவ்வம்மையா ரைப்பற்றிய விவரங்களை யெல்லாம் இனி தெடுத்துரைத் தனர். அது கேட்ட தம்பிரான்றோழர், அவ்வம்மை யாரை மணக்க வேண்டு மென்ற பேரவாவோடும், "என் எண்ணத்தை முட்டின்றி முடித்துத் தரும்படி வேண்டு தற்கு எனையாட் கொண்டருளியவர்பால் நண்ணுவேன்," என உண்மகிழ்ந்து தேவர் பிரான் கோவில் புகுந்தார்.

அப்போது பரவையார், தம்பிரான் கழல் பணிந்து தம் வீடு நோக்கிப் புறப்பட்டார். ஆரூரர், தலைவனார் முன் தம் குறை முடிப்பான் வேண்டி நின்றார். பின்பு

அவர் தாம் மணக்க விரும்பிய பரவையாரைத் தேடி ஆயிரங் கால்களாலாகிய தேவாசிரிய மண்டபத்தை யடைந்தார். அப்போது ஞாயிறு மேல் கடல் புகுந்தன ளுக, மாலைப்போது வந்திறுத்தது.

பின்பு இருளும் சூழ்ந்தது. சிறிது போதானபின் வெண்ணிலவும் உதித்தது. சுந்தரனர் தம்மை யாட் கொண்ட ஐயர்தம் திருவருளை நினைத்திருந்தார்.

பரவையாரும், "ஆரூரமர்ந்த பெம்மானே, அடி யேன் அயராமே நம்பியாரூரரைக் கணவராகத் தந்தரு ளும்," என வேண்டியிருந்தார். இவ்வாறு தம் திரு வருள் விரும்பிப் பணிந்திருக்கும் வன்றொண்டரையும், பரவையாரையும் படிமேல் வர முன்பு ஆணை தந்தருளிய தழல் நிறக் கடவுள், அவ்வூர் அடியவர் யாவருக்கும், "நீவிர் இவன் மன்றலைச் செய்யும்," என்றுணை தந்தார். தந்தவர், புகழ் மன்னும் நாவலர்கோன் மன மகிழ, "உனக்குப் பரவையைத் தந்தோம்; இவ்விவரமனைத்தும் நம் அடியார் அறியும்படியே உரை செய்தனம்," என்று ரைத்து, பரவையாருக்கும், "ஆரூரன்பால் மணம் அண் ணிது," எனப் புகன்றருளினர்.

பொழுது புலர்ந்தது; கதிரவன் எழுந்தான். அப் போது அடியார் பலரும் கூடி, வேண்டுவோர் வேண்டு வதே ஈந்தருளும் அருட்கடலாகிய புற்றிடங் கொண் டார் பேரருளைத்தொழுது, திருநாவலர்கோனும் பரவை யம்மையாரும் மன மகிழ, முறைப்படி வதுவை நிகழச் செய்தார். தம்பிரான்றோழர் தம்மை யாளுடைய பிரான் தளிரடியே சிந்தித்துத் திருப்பதிகம் பல பாடிப் பரவை யார் இல்லத்தே இனிது வாழ்ந்திருந்தார்.

## 6. ஆளுடைய பிள்ளையார் திருத்தொண்டத் தொகை பாடியது

ஒரு நாள் தம்பிரான்றோழர் தம்மைப் பல பட அழகுறச் செய்துகொண்டு, தம் பெருமானைத் தொழுவதற்காகப் பூங்கோவிலை நோக்கிப் புறப்பட்டுத் தெருவிலே வந்தார். பலர் அவருடைய பெருமைகளைப் பல வாறு புகழ்ந்து சூழ்ந்து வந்தனர். பல வரிசைகளோடும் அவர் கோவிலில் நுழைந்தார். கோவிலிலிருந்த தேவாசிரிய மண்டபத்திலே அடியார் அளவிலார் கூடியிருக்கக் கண்டு, அவரைத்தொழுது, அவர்களோடு சேராமல் ஒரு வாறு ஒதுங்கிச் சென்றார். அத்தேவாசிரிய மண்டபத்திலே கூடியிருந்த அடியாருள் ஒருவர், விறன்மிண்ட நாயனார். அவர் மலைநாட்டைச்சேர்ந்த செங்குன்றூர் என்னும் பதியிலே, வேளாண் குலத்திலே பிறந்து, சிவனார் திருவடிக்கே அன்பு பூண்டு விளங்கி வரும் நாளையிலே, பதிகள் தோறும் சென்று, பரமர் தாளை வழிபடுகிறதற்காக எழுந்த பேரன்புடன் மலை நாடு கடந்து, சோழவள நாடு புகுந்தார். பல பதிகளும் சென்று பணிந்து வரும் அப்பெரியார், திருவாரூரையடைந்து, தம் பெருமான் கழல் போற்றித் தேவாசிரிய மண்டபத்தில் இருந்தனர். அவர் அடியார்களைச் சிவபெருமா னெனவே வழிபடும் பேரன்புடைய ராதலால், நம் வன்றொண்டர் அடியார்களை வணங்காது சென்றமையைக் கண்டு, "சிவனார் அடியார் திருக்கூட்டம் பேணுதேகும் நம்பியாரூரன், அவ்வடியார்களுக்குப்புறகு. அவனை வலிய ஆட்கொண்ட பூணு ரரவம் புனைந்தார்க்கும் புறகு," என்

றுரைத்தார். அப்பெரியார் சொற்கேட்டுத் தம்பிரான் றோழர், தாம் செய்த தவறு கருதி, உளம் நொந்து, பின், "இவர்க்கு யான் அடியேனாகப் பண்ணும் நாள் எந் நாள்?" என்று பரமர் தாள் பரவிக் கூப்பிய கையினராய் உட்சென்றார். அப்பொழுது சிவபெருமான் அவருக்குக் காட்சி கொடுத்தருளினார். நம்பியாரூரர் பெருமான் திருவடிகளைப் பலவாறு புகழ்ந்து நின்றார். அது கண்டு கறைமிடற்றண்ணல், தம் அன்பர் வேண்டுகைக் கிரங்கி, அவரை நோக்கி, "எம்மடியார்கள் பெருமையில் தம்மைத்தாமே யொப்பார்கள்; எம்மைப் பேணலால் எம் திருவருள் பெற்றார்கள். அவர்கள் அன்பினால் இன்பம் ஆர்வார்கள். அவர்களை நீ அடைவாயாக," என்றருளிச் செய்தார். அப்போது நம்பியாரூரர், "நான் இன்று நன்னெறி யடைந்தேன்," என்று பணிந்தார். சிவபெருமானார், "நீ அவர்களைப் பணிந்து, குற்ற மில்லாத வாய்மையாலே சொன்மாலை பாடு," என்றாணை தந்தார். தம்மை யாளுடைய நாதர் இவ்வாறு அருளிச்செய்யச் சுந்தரனார் அவரை நோக்கி, "எம்பெருமானே, அடியார்களுடைய பெருமையை இன்ன தன்மையது என்று அறிந்து எவ்வாறு போற்றுகேன்? யானோ, சிறியேன். ஆதலின், பா மாலை பாடும் பரிசு எனக்கு அருள் செய்யும்," என்று வேண்டினார். அது கேட்ட பெருமான், உலகெல்லாம் அல்லல் தீர்ந்து உய்யும்படிக்காகத் தமது திருவாக்கால், "தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கு மடியேன்," என்று அடியெடுத்துத் தந்தருளி மறைந்தார். உடனே, நாவலர் பெருமான் அடியவர்பாற் சார்வதற்கு நினைந்து புறப்பட்டுத் திருக்கூட்டத்தைத்

தூரத்தே பல முறையன்பால் பணிந்தெழுந்து, அருகே சென்று நின்று, அழியா வீரத்தையுடைய அவ்வடியார்க ளெல்லார்க்கும் தனித்தனி அடியேன் என்று அன் போடு திருத்தொண்டத் தொகை எனு நூலைப் பாடிப் பணிந்து, அடியார்க ளெல்லாரும் பேருவகை யெய்த அத்திருக்கூட்டத்தின் நடுவணைந்தார். அது கண்ட விறன்மிண்ட நாயனர், "இவ்வன்றொண்டருடையமனம் அடியாரிடத்திலே பதிந்திருக்கின்றது," என்றருளிச் செய்து, மிக மகிழ்ந்தார்.

## 7. குண்டையூர்க் கிழவர்

இவ்வாறு திருத்தொண்டத் தொகை அருளிச்செய்து, நம்பியாரூரர் அத்திருவாரூரில் எழுந்தருளியிருந்தார். அவ்வூர்க்கருகே குண்டையூர் என்பது ஒரு சிற்றூர். அதில் ஒரு கிழவ ரிருந்தார். அக்குண்டையூர்க் கிழவர் தாளாண்மை உழவுத்தொழிலால் வளரும் வளத்தில் தலை சிறந்த வேளாளர். அப்பெரியார், நம் தம்பிரான் தோழரிடத்துப் பேரன்பு பூண்டு, ஒவ்வொரு நாளும் அவர் தாளை வணங்கி ஒழுகுவா ரானர். அவர் செந் நெல்லும், செழும்பருப்பும், இனிய காய் கறிகளும் நம் வன்றொண்டருக்கு அமுதாகும்படி நாடோறும் வழு வாமல் பன்னெடுநாள் பரவையார் மாளிகைக்கு அனுப்பி வந்தார். ஒரு போது வானம் வழங்காமையால், மா நிலத்து வளம் சுருங்கிற்று. அதனல், ஒரு நாள் நெல் அனுப்ப இயலாது, அக்கிழவர் மனம் மயங்கி வருந் தினர். அவர் தாம் உண்ணாராகிப் பெருந்துய ரெய்தி, "தம்பிரான்றோழர் எழுந்தருளி யிருக்கும்

திருவாரூர் மாளிகைக்கு இன்று நெல் அனுப்பக் குறையாகின்றதே!" என நினைந்து, அன்றிரவு துயில் கொண்டார். அப்போது அடியார்க் கெளியராகிய சிவ பெருமான், அவர் முன் தோன்றியருளி, "நம் ஆரூர னுக்கு அனுப்புவதற்காக உன்னிடம் நெல்லைத் தந் தோம்," என்று கூறி மறைந்து, நிதிக் கோமானை ஏவ, அவ்வூர் முழுதும் நெல் மலைபோலக் குவிந்து விளங்கி யது. அன்றிரவு புலரும்போது நம் கிழவனார் துயி லுணர்ந்தெழுந்து, நெல் மலை கண்டதிசயித்துத் தம் பெருமானையும் அவர்தம் தோழரையும் தொழுது நின் றார். பின்பு, "இந்நெல் மலையை யாவரால் எடுக்கலாகும்? ஆதலின், இச்செயலை நாவலூர் மன்னருக்குச் சொல்ல யான் போவேன்," என நடந்தார். இச்செய்தியைச் சிவ பெருமான் நம்பியாரூரருக்குச் சொல்லி, அவரை யெதிர் கொள்ள ஏவினார். அதனால், நாவலூரர் எதிர் சென்றார். தம் எதிரே வரும் தொண்டனாரைக் கண்டு, குண்டை யூர்க் கிழவர் அவர் திருவடி தொழுது, வீழ்ந்தெழுந்து நின்று, "அடியேன் பண்டெலாம் செய்த பணி இன்று முட்டத் தம் பெருமானார் நெல்மலை யளித்தார். அது மனிதரால் எடுக்கும் தன்மைய தன்று. அப்பெருமானார் அந்நெல் மலை தந்ததன் நோக்கம், இப்பணியை யான் இனிச் செய்யாது தடுத்தற்குப் போலும்!" என மொழிந் தார். அது கேட்ட நம்பியாரூரர், "உமக்கு எம்பெரு மானே நெல்லளித்தார்," என்று இன்சொற் கூறித் தாமும் குண்டையூருக்கு வந்து சேர்ந்தார். அங்கே குவிந்து கிடந்த நெல் மலையை நம்பியாரூரர் கண்டு, மிகவும் அதிசயித்து, "இம்மலையை நம் பரவை இல்

லத்துக்கு எடுத்துப் போக இது தந்தவரே ஆளும் தரி லன்றி, நம்மால் எடுத்துச் செல்ல ஒண்ணாது," என்று துணிந்து, அவ்வூருக்கருகிலிருந்த திருக்கோளிலி என்ற ஊரை அடைந்து, கோவிலுக்குப் போய்,

"நீளநினைந்தடியேன் உமைநித்தலும் கைதொழுவேன்
வாளன கண்மடவாள் அவள்வாடி வருந்தாமே
கோளிலி எம்பெருமான் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
ஆளிலை யெம்பெருமான் அவைஅட்டித் தரப்பணியே."

எம்பெருமானே உம்முடைய உடலில் பாதியை உமை யம்மையாருக்குத் தந்தீர். உம்முடைய சடையிலே கங் கைத் தாயாரை வைத்திருக்கின்றீர். ஆகையினாலே, நீரும் பெண்களுடைய வருத்தத்தை அறிவீரல்லவா? பரவை பசி வருத்தத்தால் வாடுகின்றாள். அதனை நீரும் அறிதிரன்றோ? ஆதலின், இரக்கமதாய் அடியேனுக்கு அவை இட்டுத் தரப் பணியீர்," என்று பேரன்போடும் பணிந்து பாடினார். அப்பொழுது, "இன்றிரவில் பரவை மனையளவே யன்றித் திருவாரூர் நிறைய நெல்லை நம் பூதங்கள் குவிக்கும்,"என விண்ணில் ஓர் ஒலி தோன் றிற்று. அவ்வொலியைச் செவி யேற்ற நம்பியாரூரர், தரைமிசை விழுந்தெழுந்து, திருவருளைப் போற்றிப் பிறபதிகளையும் தொழுதுபோய்த் திருவாரூரடைந்தார். அங்கே பூங்கோவிலிலே புகுந்து, தம்மைத் தடுத்தாண்ட பெருமானைப் பணிந்து,வெளி வந்து, பரவையார் வாழும் சிறந்த மாளிகைக்குச் சென்றார்.

நிகழ்ந்த செய்திகளைப் பரவையார் மன மகிழும்படி கூறி, அவர் இனிதிருப்ப, அற்றை நாள் இரவில், சிவ பெருமான் ஏவலினாலே பல பூதங்கள் எழுந்து,குண்டை

யூரிலிருந்த நெல் மலையைக் கொண்டு வந்து பரவையார் மாளிகையை நிறைவித்ததோடு திருவாரூர் அடங்கலும் நெல் மலையாக்கிக் கண்டவர்க ளெல்லோரும் அற்புத மெய்தும் காட்சிபெற அமைத்தன. அதி காலையில் திரு வாரூர் வாழ்வார் யாவரும் அது கண்டு அதிசயித்து, "இந்நெல்மலை இவ்வுலகு வாழ வரும் நம்பியார் பரவை யார்க்குக் கொடுத்ததுபோலும்" என்று பேசினர். வெளி யேறிச் சென்றார் பலர், போவதற்குரிய வழிகளெல்லாம் தடைப்பட்டிருப்பதைக் கண்டு, மீண்டும் வீடு புகுந்து, "இத்தனை நெல்லையும் நம் பரவையார் எங்கே குவித்து வைப்பாரோ!" என்பார். புகழ் மிக்க பரவையாரோ, வன்றொண்டர் தமக்களித்த நெற்கண்டு மகிழ் சிறந்து, "இவ்வூரார் யாவரும் தம்தம் எல்லைக்குட்படும் நெற்குன் றெல்லாம் வாரி வாரித் தத்தம் மாளிகையிற் பெய்து கொள்க," என முரசறைவித்தார். அம்முரசொலி கேட்டா ரனைவரும், அவ்வாறே தத்தம் வீட்டு முன் னிருந்த நெல்லை யெல்லாம் வாரி வீட்டினுட் சேர்த்தனர். அதை யறிந்து பரவையார் மிக மகிழ்ந்து, வன்றொண் டரது திருவடி பணிந்தார். நம்பியாரூரரும் நாடோ றும் புற்றிடங் கொண்ட புராதனரைப் பணிந்திருந்தார்.

## 8. கோட்புலி நாயனர்

அக்காலத்து ஒரு நாள் திருநாட்டியத்தான் குடியில் வாழ்ந்திருந்த பெரியாராகிய கோட்புலி நாயனர் திருவாரூருக்கு வந்து, தம்பிரான்றோழரைப் பணிந்து, அவரைத் தம் ஊருக்கு எழுந்தருளும்படி வணங்கி நின்றார். வன்றொண்டர் அதற்கிசைந்தருளினர். சேண

3083

பதியாராகிய கோட்புலியார் மிக மகிழ்ந்து வணங்கித் தம் ஊரை யடைந்தார். திருநாவலூரர் பூங்கோயில் புக்குப் பெருமான் கழல் வணங்கித் திருவாரூரைவிட்டுப் புறப்பட்டு, வழியில் பல பதிகளைப் பணிந்துகொண்டு, திருநாட்டியத்தான்குடியை யடைந்தார். அதனை யறிந்த கோட்புலியார் தம் ஊரைப் பல படஅழகு பெறச் செய்து, எதிர் கொண்டு வந்து, நாவலர்கோன் தாள் வணங்கி, அழைத்துக்கொண்டு தம்முடைய சிறந்த மாளிகையிற் புகுந்தார்; அங்கே தம்பிரான் தோழரை மணிகள் பதித்த பொற்றவிசில் எழுந்தருளச் செய்து, அடி மலர் விளக்கிப் பன்மலர் தூவிப் பணிந்தார்.

பின்பு அச்சேனாபதியார் தம் மனையில் அவருக்கு இன்னமுதளித்து இறைஞ்சி, தாம் அருமையாகப் பெற்றெடுத்த பெண் மணிகளாகிய சிங்கடியாரையும் வனப்பகையாரையும் கொணர்ந்து பணிவித்து, "அடியேன் பெற்ற இம்மக்களை அடிமையாகக் கொண்டருள் செய்யவேண்டும்," என வேண்டிக் கொண்டார். அது கேட்ட நம்பியாரூரர், "இப்பெண் மணிகள் எனக்குச் சிறந்த மக்கள்," என்று அவர்களைத் தம் மக்களாக ஏற்றுக்கொண்டார். அவர் அக்குழந்தைகளைத் தம்மடிமீதிருத்தி, உச்சி மோந்து, அவர்களுக்கு விருப்பமான பொருள்களையும் கொடுத்தருளி, கோவிலுக்குச் சென்றார். செல்லும்போது தூரத்தே தோன்றிய கோபுரத்தை வணங்கி, உச்சிமேற் குவித்த கரத்தோடும் கோவிலுள்ளே புகுந்து பணிந்து, "பூண் நாணாவதோ ரரவங் கண்டஞ்சேன்; புறங்காட்டாடல் கண்டிகழேன்; காணீராகிலும் காண்பன்; உம்மடிபாடுதலொழி

யேன். அஞ்சாதே யுமக்காட்செய வல்லேன்; மணியே, மாணிக்க வண்ணரே, நான் உம்மையல்லா லொரு வரை நச்சேன். உட்மைக் கருதா தார்தம்மைக் கருதேன்; ஓட்டீராகிலும், ஓட்டுவன் ; உம்மைப் பாடியும் நாடியும் அறிய நட்டே னுதலால், நான் மறக்ககில்லேன். உமக் கடியேன் ஆட்பட்டது நைவானன்று; கலியேன் மானுட வாழ்க்கை ஒன்ருகக் கருதிடில் கண்கணீர் பில்கும். தொண்டரடித் தொழுவார் தொழக் கண்டு என் வினை போகத் தொழுதேன்," என்று கூறி,

"கூடா மன்னரைக் கூட்டத்து வென்ற
கொடிறன் கோட்புலி சென்னி
நாடார் தொல்புகழ் நாட்டியத் தான்குடி
நம்பியை நாளும் மறவாச்
சேடார் பூங்குழற் சிங்கடி யப்பன்
திருவா ரூர னுரைத்த
பாடீ ராகிலும் பாடுமின் தொண்டீர் !
பாடநும் பாவம் பற்றறுமே."

என்று பதிகம் பாடிப் பணிந்தார். இவ்வாறு திருக்காப் பிலே கோட்புலி நாயனுரைச் சிறப்பித்ததோடு, சிங்கடியா ரைப் பிறப்பித்தெடுத்த தந்தையாராகத் தம்மை நினைந்த பெற்றியினுல், சிங்கடியப்பன் என்று தம்மை வைத் தருளினுர்.

பின்பு, அங்கிருந்தும் புறப்பட்டுத் திருவலிவலம் அடைந்து, கோவிலினுட் சென்று, "பல்லடியார் பணிக் குப் பரிவாரை, பாடி யாடும் பத்தருக்கன்புடையாரை, நல்லடியார் மனத்து எய்ப்பினில் வைப்பை, நானுறு குறையறிந்தருள் புரிவாரை, நல்லிசை ஞான சம்பதரும்

நாவினுக்கரசரும் பாடிய நற்றமிழ் மாலை சொல்லியவே சொல்லி ஏத்துகப்பாரை, எவ்வெவர், தேவர், இருடிகள் மன்னவர் எண்ணிறந்தார்கள் எங்கும் நின்றேத்த, அவ்வவர் வேண்டியதே அருள்செய்து அடைந்தவர்க்கே இடமாகி நின்றாரை வலிவலந்தனில் வந்து கண்டேனே. 'எம்பெருமான் அருளீர்,' என்ற பின்னை என் ஆவிவவ்வி மனங்கலந்தாரை, சான்றுகாட்டுவதற்கரியரை, தன்னிலா மனத்தார்க்கெளியவர்தம்மை வலிவலந்தன்னில் வந்து கண்டேனே,'' என்று பதிகம் பாடிப் பணிந்து, அங் கிருந்தும் புறப்பட்டுத் திருவாரூர் சென்று, பூங்கோவில் பணிந்திருந்தார். அங்கிருந்துகொண்டு அவ்வூருக்கருகே யுள்ள பல கோவில்களுக்கும் போய் வணங்கி, மீண்டு இன்பமுற்றிருந்தார்.

## 9. செங்கல் பொன் கல்லானது

அப்பொழுது பங்குனி உத்திரத் திருநாள் வந்தது. அத்திருவிழாவிற்கு வருபவர்க்கெல்லாம் வேண்டுவன கொடுத்து இன்பூட்டுவது பரவையாரியல்பு. அதனால், அக்கொடைக்கு வேண்டும் பொன் கொண்டு வரு தற்காக நினைந்து, நம்பியாரூரர் திருப்புகலூரை யடைந் தார். அங்கே கோவிலினுட் சென்று, பெருமான் அடி போற்றிப் பதிகம் பாடித் தமக்குப் பொன் தர வேண்டி நின்றார். சிறிது பொழுது கும்பிட்டு நின்று, ஒன்றும் பெறாது புறம் போந்து, அயல் மடத்திற்குப் போகாமல், கோவில் முன்றிலின் ஒரு புடை அன்பருட னிருந்தார். அப்பொழுது கடவுளருளால் அவருக்குத் துயில் வந்தெய்தியது. அதனால், தம்பிரான்றோழர்,

கோவிற் றிருப்பணிக்காகக் குவித்திருந்த பல சுடுமட் பலகை கொணர்வித்து, உயரம் பண்ணி, அதன்மேல் வெண்பட்டு விரித்துப் பள்ளி மேவினர். சுற்று மிருந்த தொண்டர்களும் துயின்றார்கள். அவ்வளவில் நம்பியா ரூரர் விழித்தெழுந்து பார்க்கத் தமது தலையணையாய செங்கற்கள் செம்பொற் கல்லாயினமை கண்டார். கண்டவர், அளவிலடங்காப் பேரன்பு கொண்டு, தலை மேல் கரங்குவித்து வணங்கி, ஒப்பிலா இன்பத்தை இம் மையிலேயே தந்தருள்பவராகிய பெருமானை நோக்கி,

"தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினும்
சார்வி லும்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடா தேஎந்தை
புக லூர் பாடுமின் புலவீர்காள் !
இம்மை யேதரும் சோறுங் கூறையும்
ஏத்த லாம்இடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோக மாள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே."

வலிமையில்லாதவனை வீமனென்றும், விசயனென்றும், கொடுக்கிலாதானைப் பாரி யென்றும், நரைத்து உடல் தளர்ந்து நடுங்கி நிற்கும் கிழவனை மலைபோலப் பருத்த தோளுடையனென்றும், மிகக் கொடிய பாவியைச் சாது என்றும், இழி குலத்தவனை உயர் குலத்தவனென்றும், கற்றிலாதானைக் கற்று நல்லனென்றும், எள் விழுந்திடம் பார்க்குமாகிலும், ஈக்கும் ஈகிலனாகிலும் அவனை எங்கள் வள்ளல் என்றும் புகழ்ந்தாலும் கொடுப்பாரில்லை. புல வீர்காள், எந்தை புகலூர் பாடுமின். நீவிர் நெஞ்சில் நோயறுத்து உய்ஞ்சு போவதற்கியாதும் ஐயுறவில்லை.

நாவலூரன் வனப்பகை யப்பன், சடையன்றன் சிறுவன், வன்றொண்டன், ஊரன் பாடிய பாடல் பத்திவை வல்ல வர் அரவனாரடி சென்று சேர்வதற்கியாதும் ஐயுறவில்லையே,'' என்று பாடிப் பணிந்து, விடை பெற்று வெளி வந்து, அங்கே தாம் பெற்ற நிதிக்குவை முழுதும் உடன் கொண்டு, புறப்பட்டுத் திருப்பனையூரை யடைந்தார். அங்கே யெம்பெருமானார் அவருக்குத் தமது திருக்கூத் துக் காட்சி தந்தருளினார். அது கண்ட நம்பியாரூரர், பேரன்போடும் விழுந்து பணிந்து, "ஒரு காதினில் தோடும், மற்றொரு காதினில் குழையுந் தூங்க, தொண்டர்கள் துள்ளிப் பாட நின்று ஆடுமாறு வல்லாரவரே அழகியரே; காவிரி புடைசூழ் சோணாட்டவர், தாம் பரவிய பாவுரி புலவர் பயிலும் திருப்பனையூரில், தோளும் ஆகமும் தோன்ற நட்டமிட்டாடுவார் அடித்தொண்டர்தங்களை ஆளுமாறு வல்லாரவரே அழகியரே; தோள் இருபது தாள் நெறிதர அரக்கனை யடர்த்தார், நாவலூரன், வனப்பகையவ ளப்பன், வன்றொண்டன் செஞ்சொற் கேட்டுகப்பார், அரங்கிலாட வல்லாரவரே அழகியரே,'' என்று பாமாலை பாடி வணங்கி அருள் பெற்றார். பின்பு அவ்வூராரனைவரும் வணங்கி வழியனுப்பப் புறப்பட்டுத் திருவாரூரை யடைந்து, அளவில்லாத செம்பொன்னைப் பரவையார் மாளிகைக் கனுப்பிவிட்டு, தாம் பூங்கோயி லமர்ந்த பிரான் பொன்னடி போற்றி, மாளிகையை யடைந்தார். அது கண்டு பரவையார் மன மகிழ்ந்தார். நம்பியாரூரரும் அவ்வூருக் கருகிலுள்ள பல பதிகளையும் வணங்கி யிருந்தார்.

## 10. சிவ தல யாத்திரை

அக்காலத்து அவர் ஒரு நாள் திருநன்னிலம் என்ற ஊரையடைந்து, கோவிலினுள்ளே சென்று, வலம் வந்து பணிந்து, "நலங்கிளர் நன்னிலத்துப் பெருங்கோவில் நயந்தவர், பல்பிணைக் காடரங்கா ஆடியமா நடத்தார், கொடுங்காட்டிலே கடுங்கேழலின் பின் கானவரா யமர் செய்து அர்ச்சுனனுக்கு அருள் செய்த பிரான், நரபதி செம்பியர்கோன் திகழ் கோச்செங்கணன் செய்கோவில் நாடிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவர்—அவரைச் சிங்கி தந்தை, திருவாரூரன் பாடிய பத்தும் வல்லார் புகுவார் பரலோகத்துள்ளே," என்று பாடல் பாடிப் புகழ்ந்தார். பின்பு அங்கிருந்து திருவீழி மிழலை நோக்கிப் புறப்பட்டார். அவ்வூரார் அவருக்கு நடைப்பந்தலிட்டு எதிர்கொண்டு வந்து அழைத்துப்போயினர். ஆரூரர் அவ்வூரிற் புகுந்து, எம்பெருமான் திருமுன் எய்தி, "எம்பெருமானே, தந்தை தாளற எறிந்த தண்டிக்கும், கண்ணிடந்த கண்ணப்பனுக்கும் ஏற்றம் நல்கினீர்; பணிந்த பார்த்தனுக்கும், பகீரதனுக்கும், பல பத்தர் சித்தர்க்கும் பண்டருள் நல்கினீர்; திருவீழி மிழலையிலிருந்து நீர் தமிழோடு இசைகேட்கு மிச்சையாய், அப்பருக்கும் சம்பந்தருக்கும் நித்தம் காசு நல்கினீர்; செழுமாடத் திருமிழலை மேவிய நீர், பலி ஏற்றதென் என்று விண்ணப்பம் செய்யும் அடியவருக்கு மெய்ப்பொருளாய அடங்கல் வீழி கொண்டிருந்தீர். அடியேனுக்கும் அருளுதிரே," என்று போற்றி, அங்கே சில நாள் தங்கியிருந்தார். பின்பு திருவாஞ்சியத்தை யடைந்து, "திரு

வனூர் பணிந்தேத்தும் திகழ் திருவாஞ்சியத்துறையும் நம் அடிகள் அடியாரை ஊழ்வினை வந்து நலிய வொட்டாரே; பார்த்தனூர் திரள் தோள்மேல் பகழிகள் பாய்ச்சித் திருந்து மாடங்கள் நீடும் திகழ் திருவாஞ்சியத்துறையும் மருந்தனூர் அறை கழல் நமக்குச் சரணே; அக்கழல் நினைப்பவர் வினை நலிவிலரே; திருவாஞ்சியத்துள் மங்கை பங்கரையல்லால் யாம் இறையெனக் கருதுத லிலமே," என்று புகழ் மாலை பாடி, அங்கே தங்கியிருந்து, பின்பு, அரிசிலாற்றங்கரையிலுள்ள புத்தூரை நோக்கிப் புறப்பட்டார்.

போகிற வழியில், திருநறையூரிலிருக்கும் திருச்சித்தீச்சரம் என்ற கோவிலை யடைந்து, "நீரும் மலரும் நிலவும் சடையார், மறங்கொள் அரக்கன் வரைத்தோள் வரையால் இறக்கொள் விரற்கோன், பேணு முனிவன் பெருவேள்வி யெல்லாம் மாணுமை செய்தார் மருவும் இடமாம் நெறியில் வழுவா நியமத்தவர்கள் செறியும் நறையூர்ச் சித்தீச்சரமே," என்று போற்றிப் புகழ்ந்து, தொண்டர் பலர் எதிர்கொண்டழைக்க, அரிசிலாற்றங்கரையிலிருக்கும் திருப்புத்தூரை யடைந்தார். அங்கே தம் பெருமான் திருமுன் பெய்தி நின்று, "அருமலரோன் சிரமொன்றறுத்தீர். திருமகள் மணாளனாகிய நெடுமால் பல நாள் சிறப்பாகிய பூசனை செய்பொழுதில் ஆயிரத்தி லொரு மலர் குறைந்ததாக, அக்குறைவு நிறைவாக ஒரு கண் மலர் சூட்டலுமே, மனமிரங்கி மகிழ்ந்து, பெருவிறலாழி விரும்பியளித்தீர். திருப்புத்தூர்ப் புனிதரே, உமக்காரெதிர்? எம்பெருமானை, மால், பிரமன், மற்றும் வானவர், தானவர்,

மாமுனிவர் பலரும் உம்மை வணங்கித் தொழுகின்றனர். நீர் தலையிற் பலிகொண்டதென்னே? உலகங்களெல்லா முடையீர், உரையீர். அகத்தடிமை செய்யும் அந்தணனர் புகழ்த்துணையார், அரிசிற் புனல் கொடுவந்து ஆட்டுகின் றார், மிகத்தளர் வெய்தி ஒரு நாள் குடத்தை நும் முடி மேல் விழுத்திட்டு நடுங்குதலும், அவர்க்குப் பஞ்சம் நீங்குமட்டும் நித்தலும் ஒரு காசு அவர் கைப்புகச் செய்துகந்தீர். கடிக்குமரவால், மலையால், அமரர்கடலைக் கடைய எழும் காள கூடம், உலகங்களை ஒடுக்கு மென்ற தனை உமக்கே அமுதாக உண்டீர், உமிழீர். இடிக்கும் மழை வீழ்த்து இழுத்திட்டு, அருவி யிருபாலும் ஓடி இரைக்கும் திரைக்கை யடிக்கும் புனல்சேரரிசில் தென் கரை அழகார் திருப்புத்தூர் அழகனீரே," என்று பதி கம் பாடித்தொழுது, அங்கே வாழ்ந்துகொண்டிருந்தார்.

சில நாட் சென்ற பின் அங்கு இருந்து புறப்பட்டுப் பதிகள் பலவும் பணிந்து போந்து, திருவாவடுதுறையை யடைந்தார். அங்கே உளங் கொண்டு, கோவிலுள்ளே புகுந்திறைஞ்சி, "ஆவடுதுறை யாதி எம்மானே, மார்க் கண்டனர் உம்முடைய அடியடைய அவர் உயிர் நிறுத் தக் காலனைக் காலாற் கடந்த காரணங் கொண்டு, அடி யேன் இறைவர் எம்பெருமான் என்று எப்போதும் ஏத்தி ஏத்தி நின்று, அஞ்சலி செய்து, உம் சேவடிக்கு அன் போடும் அடைந்தேன். தெருண்ட வாயிடை நூல் கொண்டு சிலந்தி சித்திரப் பந்தர் சிக்கென வியற்ற அது தன்னைச் சோழனாக்கினீர். திகழு மாலவன் ஆயிரமலரால் ஏத்துவான் ஒரு மலர் குறையப் புகழினல் அவன் கண் ணிடந்திடலும் புரிந்து சக்கரங் கொடுத்தீர். வீரத்தால்

ஒரு வேடுவனுகி விசயனுக்கு வான்படை கொடுத்தீர். முப்புரமெரிய உம்மை முன்னிய அம்மூவர்க்கும் பொன்னுலகாளப் புகழினுல் அருளீந்தீர். இவை கண்டடியேன் அகழும் வல்விணைக்கஞ்சி, வந்துமை யடைந்தேன்," என வளவன் செங்கணுன் பிறப்பைச் சிறப்பித்துத் தமிழ்ச் சொன் மாலை சாற்றினுர். அங்கே சில நாள்வைகி வணங்கி, அருள்பெற்றுக் காவிரியாற்றின் தென்கரைமேல் திகழும் பதிகள் பலவும் பணிந்து, முனைப்பாடித் தலைவர் திரு விடைமருதூரை யடைந்தார். அவ்வூரில் கோவிலடைந்து, மருதிடை யமர்ந்த பெருமான் திருமுன்னின்று, "இம் மானுட வாழ்க்கை புன்னுனிப் பனி வெங்கதிர் கண்டாற் போலும். இது நிலை பெற்ற பொருளன்று. முன்னமே உம் சேவடி சேரா மூர்க்கனுகிக் கழிந்தன காலம். உம் அருளைச் சிந்தித்தே மனம் வைக்கவும் மாட்டேன். இரப்பார்கட்குச் சிறி தொன்று மீயேன்; கடியவாயின கொடுமைகள் செய்தேன்; குற்றம், செற்றம், வேட்கை இவை முதலாக விடுக்ககிற்றிலேன். வேண்டில், ஐம் புலன் என் வசம் அல்ல. நமன் தமர் நரகத்திட லஞ்சி இடுக்கணுற்றனன். காவிரித் தென்கரை தன்மேல் இடை மருதுறை எந்தை பிரானே, நீர் எனக்கு உய்வகை யருளீர்," என மதுரச் சொன் மலர்கள் பன்னிப் புனைந்து பணிந்தேத்திப் பரவிப்போந்து தொண்டருடன் அந்நற் பதியி லிருந்து அகன்று, திருநாகேச்சரத்தை யடைந் தார். அக்கோவிலை வலங் கொண்டு முதல்வர் திருத்தாள் தொழுது, "செருந்தி செம்பொன்மலரும் திருநாகேச் சரத்தாரே, நீர் விடமுண்டுகந்தீர். அருந்தவமா முனி வருக்கு அருளாகி ஓர் ஆலதன் கீழிருந்து அறமே

யுரைத்தீர். பாலனதாருயிர்மேல் பரியாது பகைத் தெழுந்த காலனை வீடுவித்தீர். இவை என்னேகொல்லோ!" என்று பதிகம் பாடினர். பின்பு அங்கிருந்து புறப்பட்டுச் சிவ புரத்தை யடைந்து வணங்கி, மனமுருகி வழியிலுள்ள பல பதிகளையும் பணிந்துகொண்டு, திருக் கலைய நல்லூரை யடைந்தார்.

அங்கே இறைவர் திருமுன் சென்று, அவரடிக் கீழ் மும்முறை வணங்கி, "உமையார் கொண்ட தவங் கண்டு, குறிப்பினுடன் சென்று, அவர்தம் குணத்தினை நன்கறிந்து, விரும்பு வரங் கொடுத்து, அவரை வேட்டருளிச் செய்த விண்ணவர்கோன்; செருமேவு சலந்தரனைப் பிளந்த சுடராழி செங்கண்மலர் பங்கயமாச் சிறந் தானுக்கு அருளி, இருள் மேவும் அந்தகன்மேல் திரிசூலம் பாய்ச்சி, இந்திரனைத்தோள் முறித்த இறைவர்; இண்டை மலர் கொண்டு மணலால் இலிங்கம்!

நாவின் பாலாட்ட இடறிய தாதையைத் தாள் துண்டமிடு தண்டியடி அண்டரெலாம் தொழுதேத்தத் தொடர்ந்தவனைப் பணிகொண்ட விடங்கர்; மலைமடந்தையார் விளையாடி வளையாடு கரத்தால் மிக மகிழ்ந்து அவர் கண் புதைத்தலுமே உடன் உலகெங்கும் வல்லிருளாய்மூட அவ்விருளோடும் வகை நெற்றி ஒற்றைக் கண் படைத்து வந்த உத்தமர் ஊர் வினவில், சொற்பால பொருட்பால சுருதி ஒரு நான்கும் தோத்திரமும் பல சொல்லித் துதித்து இறைதம் திறத்தே கற்பாரும் கேட்பாருமாய் எங்கும் நன்கார் கலை பயில் அந்தணர் வாழும் கலைய நல்லூர் காணே. பெற்றிமை யொன்றறியாத தக்கனது வேள்வியிற் சேர்ந்த பெருந்தேவருள்

எச்சனது சிரமும், இந்திரன் தோளும், ஞாயிற்றின் பல்லும், அங்கியின் கரமும், பகனின் கண்ணும் பீடழி யச் செற்றுத் திருவிரலால் மதிக்கலை சிதையத் தேய் வித்து, அருள் பெருகு சிவ பெருமான், இலங்கையர் கோன் சிரம் பத்தோடு இருபது திண்தோளும் இற்று அலற ஒற்றை விரல் வெற்பதன்மேல் ஊன்றி, நிலமும் நீரும் நெருப்பொடு கால் விண்ணாகி நிற்பனவும் நடப் பனவுமாம் பெருமான், பொரும் வலியதுடை யசுரன் தாருகனைப் பொருது பொன்றுவித்த பொருளினை முன் படைத்து வந்த புனிதர் எழுந்தருளும் ஊர் வினவில், முல்லையொடு மல்லிகை செண்பகமும் திரை பொருது வருபுனல் சேர் அரிசிலாற்றின் தென்கரைமேல் சோலை மலி குயில் கூவக் கோல மயிலாலச் சுரும்பொடு வண் டிசை முரலப் பசுங்கிளி சொற்றுதிக்கக் காலையிலும் மாலையிலும் கடவுளடி பணிந்து கசிந்த மனத்தவர் பயி லும் கலைய நல்லூர் காணே," என்று திருப்பதி மெய்ம் மைப் புராணம் பலவும் மிகச் சிறப்பித்து இசையின் விளம்பினார். அங்கு நின்றும் புறப்பட்டு, திருக்குடமூக் கணைந்து, பணிந்து பாடிப் போய், திருவலஞ்சுழியை மருவி, பெருகும் அன்புருகத் தங்கு காதலுடன் வணங்கி, சொல்லரசாம் அப்பருக்குப் பெருமானார் அடியளித்த திருநல்லூரைச் சென்றடைந்தார்.

திருநல்லூ ரிறைவர் திருவடி போற்றி, வழியே யிருந்த நம்பர் பதி பலவும் இறைஞ்சித் திருச்சோற்றுத் துறையைச் சேர்ந்தார். அங்கே திருக்கோவிலை வலங் கொண்டு உள்ளே போய் அன்பு மீதூர, "கோல அரவும், கொக்கின் இறகும், மாலை மதியும் வைத்தார், ஓதக்

கடல் நஞ்சினை யுண்டிட்ட பேதைப் பெருமான் பேணும் பதியாம், சிறந்தார் சுற்றம் திரு என்றின்ன துறந்தார் சேரும் சோற்றுத் துறையே.

“இலையா லன்பால் ஏத்து மவர்க்கு
நிலையா வாழ்வை நீத்தா ரிடமாம்
தலையாற் ருழும் தவத்தோர்க் கென்றும்
தொலையாச் செல்வச் சோற்றுத் துறையே.”

என்று அஞ்சொற் பதிகம் பாடியருளிக் காதல் கூரப் பரவினர். அங்கே எம்பெருமானுடைய திருவருள் பெற்றுப் போந்து, சுந்தரனர் தேவர் பெருமான் மகிழ்ந் துறையும் திருக்கண்டியூர், திருவையாறு, திருப்பூந்துருத்தி முதலியபதிகளை வணங்கிக்கொண்டு, திருவாலம்பொழிலை யடைந்து பணிந்து, இரவில் அங்கே பள்ளி கொண் டிருந்தார். அப்போது சிவ பெருமானர் அவருடைய கனவிலே தோன்றி, “நீ மழபாடியினில் வருவதற்கு நினைக்க மறந்தாயோ?” என்று கூறித் தம்முடைய குழகா கிய கோலத்தை எதிரேகாட்டி யருளினர். உடனே நம்பி யாரூரர் விழித்தெழுந்து, தம் பெருமான் திருவருளை வியந்து, காவிரியாற்றின் வடபாலேறி, நெடுமாட அழ கார் வீதி மழபாடி யணைந்தார்.

அங்கே அவர் திருக்கோபுரத்தைத் தொழுது, கோவிலினுட் புகுந்து, பாம்பணி யணிந்தார் பத மல ரிறைஞ்சி நின்று,

“பொன்னர் மேனியனே! புலித்தோலை யரைக்கசைத்து
மின்னர் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை யணிந்தவனே!
மன்னே! மாமணியே! மழபாடியுண் மாணிக்கமே!
அன்னே! உன்னையல்லா லினியாரை நினைக்கேனே.”

என் தாய், என் தந்தை இவர் எனக்குள்ளளவும் சார்வா கார். நான் இம்மாயப் பிறவியிற் பிறந்து இறந்து எய்த் தொழிந்தேன். மழபாடியுண் மாணிக்கமே, பண்டே நும்மடியேன் நும் அடியார் அடியார்கட்கெல்லாம் தொண்டே பூண்டொழிந்தேன். வாளார் கண்ணி பங் கரே, கீளார் கோவணமும் திருநீறும் மெய் பூசி நுந்தம் தாளே வந்தடைந்தேன்; தலைவீர், என்னை ஏன்று கொள் ளீர். எம்மான், நும்மை யல்லால் இனி யாரை நினைக் கேனே. பண்ணார் இன் தமிழாய்ப் பரமாய பரஞ் சுடரே, வெய்ய விரி சுடரே, மால் முதலிய தேவர் கணங் களெல்லாம் செய்ய மலர்களிட மிகு செம்மையுள் நின்ற வரே,

"நாளார் வந்தணுகி நலியாமுன நின்றனக்கே
ஆளா வந்தடைந்தேன் அடியேனையு மேன்றுகொணீ
மாளா நாளருளும் மழபாடியுண் மாணிக்கமே!
ஆளா! நின்னையல்லால் இனியாரை நினைக்கேனே."

எனப் பதிகம் பாடிப் பணிந்து, அவ்வூரிலே சில நாள் தங்கியிருந்தனர். பின்பு அவர் அடியார்களுடனே புறப்பட்டுக் காவிரியாற்றின் இரு கரைகளிலு மிருக்கும் கோவில்களைத் தொழுதுகொண்டு, மேற்கு நோக்கிச் சென்றார். திருவானைக்காவை அணுகியபோது அவ்வூரி லிருந்த அடியார்க ளெல்லாரும் எதிர் கொண்டு வந்து வணங்க, நம்பி யாரூரர் ஊரினுள் புகுந்து கோவிலுக்குச் சென்றார். அங்கே அவர் அன்பு மீதூரச் சிவ பரம்பொரு ளின் சேவடிக் கீழ் விழுந்தெழுந்து, மெய் சிலிர்த்து, "கடலிலிருந்து நஞ்செழ அது கண்ட வஞ்சகர்கள் கூடி, அது தங்கள்மேல் அடாமல் உண்ணென உண்டிருள்

கண்டர், தந்தையாய் உலகுக்கோர் தத்துவர், ஆலநீழ லுள் ஆனைக்காவுடையாதியை எங்கள் ஈசனென்பார்கள் எம்மையும் ஆளுடையாரே. உறையூர்ச் சோழர் பெருமான் திருவாரஞ் சாத்திக்கொண்டு தாரமாகிய பொன்னித் தண்டுறை மூழ்குதலும் வழுவிப்போக நீரினின்று அடிபோற்றி, 'நின்மல, கொள்,' என, ஆங்கே திருமஞ்சனக் குடத்துள் அது புக்கு ஆட்ட அணிந்தருளித்தளரும் அவனுக்கருள்புரிந்த எம் ஆனைக்காவுடை ஆதியை, வலங்கொள்வாராவர் தங்கள் வல்வினைதீர்க்கும் மருந்தை இரவும் பகலும் ஏத்துவார் எம்மையும் ஆளுடையாரே," எனப் பதிகம் பாடி, உறையூர்ச் சோழனுக்கு அருள் புரிந்த தன்மையைச் சிறப்பித்தருளினார்.

நம்பியாரூரர் அவ்வூரிலே சிலநாள் தங்கியிருந்தனர். அவ்வாறு தங்கிய அவர் அவ்வூரைச் சுற்றியிருந்த திருத்தளிகள் பலவும் சென்று வணங்கினார். பின்பு திருவானைக்காவிலிருந்து புறப்பட்டுத் திருப்பாச்சிலாச் சிராமம் சென்றடைந்தார்.

அங்கே திருக்கோபுரத்தைத் தொழுது, கோவிலினுள் சென்று, பெருமானார் திருமுன்பு வீழ்ந்திறைஞ்சி, அவரிடம் பெரும்பொருள் பெற வேண்டு மென்னும் விருப்பத்தோடு பரவினார். எம்பெருமான் பொருள் அருளாதிருந்தார். அதனால், வன்றொண்டர் அன்பு நீங்கா அச்சத்துடன் நேர் நின்று, பொன் பெறாவுள்ளம் புழுங்க அழுங்கி, முறைப்பாடுடையார்போல என்பு கரைந்து, "என் தலையையும் என் வாயையும் என் நெஞ்சத்தையும் அவரை வணங்கவும் அவரை வாழ்த்தவும் அவரை நினைக்கவும் வைத்தார். என்னையும் அவ

ருடைய திருவடிக் கடிமையாக்கினார். நானும் அன்னையே யென்றும் அத்தனே யென்றும் தலைவரே என் றிருந்தேன். அவருக்கடிமையாகிய அடியேன் ஒருவன் இருக்கின்றேன் என்று கருதி, அடியேனுக்குத் திரு வருள் காட்டீர். அற்றவர்க்கருள்செய் பாச்சிலாச்சிரா மத்தடிகள் தாம் யாது சொன்னாலும் மனமிரங்கித் திரு வருள் செய்யா திருப்பரென்றாலும் ஏழையேனுக்கு அவரைத் தவிர உய்வகை யருளும் பிரானாரைக் காண்கி லேனே.

"அடியார் பலரையும் ஆட்கொள்ளும் பெருமானார், 'இவர் நம்மவர்; இவர் பிறர்; இது நன்மை; இது தீமை,' என்று எடுத்துக்காட்டி, அடியேனை நல்வழிப் படுத்தாமலும், அடியேனுக்கு ஒன்றையும் தராமலும், எவ்வளவுதான் எடுத்துச் சொன்னாலும் என்னுடைய தீவினை யெல்லாம் போக்குமென்று அவருடைய திரு வடிக்கடிமையே செய்தொழுகுவதல்லாமல் பிறிதொன்று மறியாத எனக்கு என் உண்மை யன்பை அறிந்து கொண்டே தாம் பிடித்த வெண்ணீறே பூசியருள்வா ரென்றாலும், அவரைத் தவிர அடியேனுக்குப் பிரானார் இல்லையே! நெஞ்சமே, கண நாதரோடு இரவும் பகலும் பணிந்தேத்திக் கருத்தினுற் கை தொழு தெழுவேன். அந்நிலைமையின் நீங்கி நிலத்திடைப் பிறந்து இவ் வாழ்வையே தஞ்சமென்றிருந்தேன். அன்பில ரேனும் எம்பெருமானென்றெப்போதும் அழைத்தவர்க்கருள் செய்வார் பாச்சிலாச்சிராமத் தெம் பரமர். நெஞ்சே, நீயும் நாடோறும் குற்றேவல் செய்வான் குழைத்துவந் தோடி அவர் திருவடியே கூடுதி. அடியேன் யாது சொன்

ஞும் பிழைத்தது பொறுத்து, ஒன்றீகிலராகி, மெய் யரே ஒத்து ஒரு பொய் செய்து, அவர் பிணம் படுகாட் டில் ஆடுவாராகிலும், அவரலா தில்லையே பிரானுர்!

"ஒருமையே னல்லேன் எழுமையும் அடியேன்
அடியவர்க் கடியனு மானேன்
உரிமையா லுரியேன் உள்ளமு முருகும்
ஒண்மலர்ச் சேவடி காட்டாய்
அருமையாம் புகழார்க் கருள்செயும் பாச்சி
லாச்சிரா மத்தெம் மடிகள்
பெருமைகள் பேசிச் சிறுமைகள் செய்யில்
இவரலா தில்லையோ பிரானுர்."

"இவை யெல்லாம் ஏசினவல்ல; இகழ்ந்தனவல்ல. எம்பெருமான் என்றெப்போதும் அடி தொழுது அவ ரைவாயினுற் கூறி, மனத்தினுல் தொண்டனேன் நினைந் தேன். அடியேன் பேசின பேச்சைப் பொறுத்திலரா கிலும், ஏழையேனுக்கு இவரல்லா தில்லையே பிரானுர்!" என்று பணிந்து நின்ருர். தம்பிரான் மனமிரங்கித் தம் தோழனுருக்கு விழு நிதிக்குவை யளித்தருளினுர். அத னைப் பெற்றுக்கொண்டு உளமிக மகிழ்ந்து தம்பிரான்றே ழர் அவ்வூரைச் சுற்றியிருந்த தலங்களைச் சென்று வணங்கி, அவ்வூரிலேயே சில நாள் தங்கியிருந்தனர்.

பின் நம்பியாரூரர் திருப்பாச்சி லாச்சிராமத்தி லிருந்து புறப்பட்டுக் காவிரியாற்றின் இரு மருங்கு முள்ள எல்லா ஊர்களையும் வணங்கிக்கொண்டு, திருப் பைஞ்ஞீலிக்கு வந்து சேர்ந்தார். அங்கே கோபுரத்தைத் தொழுது கோவிலை வலம் வந்து, உள்ளே சென்று, கறை மிடற்றண்ணல் கழலிணை போற்றி நின்ருர். அப்போது

சிவபெருமான் கங்காள நாதராக அவருக்குக் காட்சி தந்தருளினார். அவ்வருங்காட்சியைக் கண்ட நம் சுந்தர ஞர் கண்களிலிருந்து அன்பு நீர் வெள்ளம்போல் பாய்ந் தோடக் கை குவித்திறைஞ்சி, அன்று தாருகா வனத்து முனிவருடைய மனைவியர் தம்மிடம் பலிபெற வந்த சிவ பரம்பொருளின் மனங்கவர் திருவடிவைக்கண்டுகொண்ட தொரு மயலால் அவரிடம் வினவிய கூற்முக, "பைம் பொழில் சூழ்பைஞ்ஞீலியில் ஆரணீய விடங்கரே, உமக் காரமாவது நாகமோ? அது நீர் பலிக்கு வரும்போது சீறுமெனும். ஆதலின், பிரானிரே, உம்முடைய கையில் பாம்புவேண்டா. பைஞ்ஞீலியீர், பாரெல்லாம் உம்மையே பணிந்து பரவிப் பணியும். தலைவரே, நீ ரொரு பித் தரோ? நீர் சுடலையிற் பேயோடாடலைத் தவிரும். ஆரணீய விடங்கரே, நீர் செந்தமிழ்த்திறம் வல்லிரோ? அடிகளே, நீர் வெண்டலை கையிலேந்திப் பைஞ்ஞீலியே னென்று மாதுபாகராய் வந்து நிற்றிரால். உமக்குப் பலி கொணர்ந்திடுகிலோம். ஆதலின், நடமினே. மேலும், நீர் பெண்களுடைய வளைகவர்வதே தொழிலாகி, இரவி லும்கூட இம்மனையையறிந்து இங்கே நடந்துபோகவும் வல்லிரோ? நீர் வாழுமிடம் காடு; உம்முடைய கையிருப் பதோ, ஓடு. ஆதலின், உம்மைக் காதல் செய்பவர் உம் மிடம் என்ன பெறப் போகின்றனர்? பரவி நாடொறும் பாடுவார் வினை பற்றறுக்கும் ஆரணீயவிடங்கரே, பத்தர் சித்தர்கள் பாடியாடும் பைஞ்ஞீலியே னென்று நிற்றிரால். நீர் ஐய மேற்குமி தென்கொலோ? சொல்லும்.

"அன்னஞ் சேர்வயல் சூழ்பைஞ் ஞீலியி
லார ணீய விடங்கரை

மின்னும் நுண்ணிடை மங்கை மார்பலர்
வேண்டிக் காதல்மொ ழிந்தசொல்
மன்னு தொல்புகழ் நாவ லூரன்வன்
றொண்டன் வாய்மொழி பாடல்பத்
துன்னி யின்னிசை பாடு வாருமை
கேள்வன் சேவடி சேர்வரே.''

எனத் திருப்பதிகம் பாடிப் பணிந்தார். எம்பெருமானும் திருவருள் பாலித்தனர். திருவருள் பெற்ற வன்றொண் டர் வெளிப்போந்து, கரவிலா மனத்து அடியார்களைத் தொழுது, அவர்களோடும் கலந்து மகிழ்ந்து, அவ்வூரி லிருந்தனர்.

நம்பியாரூரர் அப்பேரூரிலிருந்து புறப்பட்டுத் திரு வீங்கோய் மலை முதலாகிய பல தலங்களை வணங்கிக் கொண்டு சென்று, கோங்கு நாட்டிற் புகுந்து, காவிரி யாற்றின் தென்கரையிலிருக்கும் கறையூர்த் திருப்பாண் டிக் கொடுமுடியை அடைந்தார். அவர் அக்கறையூர்க் கொடிமுடிக் கோவிலின் முன்னே சென்று வலஞ் செய்து, இறைவர் திருமுன்படைந்து, பெருமானுரு டைய பொன் மேனிப் பொலிவைக் கண்ணாரக் கண்டு, இங்கிவர் தம்மை மறக்க வொண்ணாதென்று மெய்யன் போடும், "எம்பெருமானே, அடியேன் உம்முடைய திருவடியையே யல்லாமல் மற்றுப் பற்றிலேன். அத்திரு வடியை நான் மறந்தாலும் உம்முடைய திருநாமமாகிய ஐந்தெழுத்தை அறிய எப்போதும் எண்ணிய நாவே இன்சுவை பெருக இடையறாதியம்பும். விரும்பி நும் மலர்ப் பாதமே நினைந்தேன். வினைகளும் விண்டன.

" மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப்
பாத மேமனம் பாவித்தேன்
பெற்ற லும்பிறந் தேனி னிப்பிற
வாத தன்மைவந் தெய்தினேன்
கற்ற வர்தொழு தேத்துஞ் சீர்கறை
யூரிற் பாண்டிக் கொடுமுடி
நற்ற வா! உனை நான்ம றக்கினுஞ்
சொல்லுநா நமச்சி வாயவே.

" ஒவு நாளுணர் வழியு நாளுயிர்
போகு நாளுயர் பாடைமேற்
காவு நாளிவை யென்ற லாலரு
தேன்கி ளர்புனற் காவிரிப்
பாவு தண்புனல் வந்தி ழிபரஞ்
சோதி! பாண்டிக் கொடுமுடி
நாவ லா!உனை நான்ம றக்கினும்
சொல்லுநா நமச்சி வாயவே.

" அஞ்சி னார்க்கர ணாதி யென்றடி
யேனு நான்மிக வஞ்சினேன்
அஞ்ச லென்றடித் தொண்ட னேற்கருள்
நல்கி னாய்க்கழி கின்றதென்
பஞ்சின் மெல்லடிப் பாவை மார்குடைந்
தாடு பாண்டிக் கொடுமுடி
நஞ்சணி கண்ட! நான்ம றக்கினும்
சொல்லுநா நமச்சி வாயவே."

என்று உலகெலாமுய்ய உறுதியாம் பதிகம் உரைத்துப் போற்றினார். பின் திருவருளால் அவ்வூரின் நீங்குவார், மெய்யுணர்வறு ஒருமை நிலவிய சிந்தையுடன் புறப் பட்டு, நம்பியாரூரர் பல பதிகளையும் வணங்கி, அக்

கொங்கு நாட்டிலிருந்த காஞ்சிவாய்ப் பேரூரை யடைந் தார்.

“ அத்திருப் பதியை அணைந்துமுன் தம்மை
ஆண்டவர் கோயிலுட் புகுந்து,
மெய்த்தவர் சூழ வலங்கொண்டு திருமுன்
மேவுவார் தம்மெதிர் விளங்க
நித்தனார் தில்லை மன்றுள்நின் றாடல்
நீடிய கோலநேர் காட்டக்
கைத்தலங் குவித்துக் கண்களா னந்தக்
கலுழிநீர் பொழிதரக் கண்டார்.

“ காண்டலும் தொழுது வீழ்ந்துட னெழுந்து
கரையிலன் பென்பினை யுருக்கப்
பூண்டஐம் புலனிற் புலப்படா வின்பம்
புணர்ந்துமெய் யுணர்வினிற் பொங்கத்
தாண்டவம் புரியும் தம்பிரா னாரைத்
தலைப்படக் கிடைத்தபின் சைவ
ஆண்டகை யாருக் கடுத்தவந் நிலைமை
விளைவையா ரளவறிந் துரைப்பார்.

“ அந்நிலை நிகழ்ந்த ஆரருள் பெற்ற
அன்பனா ரின்பவெள் ளத்து
மன்னிய பாடல் மகிழ்ந்துடன் பரவி
வளம்பதி யதனிடை மருவிப்
பொன்மணி மன்று ளெடுத்தசே வடியார்
புரிநடங் கும்பிடப் பெற்றால்
என்னினிப் புறம்போய் எய்துவ தென்று
மீண்டெழுந் தருளுதற் கெழுவார்.”

திருப்பேரூரை நீங்கித் தம்பிரான்றோழர் மலைகளை யும் காடுகளையும் ஆறுகளையும் கடந்து, பெருமானார்

எழுந்தருளியிருக்கும் பல ஊர்களையும் கும்பிட்டுத் தமிழ் மாலை பாடித் திருவேஞ்சமாக் கூடலை யடைந்தார். அங்கே அவர் சிவ பரம்பொருளின் திருமுன்பெய்தி, "காடும் மலையும் நாடும் இடறிக் குளங்கள் பலவும் குழியும் நிறைய முத்தும் தக்கோலமும் இலவங்கமும் கதிர் மாமணி சந்தனமும் அகிலும் துளங்கும் புனலுட் பெய்து கொண்டு மண்டித் திளைத்து எற்றும் சிற்றாறு அதன் கீழ்க்கரைமேல் வேடர் விரும்பும் விரையார் பொழில் சூழ் வெஞ்சமாக்கூடல் விகிர்தரே, அடியேனையும் வேண்டுதிரே. கலந்தார்க்கருள் செய்திடும் கற்பகமே, பிறவாதவரே, பெறுதற் கரியீர், தொழுவார்க் கெளியீர், துயர் தீர நின்றீர், அடியேனையும் வேண்டுதிரே," என்று பாடிப் பணிந்தார். பின் அவ்வூரிலிருந்து புறப்பட்டு, நாவலர்கோன் நெடுந்தூரம் நடந்து, தென்றிசைக்கணிருந்த திருக்கற்குடி மலையை யணுகினர்.

அங்கே அவர் முத்தீசர் திருமுன் சென்று, பணிந்து நின்று, "இறைவரே, எம்பெருமான், எனக்கு இன்னமுதாயவரே, மலைமேல் மாமருந்தே, அயன் மாலவன் போற்றி செய்யும் கனலே, கற்பகமே, காரார் பூம் பொழில் சூழ் திருக்கற்குடி மன்னி நின்ற ஆரா இன்னமுதே, அடியேனையும் அஞ்சலென்னீர். பந்தாரும் விரலாள் ஒரு பாகம் அமர்ந்தவரே, எந்தையீர், எம்பெருமானே, அலையார் தண்புனல் சூழ்ந்து அழகாகி விழவமரும் கலையார் மாதவர் சேர் திருக்கற்குடிக் கற்பகமே, அடியேனையும் ஏன்று கொள்ளீர்.

" வருங்கா லன்னுயிரை மடியத்திரு மெல்விரலால்
பெரும்பா லன்றனக்காய்ப் பிரிவித்த பெருந்தகையே !

கரும்பா ரும்வயல்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
விரும்பா எம்பெருமான் அடியேனையும் வேண்டுதியே.''

என்று பாடிப் புகழ்ந்து வேண்டினார்.

பின்னர் அவர் அடியாருடனே அவ்வூரை விட்டுப் புறப்பட்டுப் பல பதிகளையும் இறைஞ்சித் திருவாறை மேற்றளியை யடைந்தார். அங்கே அவர் சிவபெருமானுடைய திருவடிகளைப் பாடிப் பணிந்து, சில நாள் மகிழ்ந்திருப்ப, அவருக்குப் பெருமானார் திருவருள் செய்தார். இவ்வாறு திருவருள் பெற்று, நம்பியாரூரர் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு, திருவின்னம்பர் நகரை எய்திக் கடுக் கவின் பெறு கண்டனார் கழல் வணங்கி, அங்கே சில நாள் தங்கியிருந்தார். அப்போது அவருக்குத் திருப்புறம்பயம் அடையப் பேராவல் எழுந்தது. உடனே அவர்,

“ அங்க மோதியோர் ஆறை மேற்றளி
நின்றும் போந்துவந் தின்னம்பர்த்
தங்கி னேமையும் இன்ன தென்றிலர்
ஈச னார்எழு நெஞ்சமே !
கங்கு லேமங்கள் கொண்டு தேவர்கள்
ஓதி வானவர் தாந்தொழும்
பொங்கு மால்விடை யேறி செல்வப்
புறம்ப யந்தொழப் போதுமே.''

நெஞ்சமே, ஊரும், சுற்றமும், பெற்ற மக்களும், பெண்டிரும் என்றும் நம்மவ ரல்லர். ஆதலின், செல்வத்தோடும் வாழும் இம்மனை வாழ்க்கையில் நினைப்பொழி. உடல் திரைந்து, நரம்பெழுந்து, நரைத்து, உரை தளர்ந்த பின் அறம் புரிந்து, எம்பெருமானை

நினைப்பது என்பது அரிதுகாண். ஆதலின், மனமே, இப் பொழுதே புறப்படு. நாம் திருப்புறம்பயம் தொழப்போ வோம். மட நெஞ்சமே, ஒருவரைக் குற்றக் கூறை கொண்டு சூழ்ந்த கொலையும் களவும் தீமையும் இம்மை யிலேயே வந்து சேரும். இது திண்ணமே. இப்பாவங் களை நீக்கியருளும் பற்றுவார் சிவபெருமானே. ஆத லின், கள்ளி நீ செய்த தீமைகளும் பாவமும் பறையும் படி புறப்படு; புறம்பயந் தொழப் போதும். நெஞ்சமே, முன்னைச் செய்வினை இம்மையில் வந்து மூடும். ஆத லின், எங்கள் சங்கரனுர் வந்து தங்கும் ஊராகிய திருப் புறம்பயம் சேர்ந்தால், இம்மையிலேயே மலமெலாம் அறும். வல்வினை மறுமைக்கும் சார்கிலா. அதனுல், உன் சலமெலா மொழித்து எழு. அந்தத் திருப்புறம்பயம் தொழப் போதும்," என்று நெஞ்சை நோக்கி இறந்தும் பிறந்தும் சிறந்தும் தொடர்பறுத மயக்கத்தை அப் பரைத் தொழுது போக்கி உய்யளா மெனச் சொல்லிப் பதிகம் பாடிக்கொண்டு, திருப்புறம்பயத்தை நோக்கி நடந்தார்.

திருவெண்ணெய் நல்லூரிலே ஒப்புயர்வற்ற பரம் பொருள் ஒரு வேதியராகிப் பழவோலை காட்டி நின்று ஆண்டவராகிய தம்பிரான் தோழர் தம்மூரை நோக்கி வருகின்றுரென்பதைத் திருப்புறம்பயத்தில் வாழ்ந்த தொண்டர்கள் அறிந்து, தாமும் தம்மூரும் செய்த பெருந்தவத்தை வியந்து மகிழ்ந்து, அவரை எதிர் கொண்டு சென்றனர். நம்பியாரூரரும் அவ்வூரினுட் சென்று, கோவிலுக்குப் போய், திருக்கோபுரத்தின் முன்பு இறைஞ்சி, அடியாரோடும் உள்ளே போய், சிவ

பரம்பொருளின் சேவடியிணை போற்றி, நிலத்தின்மேல் மிகுந்த விருப்பத்தோடும் பணிந்து, அருள் பெற்று, வெளியே வந்து, எங்குமாகி நிறைந்து நின்ற இறைவர் மகிழ்ந்த பிற தலங்களையும் வணங்கப் புறப்பட்டார்.

## 11. ஆற்றிலே போட்ட பொன்னைக் குளத்திலே தேடியது

**வ**ன்றொண்டர் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு, கூடலையாற்றூரை அணுகினார். அவர் அவ்வூருக்குப் போகாமல், வேறு வழியே திருமுதுகுன்றை நோக்கிநடந்தார். அப்போது சிவபெருமானார், உமா தேவியாரோடு அந்தணராகி, அவர் செல்லும் வழியிலே அவர் முன் நின்றார். அவ்வந்தணரைக் கண்ணுற்ற அவர் தோழர், அன்புடன் வணங்கி, "முதுகுன்றுக்குப் போகும் வழியை அடியேனுக்குச் சொல்லியருளும்," என வேண்டிக்கொண்டார். அது கேட்ட அந்தணர், "அவ்வழி கூடலையாற்றூர்மேற் செல்லும். என் பின் வாரும்," என்று சொல்லி, கூடலையாற்றூரை நோக்கி, முன்னே துணையாக நடந்தார். நம்பியாரூரரும் கை கூப்பித் தொழுதுகொண்டு, அவர் பின்னே சென்றார். ஊரின் அருகே சென்றபோது, பிரானார் மறைந்தருளினார். அது கண்ட அடியவர், "வெண்டலைக் கையிலேந்தி ஊர்தோறும் பலியிடுமென்று உமையாளோடும் கூர்நுனை மழுவேந்திக் கூடலையாற்றூரில் அந்தணர் இவ்வழிப் போந்த அதிசய மறியேனே! மறை முதல் வானவரும் மாலும் அயனும் இந்திரனும் பேய்க் கணமும் சூழ,

புரிகுழ லுமையோடும் கூடலையாற்றூரில் ஆடலுகந்த அழகர் இவ்வழிப் போந்த அதிசயம் அறியேனே!" என்று பாடிக்கொண்டு, கூடலையாற்றூருட் சென்றார். அங்கே ஆடகப் பொதுவில் ஆடும் அறைகழல் வணங்கிப் போற்றி, அருள் பெற்று, அவ்வூரின் நீங்கித் திருமுது குன்றை யடைந்தார். அடைந்தவர், கோவிலுக்குப் போய்க் கோபுரத்தை வணங்கி, வலமாக உட்சென்று, தலைவனார் திருமுன் பணிந்து, "முதுகுன்றரே, அந்தி திரிந்து அடியாரும் நீரும் அகந்தோறும் சந்திகள் தோறும் செடி நாய் குரைக்கப் பலிக்குச் செல்வது தக்கதோ? ஊரித்தனையும் நீர் திரிந்தக்கால், உமது கமல மலரன்ன சேவடி நோகாதோ? நீர் இவ்வாறு எத்திசையும் சென்று பலி ஏற்றக்கால் பிறர் உம்மைப்பற்றி என் சொல்லார்? உமக்கு இது பான்மை யன்று. ஆதலின், உம்மீது பக்தியினால் இடுவாரிடையே பலி கொண்டருளும். அடியாரும் நீருமாக வீடுதோறும் ஆடி யசைந்து பாடிப் பெற்ற பொருளெல்லாம் உமை யாருக்கோ? உம் மனைவியாராகிய உமா தேவியார் ஊர்கடோறும் பல அறங்களையும் செய்ய, நீர் அகங் கடைச் சென்று சில்பலி அட்டுமின் என்று இரந்து நிற்பது தக்கதோ? முத்தி தரும் மணி முத்தாறு வலம் செய்யும் முதுகுன்றரே, நாளைத் தொழுவோம் என் றிருப்பவர் இன்று சாவரேல், அவர்கள் செய்வதென்? அடிகேள், சொல்லும். எம்பெருமானை நோக்கிப் பித்த னைப்பவனாகிய நான் பிதற்றிய இவ்வுரையைக் கண்டு தத்துவ ஞானிகளாயினார் நகுமாறார். எம்பெருமானே, இவ்வாறு உம்மை அன்போடு துதிப்பார்க்கு இரங்கி

யருளும்,'' என்று பாடிக் கைகூப்பி நின்றார். இவ்வாறு பெருமானாரிடம் பெரும்பொருள் வேண்டி வந்த விதமெல்லாம் மனத்துட் கொண்ட குறிப்போடும் வழிபடும்போது, தலைவனார் தமக்கு அப்பொருளைத் தந்தருளும் படிக்காகத் திரும்பவும், "மெய்யில் முற்றப் பொடி பூசி, குமரன் முதற்றேவர் தங்கள் நம்பி, தவத்துக் கொரு நம்பி, தாதையென்றுன் சரண் பணிந்தேத்தும் எங்கள் நம்பி,பொருளால் வருநட்டம் புரிந்தநம்பி, என்னையாளு டையநம்பி,எழுபிறப்பும் எங்கள் நம்பிகண்டாயே. முனிவர்க்கருங்கூற்றைக்குமைத்த நம்பி,பரமானந்தவெள்ளம் பணிக்கும் நம்பி எனப் பாடுதலல்லால், மற்று எனக்கு என் செய வல்லேன்? மதியிலேன் படும் வெந்துயரெல்லாம் ஏற்கும்நம்பி, என்னையாளுடைய நம்பி, எழுபிறப்பும் எங்கள் நம்பி கண்டாயே. அடி கை தொழுவார் நோய் அரித்தநம்பி, ஆண்டநம்பி, திருவெள்ளடை நம்பி, சில்பலிக்கென்று அகங்கடோறும் மெய்வேடம் தரித்த நம்பி, நெடுமாலும் பிரமனும் நாடியும் காணா உம்மை நம்பி ஒருவர்க் கெய்தலாமோ? சொல்லும் பொருளுமாய் நின்றநம்பி, உம்கழற்சேவடி என்றும் கலந்து உம்மைக் காதலித்து ஆட்செய்கிற்பாரை ஆண்டு அவர்முன் கதிசேர அருளும் நம்பி, கசியாதவர் தமக்குக் கரக்கு நம்பி, கசிந்தவர்தமக்கு இம்மையோடு அம்மையில் இன்பம் பெருக்கும் நம்பி, எம்பிரானாய நம்பி, எழுபிறப்பும் எங்கள் நம்பி கண்டாயே,'' என்று பாடி வேண்டினார். உடனே பழமலை நாதர் அவருக்குப் பன்னிரண்டாயிரம் பொன் தந்து அருளினார். அதனை மகிழ்ந்தேற்று, ஆளுடைய நம்பியார் அருகிற்சென்று,"எம்பெருமானே,

அடியனேனுக்கு அருளிய இப்பொன்னெல்லாம் திரு வாரூரிலே அவ்வூரவர் மருளுற்று வியப்ப அடியனேன் பெறல்வேண்டும்," என்று வேண்டிக்கொண்டார். அப்போது பெருமானார் விண்ணிற் சொல்லாய், "இப்பொருள் முழுதும் மணிமுத்தாற்றி லிட்டுத் திருவாரூர்க் குளத்திற் போய்க் கொள்க," என்றருளினர். வன்றொண்டர் அது கேட்டு மச்சம்வெட்டிக் கைக்கொண்டு பொன்னை மணிமுத்தாற்றிலே புகவிட்டு, "அன்று என்னை வலிந்து ஆட்கொண்ட அருளை இதிலே அறிவேன்," என்று கூறிப் பெரும்பற்றப் புலியூர் மன்றிலே கூத்துக்கண்டு கும்பிட எண்ணித் தில்லை மூதூரை நோக்கிப் புறப்பட்டார்.

திருமுது குன்றரைப் பணிந்து விடைபெற்று, வழியிலிருந்த ஊர்களை வணங்கிக்கொண்டு, ஆளுடைய நம்பியார் திருக்கடம்பூரை யடைந்து, தொழுது போய்த் தில்லை மூதூரடைந்தார். அங்கே அவர் திருவீதியிற் புகுந்து, தாழ்ந்து, கோவில் வாயிலை யடைந்து, அதன் முன்பு மண்மேல் வீழ்ந்து வணங்கி, உள்ளே போய்க் கைதலை மேற்கொண்டு, சுற்று மாளிகைகளைச் சூழ்வந்து பொன்னம்பலவர் திருமுன்பாக இருக்கும் கோபுரத்தை இறைஞ்சினர். பின்பு, ஆனந்த வெள்ளக் கண்ணீர்பாய வாய்குழறத் திருப்படியைத் தாழ்ந்து வணங்கி, தம்பெருமானார் திருக்கூத்தைக் கண் குளிரக் கண்டு, "இடைவிடாது அன்பால் நினைந்து சென்று திருமுன்பு அடியிலே வீழும் திருவுடையாரை ஆராயாமல் நமனார் தமர் செக்கிலிடும்போது தடுத்தாட் கொள்வான் பெரியோர்கள் புலியூர்ச் சிற்றம்பலத்து எம்பெருமா

ளைப் பெற்றாமன்றே? அருமையாம் தம் மூலகத்தோடு உலவா இன்பம் தருவாரை, மண்ணுலகம் காவல்பூண்ட உரிமையாற் பல்லவர்க்குத திறை கொடா மன்னவரை மறுக்கஞ் செய்யும் பெருமையாற் புலியூர்ச் சிற்றம்பலத் தெம்மானைப் பெற்றாமன்றே? முட்டாத முச்சந்தி மூவாயிரவர்க்கு மூர்த்தி யென்னப்பட்டாரை, மலை யெடுத்த இராவணனைத் தலை பத்தும் நெரியக் காலால் தொட்டாரை உள்ளமே, கற்றாலும் குழையுமாறன்றியே கருதுமா கருதகிற்றார்க்கு எற்றாலும் குறைவில்லை என்பர்காண். மோடுடைய சமணர்க்கும் முடையுடைய சாக்கியர்க்கும் மூடம் வைத்த பீடுடையர் தருமனார் தமர் செக்கிலிடும்போது தடுத்தாட் கொள்வான் கோங்கில் அணி காஞ்சிவாய்ப் பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற்றம்பலத்தே பெற்றாமன்றே?" என்று தாம் திருப்பேரூரிற் கண்ட காட்சியையும் நினைந்து, புகழ் மாலை பாடினார். அம்பல வாணரும் திருவருள் பாலித்தார்.

வன்றொண்டர் வெளியே வந்து, தில்லை வாழந்தணர் தம்மைப் போற்ற அவ்வூரிலே சில நாள் தங்கியிருந்தனர். பின்பு பேரன்போடும் அவ்வூரை வணங்கிப் புறப்பட்டுத் திருக்கருப்பறியலூரை அடைந்தார். நம்பியார் அவ்வூரிலுள்ள கூற்றுதைத்த பெருமானார் எழுந்தருளி யிருக்கும் திருக்கோகுடிக் கோவிலை நண்ணி, கோபுரத்தைத் தொழுது, உள்ளே போய், அடியார் சூழ அளவில்லாத பெருமகிழ்ச்சி மனத்தில் உண்டாக, பெருமானைத் தொழுது, வெளியே வந்து, அவ்வூரிலே சில நாள் தங்கி யிருந்தார்.

ஒரு நாள் அவர் பெருமானார் திரு முன் சென்று வணங்கி, "நாடோறும் நீர்மூழ்கிப் பொய்யா வாய்மை

யால் நீற்றினல் விளங்கு மேனியராய்ப் போற்றிசைத்துப் பூப்பறித்து மூன்று போதும் பூசை செய்து நினைவார் தம் உள்ளத்தே நிறைந்து தோன்றும் குழகரை, திருக் கருப்பறியலூரிலே கோல் வளை யம்மையா ரோடும் கொகுடிக் கோவிலிலே எழுந்தருளி யிருந்தாரை, சொன் மாலை கொண்டேத்தி வினை போக மனத்தினல் நினைந்த போது அவர் நமக்கு இனியவாறே. தீரா நோயும் வினை யும் தீர்ந்தொழியப் பன்னளும் பாடியாடிச் சிந்தை செய்ம்மின். கண்டார்தம் கண் குளிரும் அழகிய கமு கஞ்சோலைகளையுடைய கருப்பறியலூரிலே அடியார்கள் பணிவிடை யொழியாக் கொகுடிக் கோவிலிலே உறை வாரை நினைந்தபோது அவர் நமக்கு இனியவாறே," என்று மனத்தினல் அன்பு செய்து, அதனல் அடைந்த இன்பத்தைக்கூறி, வண்டமிழ் மாலை பாடிப் பணிந்தார். சில நாள் அங்கே தங்கி யிருந்து, ஆளுடைய நம்பியார் அவ்வூரைத் தொழுது நீங்கிப் போய்த் திருமண்ணிப் படிக்கரையை யடைந்தார். அவ்வூரிலே அவர் தாள் வணங்கி,

"ஆடுமின் அன்புடையீர் ! அடிக்காட்பட்ட தூளிகொண்டு
சூடுமின் தொண்டருள்ளீர் ! உமரோடெமர் சூழவந்து
வாடுமின் வாழ்க்கைதன்னை வருந்தாமற் றிருந்தச்சென்று
பாடுமின் பத்தருள்ளீர் ! பழமண்ணிப் படிக்கரையே.

"கடுத்தவன் தேர்கொண்டோடிக் கயிலாயநன் மாமலையை
எடுத்தவன் ஈரைந்துவாய் அரக்கன்முடி பத்தலற
விடுத்தவன் கைநரம்பால் வேதகீதங்கள் பாடலுறப்
படுத்தவன் பால்வெண்ணீற்றன் பழமண்ணிப் படிக்கரையே"

தொண்டீர், புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தி யாவர்த்தம், நீலோற்பலம், பாதிரி, அலரி, செந்தாமரை ஆகிய எண்வகை மலர் கொண்டு திருமாலும் நான்முக

னும் அடியேற்றியும் அடியும் முடியும் காண்பரிய பெரியவர், நீல கண்டர் இடமாம் பழமண்ணிப் படிக் கரையைத் தொழுது பழி பாவங்கள் தீர்மின்கள்," என்று பதிகம் பாடிப் பணிந்தார். அவ்வூரிலிருந்து புறப் பட்டுப்போவார், திருவாழ்கொளி புத்தூருக்கருகே சென் றனரேனும், அவ்வூருக்குப் போகாமல், விலகிச்சென்றார்.

சேன்றவர், தாம் செய்யும் பிழையை நினைந்து, "தலைக்கலன் தலைமேல் தரித்தானை, தம்மை என்னை நினைக்கத் தருவானை, என் சிந்தையில் தடுமாற்றம் அறுப்பானை, திரிபுரம் மூன்றும் அவுணர் பெண்டிரும் மக்களும் வேவ வளைத்த வில்லுடையானை, என் சொல் முனியாதே வந்து என் உள்ளம் புகும் வாழ்கொளி புத் தூர் மாணிக்கத்தை மறந்து என்னினைக்கேனே? கான ஆனையின் கொம்பினைப் பீழ்ந்த கள்ளப் பிள்ளைக்கும் காண்பரிதாய வான நாடனை, இருந்து உண்ணும் தேர ரும் நின்று உண்ணும் சமணரும் ஏச நின்றவனை, ஆரு யிர்க்கெல்லாம் மருந்து அனையானை, மெய்யனை, மெய் யில் நின்று உணர்வானை, மெய்யில்லாதவர் தங்களுக்கு எல்லாம் பொய்யனை, வாழ்கொளி புத்தூர் மாணிக் கத்தை மறந்து என்னினைக்கேனே?" என்று பதிகம் பாடிப் போய்க் கோவிலினுள்ளே சென்று பெருமானைப் பணிந்து போற்றிப் புறம் போந்து, அவ்வூரில் சில நாள் தங்கியிருந்தார்.

பின்பு, அவ்வூரை விட்டுப் புறப்பட்டுக் காட்டுமன் னூரை அடைந்தார். அவ்வூரை அணுகும்போது சிவ பெருமானார் அவருக்கெதிரே காட்சி கொடுத்தருளினார். அப்பெருங்காட்சியைக் கண்ட நம்பியாரூரர், அன்பு

3083

மீதூர, "இறையவரை, எண் குணத்தினரை, அரு மறையின் பொருளை, பல உருவும் தம்முருவே ஆய பெருமானை, வெங்நரகத்தில் அழுந்தாமை நமக்கு மெய்ந் நெறியைக் காட்டும் வேத முதலானை, தென்னிலங்கைக் கோனைச் செற்றவரை, கொள்ளிடத்தின் கரைமேல் கானாட்டு முள்ளூரில் கண்டு தொழுதேனே," எனப் பதி கம் பாடித் தொழுதனர்.

அங்கிருந்து பல மலர்ச் சோலைகள் சூழ்ந்த திரு எதிர்கோள் பாடியை நோக்கிப் புறப்பட்டார். போகும் வழியில், "மத்த யானை ஏறி மன்னர் சூழ வருவீர்காள், செத்த போதேல் ஆருமில்லை. சிந்தையுள் வைம்மின்கள். வைத்த உள்ளம் மாற்ற வேண்டா. வம்மின் மனத்தீரே. அத்தர் கோவில் எதிர்கொள் பாடி என்பதடைவோ மே. தோற்ற முண்டேல், மரண முண்டு; துயர மனை வாழ்க்கை. மாற்ற முண்டேல், வஞ்ச முண்டு. நெஞ்ச மனத்தீரே, இன்ப முண்டேல், துன்ப முண்டு. ஏழை மனை வாழ்க்கை. தந்தையாரும் தவ்வையாரும் நமக்கு எள்ளளவும்சார்பாகார். இவ்வாழ்க்கை சென்று சென்று தேய்ந்து வீழ்ந்து ஊர்ப்புறம் சேராமுன் இம்மையேத்த அம்மை நமக்கு அருளும் ஐயர் கோவில் எதிர்கொள் பாடி என்பதடைவோமே," எனத் திருப்பதிகம் பாடிக் கொண்டு போய், அவ்வூரினுள்ளே சென்று, பெரு மானைப் பணிந்து, அங்குச் சில நாள் தங்கியிருந்தார்.

பின்னர், திருவேள்விக்குடி என்ற ஊரை அடைந் தார். அவ்வூரிலே பெருமானார் கோவிலையடைந்து, நம்பி யாரூரார், "மூப்பது மில்லை; பிறப்பது மில்லை; இறப்ப தில்லை. சேர்ப்பது காட்டகத் தூரினுமாகச் சிந்திக்கில்

அல்லால் காப்பது வேள்விக்குடி தண் துருத்தி எங் கோன் தலைமேல் ஆர்ப்பது நாகம் அறிந்தோமேல், நாமிவர்க்கு ஆட்படோமே. பித்தரை ஒத்தோர் பெற்றியர், யானைத்தோல் போர்த்துப் பல பாம்புகளை ஆட்டிக் கொண்டு உண்பதறிந்தோமேல், நாமிவர்க்கு ஆட்படோமே," எனப் பெருமானார் திருக்கோலம் மனத்தில் தோன்ற வணங்கினார். பின்னர்க் கூடலர் மன்னர் குல நாவலூர்க்கோன் அடியார்கள் தம்மைச் சூழ அவ்வூரை விட்டுப் புறப்பட்டு, வழியிலே யிருந்த பல தலங்களை விரும்பித் தொழுது, திருவாரூரை அடைந்தார்.

அத்திருவாரூரிலே சுந்தரர் கோவிலுக்குப் போய், பெருமானைப் பணிந்து, வெளியே வந்து, பரவையார் மாளிகையைச் சார்ந்தார். அப்போது அவ்வம்மையார் தம் கணவனுரை வணங்கி, "எங்களையும் நினைந்தருளிற்று," என்று கூறினர். நம்பியாரூரரும் அது கேட்டு மிக மகிழ்ந்து, பரவையார் மனங்களிக்க இனிது விடையளித்து, அங்கே வாழ்ந்துகொண்டிருந்தார். அவ்வாறு வாழ்ந்துகொண்டிருக்கையில் நம்பியாரூரர் பரவையாரை நோக்கி, "திருமுது குன்றிலே சிவபெருமானார் நமக்குக் கொடுத்த பெரு நிதியத்தை மணிமுத்தாற்றில் புகவிட்டோம். இங்கே கோவிலின் மேற்குப் பக்கத்திலுள்ள குளத்திலே அப்பொன்னை அவரருளாலே எடுத்துக்கொண்டு வருவதற்குப் போவோம்; வா," என்று கூறினார். அதனைச் செவியுற்ற பரவையார், "நீர் கூறியது மிகவும் அதிசயமாக விருக்கிறது!" எனப் புன்சிரிப்போடும் விளம்பினார். உடனே நாயனார், "பெண்ணே, இறைவ ரின்னருளால் அக்குளத்திலே

பொன் முழுவதையும் நாம் எடுத்து உனக்குத் தருவது பொய்யாது," என்று கூறி, அவ்வம்மையாரையும் உடனழைத்துக்கொண்டு, அளவில்லாத விருப்பத்தோடு பூங்கோவிலுக்குப்போய், பெருமான் கழல்பேணிக் கோவிலை வலம் வந்து, மேல் பக்கத்திலே உள்ள திருக்குளத்தை அடைந்தனர். அக்குளத்தின் வட கிழக்குக் கரைக்கு வந்து, பரவையாரை நிறுத்திவிட்டுத் தாம் கடவுளைத் தொழுது குளத்திலிறங்கி, அன்றைக்குத்தான் போட்டுத் தேடுபவர்போலச் சுந்தரனார் தேடிப் பார்த்தார். சிவபெருமான் தம்மேல் சுந்தரர் பாடும் பாட்டினை விரும்பி, அவருக்குப் பொன்னை அக்குளத்தில் வருவியாதிருந்தார். அது கண்ட பரவையார், தம் கணவனாரைப் பார்த்து, "ஆற்றினி லிட்டுக் குளத்தினில் தேடுவாருமுளரோ?" எனக் கூறினார். அதனைச் செவியுற்ற தம்பிரான்தோழர், தம் மனைவியார் நகையாடாமே பொருள் பெற விரும்பிப் பெருமானை நோக்கி, "பொன் செய்த மேனியினீர், உம்பரும் வானவரும் உடனே நிற்க எனக்குச் செம்பொன்னைத் தந்தருளித் திகழும் முதுகுன்றமர்ந்தீர், பத்தர்க்கருள் செய்யும் பரம்பொருளே, இப்பரவை வாடுகின்றாள். இவள் வாடாமே அந்தணரே, அருளீர், அடியேன் இட்டளம் கெடவே. இமையோர் தனி நாயகரே, உம்மை நான் ஏத்தாதிருந்தறியேன். இவள் வாடாமே கூத்தரே, கொடியேன் இட்டளம் கெடப் பொன்னைத் தந்தருளீர்," என்று பதிகம் பாடிப் பரவுதலும், பொன்னம்பலவர் திருவருளால் பொன் வந்தெழுந்தது. நம்பியாரூரர் அப்பொன் திரளை எடுத்துக் கரை யேற்றினார். அது கண்ட மண்ணவர் யாவ

ரும், "இந்த அதிசயம் என்னே! யார் பெறுவார் இப் பேறு?" எனக் கடவுளைத் தொழுதனர். விண்ணவர் மலர் மாரி பொழிந்தனர்.

சுந்தரர் தாம் முன் மச்சமாகக் கொண்டு வந்த பொன்னுடன் இப்பொழுது எழுந்த பொன்னை உறைத் துப்பார்க்கக் கடவுள் அருளால் உறை தாழ்ந்தது. அத ஞல், வன்றொண்டர் பெருமானைப் பின்னரும் பாடிப் பரவினர். தம்முடைய மெய்யன்பர் அன்பினுல் பாடிய பாடலைக் கேட்டுக் கூத்தனர் உள மகிழ்ந்து, அதைத்தாம் முன் கொடுத்த மாற்றுயர்ந்த பொன்னுக்கி னர். அதனைக் கண்டு தம்பிரான் தோழர் மிகமகிழ்ந்து, அப்பொன்னெல்லாம் எடுத்துக் கொண்டு கரையேறினர். பின்பு, அதைப்பல ஆட்களின்மேல் சுமத்திமாளிகைக்கு அனுப்பிவிட்டுத் தாம் பரவையாருடன் திருமூலட் டானத்துப் புகுந்து, பெம்மானைப் பணிந்து, மாளி கைக்கு வந்து மகிழ்ந்தார்.

அவ்வூரி லிருந்துகொண்டு, புற்றிடங்கொண்டார் பொன்னடிக் கமலங்களைப் பணிந்திருந்த நம்பியாரூரர், ஒரு நாள் கோவிலுக்குப்போய், தம்முடன் வந்த அடியார் களை நோக்கித் துணிவான பொருள் இதுவென வினவு வார்போல, "நமக்கு அடிகளாகிய அடிகள் மலையரையன் திருமகளாரை ஒருபங்கில் உடையரோ? அவர் தம்மைப் பற்றினர்கட்கு நல்லரோ? வல்லவாறு நினைந்து ஏத்தும் தொண்டீர், மூடனேனுக்கு உவந்து சொல்லுமின். தத் தமக்கு இசையுமாறு நினைந்து ஏத்தும் பெரியீர், நமக்கு அடிகளாகிய அடிகள் பொய்யில் மெய்யுரைத்து ஆள்வரோ? அவர் நீண்ட வாழ்வைத் தரும் பதியை

உடையரோ ? அவர் தமக்கு அடியவனாகிய நம்பியாரூரனை ஆள்வரோ?" என்று பாடல் பாடிக் கரையிலா மனமகிழ்ச்சியோடும் பணிந்து மகிழ்ந்து, இன்புற்றார். அவ்வாறு அங்கே பெருமானைப் பணிந்து வாழ்ந்து கொண்டிருக்கும் நாளில் ஒரு நாள் அவர் பேரன்போடும் பிற பதிகளையும் சென்று வழிபடப் புறப்பட்டார்.

## 12. சங்கிலியார் திருமணம்

தம்பிரான் தோழர் பரவையார் மாளிகையில் இன்புற்று வாழும் நாளையிலே ஒரு நாள் புற்றிடங் கொண்டாரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, பிற பதிகளை வணங்கச் சென்றார். பரிசனங்கள் உடன் வர, அவர் பல ஊர்களை வணங்கிச் சென்று, திருநள்ளாற்றை யடைந்தார். அங்கே உச்சிமேற் குவித்த கரத்தினராய்க் கோவிலி னுள்ளே வலஞ் செய்து புகுந்து, பெம்மான் முன் எட்டுறுப்பும் நிலமிசைப் பொருந்தப் பணிந்தார். எழுந்து நின்று அவர், "செம்பொன் மேனியில் வெண்ணீறணிவாரை, சாமவேதரை, பரசுவார் வினைப்பற்றறுப்பாரை, ஞானக்கொழுந்தினை, தஞ்சமென்று தம் தாளில் வந்தடைந்த பாலன்மேல் வந்த காலனை உருள நெஞ்சில் ஒருதை உதைத்த பிரானை, வெண்ணெய் நல்லூரில் அற்புதப் பழைய ஆவணம் காட்டி அடியனாய் என்னை ஆளது கொண்ட கற்பகத்தை, நள்ளாற்றரை, அமுதை, நாயினேன் மறந்து என்னினைக்கேனோ ? அமரர்களுடைய சேனைக்கு நாயகனான குறவர் மங்கைதன் கேள்வனைப் பெற்ற கோனை, அடியேனுக்கு எளி வந்த தூதரை, தம்மைத் தோழமையருளித் தொண்டனேன் செய்த

துரிசுகள் பொறுக்கும் நாதனை, நள்ளாற்றனை, அமுதை, நாயினேன் மறந்து என்னினைக்கேனே?" எனப் பாடிப் புகழ்ந்தார்.

நம்பி ஆரூரர் அங்கிருந்து புறப்பட்டுத் திருக்கடவூ ரை யடைந்து, திருமயானக் கோவிலுக்குப் போய், "மருவார் கொன்றை மலர் சூடி மாணிக்கத்தின் மலை போல விடைமேல் பூதப்படை சூழ மாதோடு மகிழ்ந்து வருவார், பல்லுயிருக்கும் தாமே தாயும் தாதையுமாய தலைவனார், எல்லார்க்கும் இல்லை யென்னாது அருள்செய் வார், கால காலர், கடவூர் மயானத்துப் பெரிய பெரு மான் அடிகளே. உலகேழு முடையார்க்கும் ஊர்தானு வது ஒற்றியூர், ஆரூர். அடியாருக்குப் பிடை தீர அரு ளும் பெருமான் கடவூர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே," எனப் பாடிப் பணிந்தார். பின்பு அவ்வூரி லுள்ள சினக் கூற்றின் பொரு வீரம் தொலைத்த திரு வீரட்டானக் கோவிலை யடைந்து, "பொடியார் மேனி யரே, அன்று ஆலின் நிழற்கீழ் நால்வர்க்கு அறம் அருள் புரிந்து காலனைக் கொன்றீர்; மறையோனுக்கு உயிர் கொடுத்தீர். கடவூர்தன்னுள் வீரட்டானத்து எம் இறைவரே, இன்னமுதே, நீரல்லாது எனக்கு யார் துணை? பொய்யாது எனது உயிருள் புகுந்தீர்; இன் னும் வெளிப் போந்தறியீர். சிவனாரே, என் செஞ்சுடரே, உம் அடியேன் உம்மை யல்லால் பிறதெய்வம் தேறேன். கடவூர்த் திருவீரட்டத்து எம் அண்ணல், அமுதே, நீரல்லாது எனக்கு யார் துணை?" என்று புகழ்மாலை பாடிப் போற்றி, அங்கிருந்தும் புறப்பட்டுத் திருவலம்புரத்துக்கு வந்து சேர்ந்தார். அங்கே பெருமான் முன்பெய்தி,

"எனக்கு இனித் தினைத்தனை புகலிடம் அறிந்தேன். எனக்கு இனியவர் அவர், தமர்க்கு இனியவர், ஏழைமை யும் என் மனத்துக்கு இனியவர். எங்களது பெருமான் இடம் தெங்கொடு பனம்பழம் படும் தடங் கடற்கரை மேல் வலம்புரமே," எனப் போற்றினர்.

அங்கிருந்து புறப்பட்டுக் கடற்கரை வழியாகப் போய்த் திருச்சாய்க்காடு என்ற ஊரை அடைந்து, சிவ பரம் பொருளைப் பாடிப் பணிந்து, திருவெண்காட்டினை அடைந்தார்.

திருவெண்காட்டில் நாவலூரர் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் கோவிலை அடைந்து, "கடல் சூழ்ந்த திருவெண்காட்டில் எழுந்தருளியிருக்கும் பெரு மானே, நீர் முன் கல்லால மர நிழலில் நால்வருக்கு அருள் செய்யக் கொண்ட உயர்ந்த தவத்தை விண்ண வர் வேண்டுகோளுக்கு இணங்கி அழிக்கவந்த காமவேளை அவனுடைய தாதை காண விழித்து எரித்த வெற்றி யென்னே? வெண்காடனீரே, குடமெடுத்து நீரும் பூவுங் கொண்டு தொண்டர் ஏவல் செய்ப அவர்களுக்கு நீர் நடம் எடுத்து ஆடிப் பாடி அருள் நல்குவீர். நீர் கடல்வாய்த் தோன்றிய நஞ்சை மிடற்றில் வைத்த தென்னே? கருத்தில் உம்மைப் பரவும் என்மேல் பழி களைப் போக்கி அருளும்," எனப் புகழ்ந்து பாடினர்.

பின்பு, நாவலர் பெருமான் திருநனிபள்ளி என்ற ஊரை அடைந்து, கோவிலுக்குப் போய், கடவுள் பொன்னடி மலர் பணிந்து, "ஆதியர், ஆதிரையர், எவ் வுயிர்க்கும் நாதியர், எம்பிரான் நண்ணும் ஊர் நனி பள்ளியதே. ஊனமில் சீர்காழிதன்னுள் உயர் ஞான

சம்பந்தருக்கு அன்று ஞானம் அருள் புரிந்தார், நங்கள் பிணி களைவார், அரு மாமருந்து நண்ணும் ஊர் நனி பள்ளியதே,'' எனப் புகழ்ந்தார்.

அதன் பின் அவர் திருச்செம்பொன்பள்ளி முதலிய பல ஊர்களையும் வணங்கிப் போய்த் திருநின்றியூரை அடைந்தார். அங்கே தலைவனை வணங்கி, "தென் திருநின்றியூரரே, நீர் உம்முடைய திருமுடிக்குமேலே வலைப்பந்தரிட்டுப் பணி செய்த சிலந்தியைக் கோச்செங் கண்ணனாக்கி அவனுக்குத் திருவும் வண்மையும் திண் திறல் அரசும் கொடுத்த வார்த்தை கேட்டு, நும்மலரடி அடைந்தேன். செல்வத் தென்றிருநின்றியூரரே, உல கெல்லாம் இடர் நீங்க நாலாயிரத்துத் தொள்ளாயிரம் பாடல்கள் பாடிய திருநாவுக்கரசர்க்கும் உம்மீது அன்பு கொண்ட கண்ணப்பருக்கும் தண்டியடிகளுக்கும் நீர் செய்த பேரருள் தெரிந்து, நும் திருவடி அடைந்தேன். முந்நூற்றறுபது வேலி நிலமும் முந்நூறு அந்தண ரும் இந்நின்றியூரும் உமக்குப் பரசிராமன் பொன்மணிக் கலசங்கள் ஏந்தியளிப்ப அவனுக்குப் பாதங்காட்டியும், விடிவதன் முன்னெழுந்து ஒரு பசு பால் சொரிந்து உம்மை ஆட்டி வழிபட அதற்கு அருளியும், அகத்தியர் தமக்குத் திருப்பொதியில் சேர்வும் செல்வமும் நல்கி யரு ளியும் காத்த நும்முடைய பேரருட் செயல்களைக்கேட்டு வந்து, நும் இணையடி அடைந்தேன். திருவருள் புரிவீர்'' என்று திருப்பதிகம் அருளிச் செய்தார்.

அவர் அவ்வூரிலே அன்பர்களுடனே சில நாளிருந் தார். ஒரு நாள் அவர் பெருமான் முன் பணிந்து, "பலர் விரும்பும் கொற்றவனார், நேசத்தினால் என்னை

ஆளும் கொண்டார், வஞ்சங் கொண்டார் மனத்தில் சேரகில்லார், மலர்ப்பூசை இச்சிக்கும் இறைவர், கழல் பேண வல்லார் சீலமும் செய்கையும் கண்டு உகப்பார், மாலொடு நான் முகனும் இந்திரனும் மந்திரத்தால் வணங்க நீல நஞ்சு உண்டவர், அடியார்க்கு அணியவர் ஊர் திருநின்றியூரே," என்று புகழ்ந்து பாடி, அவ்வூரினின்றும் புறப்பட்டுப் போகும்பொழுது திருநீடூருக்கருகே சென்றனரேனும், அதனைப் பணியாது சென்றார். ஆனால், தாம் செய்யும் பிழையைத் தம்முடைய ஒப்பற்ற உணர்வினால் நினைந்து, தொழுவதற்காகத் திரும்பி வந்தார். வரும் வழியில் பெருமானை நோக்கி, "எனக்கு இன்னருள் எய்துவிப்பாரை, நாளும் நான் உகக்கின்ற பிரானுரை, நன்னெறி காட்டித் துன்பத்தில் அருளே புரிவாரை, நீடூர்ப் புனிதரைப் பணியாமல் விடலாமோ ?

"துற்ற மொன்றடி யார்இல ரானல்
கூடு மாறத னைக்கொடுப் பானைக்
கற்ற கல்வியி லும்இனி யானைக்
காணப் பேணு மவர்க்கெளி யானை
முற்ற ஐஞ்சும் துறந்திருப் பானை
மூவ ரில்முத லாயவன் றன்னைச்
சுற்று நீள்வயல் சூழ்திரு நீடூர்த்
தோன்ற லைப்பணி யாவிட லாமே?"

நான் அவரைப் பாடி ஆடும்படி அருள் செய்தவரை, என்னுடைய பற்றோடு சுற்றத்தாரையும் ஒழித்தவரை, என்னுடைய மாயமாய மனத்தைக் கெடுத்து அதனுள் மதியாய் இருப்பவரை, தொண்டரைப் பெரிதும் உகப்

பாரை, பண்டை வல்வினை கெடுப்பாரை, அடைந்தார்க்கு அமுதாயிடுவாரை, நல்லவர்க்கு அணி யானவர் தம்மை, நாளும் காதல் செய்கின்ற பிரானை, பேரினால் பெரிதும் இனியாரை, கேண்மையால் பணியாமல் விடலாமோ ?" என உடல் புளகிக்கத் தொழுது, அங்கே சில நாள் தங்கியிருந்தார்.

ந்தும் புறப்பட்டுத் திருப்புன்கூரைப் பணிந்து, சோலை பல சூழும் திருக்கோலக்காவை அடைந்தார். அங்கே பெருமானார் அவருக்கெதிரே காட்சி கொடுத்தருளினார். அக்காட்சியைக் கண்ணாரக் கண்டு, கைகள் தலைமேலேற, "எனக்கு எளி வந்த பாவ நாசரை, குமரனைப் பயந்த பிஞ்ஞகரை, அன்று வந்தென்னை அகலிடத்தவர்முன் ஆளதாக என்று ஆவணங் காட்டி நின்று வெண்ணெய் நல்லூர்மிசை ஒளித்த பித்தரை, நிரம்பு பல்கலையின் பொருளாலே போற்றி செய்து தம் கழலைத் தொழும் அந்தணனாகிய மார்க்கண்டன் உயிரைப் போக்குவான் வந்த கூற்றை மிதித்துத் தீங்கு செய்த குரை கழலாரைக் கோலக்காவினில் கண்டு கொண்டேனே. இன்னிசையால் நாளும் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தருக்கு உலகத்தவர்முன் தாளம் ஈந்து அவர் பாடலுக்கு இரங்கும் தன்மையாளரை, எட்டுக் கணங்களும் இறைஞ்சும் கோளிலிப் பெருங் கோயிலுள்ளாரை, அரக்கனாற்றல் அழித்து அவன் பாட்டுக் கன்றிரங்கிய வென்றியினாரை, குரக்கினம் குதிகொண்டு உகள் வயல் சூழ் கோலக் காவினில் கண்டு கொண்டேனே," எனப் போற்றிசைத்துப் புகழ்ந்து பாடினார்.

திருக்கோலக்காவி லிருந்தும் புறப்பட்டுச் சீர்காழியை வலம் கொண்டு வணங்கி, பெருமான் பதிகள் பலவற்றையும் பணிந்து சென்று, திருக்குருகாவூரை நோக்கி நடந்தார். அப்போது தம்பிரான் தோழருக்கு நீர் வேட்கை மிகு பசியுடன் தோன்றி வருத்திற்று. அதனால், அவர் உடல்வாடி, மெலிவடைந்தார். அதனை அறிந்த சிவபெருமானார், அவருக்குத் தண்ணீரும் பொதி சோறும் கொண்டு, அவ்வழியே வந்தார். வந்தவர், தம் தோழருக்கு முன்னாலே ஒரு குளிர்ந்த தண்ணீர்ப் பந்தரை அமைத்து, அதிலே ஓர் அந்தணராகி, அவரை வழி பார்த்திருந்தார். வன்றொண்டர் தொண்டருடன் வந்து, அப்பந்தலிடைப் புகுந்து, "சிவாய நம," எனப் பேசி, பெருமான் முன் சென்றிருந்தார். அப்போது குருகாவூர்க் குழகர் அவரை நோக்கி, "நீர் மிகவும் பசித்திருக்கின்றீர். ஆதலின், இப்பொதி சோற்றை உமக்குத் தருகின்றேன். இதனைத் தாமதியாமல் இனிதுண்டு இக்குளிர்ந்த தண்ணீரைக் குடித்து, இளைப்புத் தீரும்," என்று சொன்னார். அதனை மறுத்தல் ஆகாதெனஇசைந்தருளிய நம்பியாரூரர், அவ்வந்தணர் தந்த பொதி சோற்றை வாங்கிப் போய்த் தம்முடன் போந்த தொண்டருடன் திருவமுது செய்தார். அவ்வமுதை எல்லையற்ற பரிசனங்களும் உண்டார்கள். பின்பு அவ்வழியே பசித்து வந்த வழிப்போக்கர் எல்லாரும் உண்டனர். பின்னும் அப்பொதி சோறு குறையாது விளங்கிற்று. எல்லோரும் பின்பு இனிய தண்ணீரைப் பருகி, சிவபெருமானைப் புகழ்ந்து, அப்பந்தலிலே துயில் கொண்டனர். அப்போது பெருமானார் அப்பந்தரோடும் மறைந்தார்.

மன நிலை திரியாது துயின்ற திருநாவலூரார் அப்போது பள்ளி உணர்ந்து எழுந்து, அப்பெரியவரைக் காணாது, "இத்தனையாமாற்றம் ஆறிந்திலேன். எம்பெருமான், உம்மைப்பிறர் எல்லாம் பித்தரே என்று பேசுவர்; எனது ஆவியைப் போகாமே தவிர்த்து நீர் என்னை ஆட்கொண்டீர்.

"பாடுவார் பசிதீர்ப்பாய்! பரவுவார் பிணிகளைவாய்!
ஓடுநன் கலனாக உண்பலிக் குழல்வானே!
காடுநல் லிடமாகக் கடுஇருள் நடமாடும்
வேடனே! குருகாவூர் வெள்ளடை நீயன்றே?"

நானுற்ற வெப்பொடு பிணியெல்லாம் தவிர்த்துப் பழி வாராமே என்னை ஆட்கொண்டீர். பண்ணிடைத் தமிழ் ஒப்பீர். அடியார்கள் மனத்து இடர்வாராமே காப்பீர். செழுங்கனி நிறைந்த பொழில்கள் சூழ்ந்து வளம் மல்கும்வயல் அணிந்து அழகாய ஒளி விளங்கும் குருகாவூர் வெள்ளடை நீவிரன்றே?

" போந்தனை தரியாமே நமன்தமர் புகுந்தென்னை
நோந்தனை செய்தாலும் நுன்னலந் தறியேன்நான்
சாந்தனை வருமேலும் தவிர்த்தென்னை ஆட்கொண்ட
வேந்தனே! குருகாவூர் வெள்ளடை நீயன்றே?"

என்று பாடித் தொழுது குருகாவூரை நோக்கி நடந்தார். அவ்வூரின் கோவிலையடைந்து, கோபுரத்தைக் கும்பிட்டு, உள்ளே புகுந்து, பேரன்பு மிக வலம் வந்து, திருமுன் நின்று வணங்கிப் பெருமானுடைய திருக்காட்சியைக் கண்களால் பருகிக் கையாரத் தொழுது இறைஞ்சினார். அங்கே பெருமான்மேல் திருப்பதிகம் பாடி வணங்கி,

தொண்டர்களோடும் அவ்வூரிலே சில நாள் மகிழ்ந்திருந்தார்.

அந்நாளிலே பெருமான் திருவருள் செய்ய, அவ்வூரினின்றும் புறப்பட்டு, பல இடங்களையும் பணிந்து, திருக்கழிப்பாலை என்ற ஊரை அடைந்தார். அங்கே பெருமான் திருமுன் சென்று நின்று,

"எங்கே னுமிருந்துன் அடியேன்உனை நினைந்தால்
அங்கே வந்தென்னொடும் உடனாகி நின்றருளி
இங்கே என்வினையை அறுத்திட் டெனையாளும்
கங்கா நாயகனே! கழிப்பாலை மேயானே!"

அடியேன் பிழை செய்தக்கால், நும்மருளால் ஒறுத்து, நாயேனைப் பொருட் படுத்திப் பொறுத்தீர் மண மலர் தூவி நின்று அன்புக் கண்ணீர் அரும்பா நிற்கும் மனத்தினையுடைய அடியாரோடும் அடியேனும் அன்பு செய்வேன். உம்மை யல்லால் ஒரு தெய்வம் என் மனத்தால் விரும்பேன். விலை ஆவணமுடையீர், என் வினையை ஒழிப்பீர்; உகப்பீர்; முனிந்தருளி அடியேனைத் தெழிப்பீர்; மோதுவிப்பீர். தொண்டு செய்வார் வினைகளவை போகப்பார்த்தாருக்கிடமாம் பழியில் கழிப்பாலையதே.

"பொய்யா நாவதனால் புகழ்வார்கள் மனத்தினுள்ளே
மெய்யே நின்றெரியும் விளக்கேஒத்த தேவர்பிரான்
செய்யா னும்கரிய நிறத்தானும் தெரிவரியான்
மையார் கண்ணியொடும் மகிழ்வான்கழிப் பாலையதே."

என்று புகழ்ந்து, பாமாலை புனைந்தேத்தினார்.

பின்பு நாவலூரர் தில்லைமா நகரம் வந்தடைந்தார். தில்லையிற் கூத்தரைப் பணிந்து, சில நாள் அங்கிருந்த

தம்பிரான் தோழர், திருத்தினை நகர் அடைந்து வணங்கி, பல ஊர்களையும் தொழுதுகொண்டு போய்த் திருநாவலூரை அணுகினார்.

திருநாவலூர்க் கோமான் எழுந்தருளி வருகின்ற செய்தியை அறிந்த அவ்வூரார் அனைவரும் தங்களுக்குப் பெருவாழ்வு வரு நாள் அந்நாளென்று நினைந்து, தம் மூரை அணி பெறச் செய்து, எதிர்கொண்டு வந்து, அவரைத் தம்மூரினுள் அழைத்துச் சென்று, கோவிலி னுள்ளே புகுந்தனர். சுந்தரனார் முதல்வனார் முன் பெய்தி, தம்முயிரினும் இனிய பெம்மானார் அடி போற்றி,

“ தன்மையி னால்அடி யேனைத்தா
மாட்கொண்ட நாட்சபைமுன்
வன்மைகள் பேசிட வன்றொண்டன்
என்பதோர் வாழ்வுதந்தார்
புன்மைகள் பேசவும் பொன்னைத்தந்
தென்னைப்போ கம்புணர்த்த
நன்மையி னார்க்கிட மாவது
நந்திரு நாவலூரே.”

ஓர் ஆவணத்தால் திருவெண்ணெய் நல்லூரில் வேதிய ராகி வந்து என்னை ஆளும் கொண்டார். நம் நாதருக்கு ஊர், நமக்கு ஊர், நரசிங்க முனையரையன் ஆதரித்து ஈசருக்கு ஆட்செய்யும் ஊர், நம் திருநாவ லூரே,” என்று பாடிப் பெருமானைக் கும்பிட்டார். அவ் ரில் விருப்பத்தோடும் தொண்டர்களோடு சில நாள் நார்.

ஒரு நாள் பெருமானை வணங்கி, அருள் பெற்றுப் பிற ஊர்களையும் சென்று வணங்க நினைந்தார். நம்பியாரூரர் பல இடங்களுக்கும் அவ்வூரார் எதிர் கொள்ளச் சென்று, தொண்டை நாட்டில் புகுந்து, திருக்கழுக்குன்றை அடைந்தார். அவ்வூரவர் அவரை எதிர்கொண்டழைத்தனர். அவர் மதி யணிந்த சுடர்க் கொழுந்தின் கோவில் புகுந்து, பணிந்து, "உலகத்தீரே, நீவிர் கொன்று செய்த கொடுமையால் பெருமானிடம் பணிந்து பல சொல்லவும், நின்ற பாவமும் வினைகளும் நீங்கவும், சென்று சென்று கன்றிஞேடு பிடி சூழ் தண்கழுக்குன்றம் தொழுமின். ஊனமில்லா அடியார்கள் மனத்திலே ஞான மூர்த்தியாய் நம் பெருமான் நட்டமாடி நவிலும் இடம் கல்லில் வெள்ளை அருவி பாய் தண் கழுக்குன்றமே," என்று புகழ்ந்து, திருப்பதிகம் பாடி அவ்வூரில் சில நாள் தங்கியிருந்தார். அங்கிருந்தும் புறப்பட்டுத் திருக்கச்சூரை அடைந்தார்

அவ்வூரிலே பொன் மயமாக விளங்குகின்ற மதில்கள் புடை சூழ்ந்த ஆலக்கோவிலில் எழுந்தருளியிருக்கும் விருந்திட்ட பெருமானை வணங்கி, அன்புருகக் கும்பிட்டுக் கோவிலுக்கு வெளியே வந்தார். அப்போது உண்ணும் நேரமாக, நம்பியாரூரருக்குப் பசி வருத்தம் மிக்கது. அமுது சமைக்கும் பரிசனரும் அவண் வந்து சேரவில்லை. அதனால், மிகுந்த களைப்போடும் வன்றொண்டர் திருமதிலுக்கு வெளியே யிருந்தார். அது கண்டு மலையின்மேல் மருந்துபோல விளங்கும் சிவனார், ஓர் அந்தணராகி, கையில் ஓடொன்றை ஏந்திப் புறப்பட்டுத் தம் நண்பர் முகம் நோக்கி, அருள் கூர்ந்து,

"மிகுந்த பசியால் வருந்தி நீர் மிகவும் இளைத்திருக்கின்றீர். இவ்வூரில் சென்று சோறு இரந்து வாங்கி வருகின்றேன். இவ்விடத்தை விட்டு அகலாமல் சிறிது பொழுது இங்கேயே இரும்," என்று கூறிப் போய், அவ்வூர் மனை தோறும் உண விரந்தார். அந்த நடுப்பகலிலே பார்த்தவர் மனமுருகும்படி வீடு தோறும் நடந்து சென்று, சோறு கொண்டு, அன்பர் முன் வந்தார். தாம் கொண்டு வந்த இன்னடிசிலையும் கறியையும், "உமக்குத் துன்பம் தரும் பசி தீர அருந்துவீர்," என்று கொடுப்ப, தம்பிரான் தோழர் அதனைப் பேரன் போடும் தொழுது, அவ்வந்தணர் பேரருளை வியந்து, வாங்கினர். நம்பியாரூரர் அவ்வமுதை அப்பொழுது தம்மை வந்து சேர்ந்த அடியார்களோடும் உண்டு மகிழ்ந்தார். அவ்வேளை எல்லாப் பொருளினும் நிரம்பிய நிலையினரான கடவுள், அவர் முன் நிற்பவர் போலத் தோன்றி, அவர் அறியாமே திடீரென்று மறைந்தருளினர். நாவலூர் மன்னர் அதுகண்டு தமக்கு அமுதளித்த சிவ யோகியார் சிவனரே எனத் தெளிந்து, "ஐயோ! பெருமானர் தமது சிலம்பணி சேவடி வருந்த இப் பெரும்பகற் பொழுதில் என் பொருட்டு உருக்கொடு எழுந்தருளினரே!" என மன முருகினர். "கடவுள் பேரருளே இது," எனக் கண்ணீர் வார, உடல் புளகிக்க, "கச்சூர் வடபால் ஆலக்கோவில் அம்மானே, பாம்பை அரையில் கட்டிக் காலில் கழலும் சிலம்பும் ஒலிக்கப் பலிக்கென்று எழுந்து நீர் ஊர் ஊராகத் திரியக் கண்டால் உம்மடியார் உருகாரோ? காலையிலெழுந்து தொழுபவர் தங்கள் கவலைகளைக் களையும் அம்மானே, மலைமேல்

மருந்தே, உம் திருவடி என் தலைமேற் கொண்டு, ஆடி, மயக்கம் தீர்ந்தேன்; வினையும் துறந்தேன். தலையில் நீர் பலி கொள்ளக் கண்டக்கால் அடியார் உருகாரோ? உம்மைப் புகழ்வார் பொய்யே புகழ்ந்தால் அதுவும் பொருளாகக் கொள்ளும் ஆலக் கோயில் அம்மானே, மெய்யே உம்மை நினைப்பவரை நினைந்தருளும். உணர் வில்லேன், ஊனைப் பெருக்கி உம்மை நினையா தொழிந் தேன். அன்புடன் மகிழ்ந்து மண மாமலரிட்டு உம்மை யேத்தும் அடியாரிருக்க, நீர் ஐயம் கொள்வது அழகி தோ? உம்மை மறவேன், உமையாள் கணவரே, என்னை ஆளும்," எனப் போற்றிசைத்துப் பாடி, மகிழ்ந்து வணங்கினர்.

நம்பியாரூரர் அவ்வூரில் அடியார்கள் எதிர்கொள் ளச் சென்று, முக்கட் பெருமானைப் பணிந்து பாடி, அவ்வூரின் நீங்கிக் காஞ்சியை அடைந்தார். அந்நகரார் அனைவரும், "அன்று திருவெண்ணெய் நல்லூரில் அயனும் அரியும் அறிவரிய தலைவர் அந்தணராய் வந்து நின்று சபை முன் வழக்குரைத்து நேரே பற்றி ஆட் கொள்ளப்பெற்ற அடியார் இன்று இங்கெழுந்தருள யாம் பெரும்பேறு பெற்றேம்," என மகிழ்ந்து, அவ் வூருக்கு வெளியே வந்து, அவரை எதிர்கொண்டழைத் தனர். தம்பிரான் தோழரும் அவர்களோடும் திரு ஏகாம் பரம் சென்றடைந்தார். அங்கே பொன் மயமாக விளங் கும் கோவிலினுள்ளே புகுந்து, கம்பை ஆறு பெருகி வர அஞ்சித் தம் கணவனைத் தழுவிக்கொண்டிருந்த மலை மகளார் என்றும் வழிபாடியற்றும் சேவடிக்கீழ்ப் பெருங் காதலோடும் வீழ்ந்து பணிந்தார். அவ்வாறு கீழ் வீழ்ந்

தெழுந்தவர் கரையிலாக் காதலால் விம்மி மெய்யன்போ டும் பாடிப் புறம் போந்து, அவ்வூரில் தங்கி யிருந்தார். அந்நாளில் அக்கச்சி நகரிலிருந்த பல கோவில்களையும் சார்ந்து வணங்கினர். ஒரு நாள் அக்காஞ்சியிலுள்ள காமக் கோட்டம் சென்று பணிந்து, திருமேற்றளியை அடைந்து மதிசூடியரைப் பணிந்தனர். பணிந்து அவரை நோக்கி, "ஒண்சுடரே, உமையே நினைந்திருந்தேன். உமக்கு நான் ஆட்பட்டமையால், உம்முடைய அடியாருக்குத் தொண்டு செய்தேன். ஓர் ஒருகால் மறந்து உம்மை நினையாதிருந்தாலும், யான் அறியாதே வந்து என் உள்ளம் புகவல்ல மெய்ப்பொருளே, என்னுடைய உற்றார் சுற்ற மெல்லாம் விட்டுவிட்டு, உம்முடைய பொன் னடியை அடைந்தேன். ஆதலின், எனக்கொரு குறையு மில்லை. பெம்மானே, உம்மையல்லால் நான் பெரிதேத்த மாட்டேனே! அடியேன் உம் அடியே நினைந்தேன். அதனல், ஒண்சுடரே, நீர் என் ஊனுர் இவ்வுடலம் புகுந்தீர். விமலரே, இனி உம்மையல்லால் புகழ்ந்துரை யேன். ஆதலினல், உடலில் உயிர் உள்ளளவும் தலை வரே, பாரூர், பல்லவனூர், காஞ்சிமாநகர் வாய்ச் சீருரும் புறவில் திருமேற்றளியுறையும் மலையே, உம்மை யல்லால் பணிந்தேத்த மாட்டேனே!" எனப் புகழ்ந்து பாடினர்.

மற்றொரு நாள் திருஓணகாந்தன்றளியை மேவி வணங்கி, "ஓணகாந்தன் றளியுளீரே, நெய்யும் பாலும் தயிரும்கொண்டு நித்தம் பூசனை செயயலுற்றார். கையில் ஒன்றும் காணமில்லை. அடியேன் உய்யுமாறு ஒன்று அருளிச் செய்யும்.

3083

“பெற்றபோதும் பெறாதபோதும்
பேணியுங்கழல் ஏத்துவார்கள்
மற்றோர்பற்றிலர் என்றிரங்கி
மதியுடையவர் செய்கைசெய்வீர்
அற்றபோழ்தும் அலர்ந்தபோழ்தும்
ஆபற்காலத்(து) அடிகேள் ! உம்மை
ஒற்றிவைத்திங் குண்ணலாமோ
ஓணகாந்தன் தளியுளீரே !”

என் குறைகளை எல்லாம் சொல்லி உம்மை வாழ்த்தினலும், நீர் வாய் திறந்து ஒன்று இல்லை என்னீர்; உண்டும் என்னீர்; தொண்டர்கள் கூடிக் கூடி ஆடிப்பாடி, அழுது மனமுடைந்து, அன்பு செய்தால், அவர்க்கு இன்பம் தாரீர். உம்மைத் தேடித் தேடித் திரிந்து நான் எய்த்தாலும், உம்முடைய சித்தத்தை என்பால் வைக்கமாட்டீர்; ஓடிப் போகீர்; என் முன் இருந்துகொண்டு, நான் கேட்பதும் தாரீர். ஓணகாந்தன் றளியுளீரே, உலகத்தா ரெல்லாரும் வந்து, தாம் விரும்பிய பொருளை யெல்லாம் பெற்று உண்டு மகிழக் கூடிய காமக் கோட்டத்தை மலைமகளார் வைத்திருக்க, நீர் போய் ஊரிடும் பிச்சை கொள்வதென்னே? மெய்ம்மை சொல்லி ஆளமாட்டீர், உமக்கு அடிமையாகிப் பணி செய்யும் தொண்டர் உம்மிடம் பெறுவதென்னே? உமக்கு மாலை பாம்பு; நீர் வாழ்வதோ, திருவாரூர்; ஒற்றியூரோ, உம்முடையதன்று; உம்முடைய ஊர் காடு; உம் உடையோ, தோல். ஆவணம் செய்தாளும் கொண்ட ஓணகாந்தன் றளியுளீரே,” என்று பாடி வேண்டினர்.

சிவபெருமான் அவருக்கு அளவற்ற பொருளைத் தந்தார். அப்பொருளைப் பெற்று அவ்வூரில் இனிதமர்ந்

திருந்த சுந்தரனார், ஒரு நாள் அவ்வூரிலுள்ள திருக் கச்சி அநேகதம் காவதம் என்ற கோவிலை அடைந்து, உள்ளேபோய்ப் பணிந்து, "தேனும் நெய்யும் புரிந்தழலும் செஞ்சடையையுடைய எம்பெருமான் எழுந்தருளி யிருக்குமிடம் கலிக்கச்சி அநேகதம் காவதமே; அது பெருமான் தங்கு மிடமாம்," எனப் பாடித் தாழ்ந்து, அவ்வூரிலுள்ள கோவில்களையும் பேரன்போடு போற்றி செய்து, அவ்வூரிலே வாழ்ந்துகொண்டிருந்தார். ஒரு நாள் அவருக்குப் பிற பதிகளையும் சென்று வணங்கும் எண்ணம் உண்டாயிற்று. அதனால், அவர் அவ்வூரை விட்டுப் புறப்பட்டு, திருவன்பார்த்தான் பனங்காட்டூரை அடைந்தார். அங்கே தலைவனாரை வணங்கி, "விடை யின்மேல் வருவாரை, அடையில் அன்புடையாரைச் சாராதார் சார்பென்னே? வன்பார்த்தான் பனங்காட்டூ ருறையும் எங்கள் பிரானாரை உணராதார் உணர்வென் னே? நாண்மலர் கொண்டு அங்கு இசைந்து அடியார்கள் ஏத்தும் பிரானைப் பேசாதார் பேச்சென்னே? உருகில் உள் உறைவாரைப் பரவாதார் பரவென்னே? பனங் காட்டூரில் எழுந்தருளியிருக்கும் தலைவருக்குத் தொண்டு செய்யப் பயிலாதார் பயில்வென்னே? அவரை அறியா தார் அறிவென்னே? நினைந்தெழுவார் நெஞ்சத்தே குடி கொள்ளும் பெம்மானை நினையாதார் நினைவென்னே?" என்று அன்புருகத் தமிழ்ப் பாமாலையை நல்ல இசையி னுடன் பாடினார்.

பிறகு அவ்வூரிலிருந்தும் புறப்பட்டுத் திருமாற் பேறு, திருவல்லம் முதலிய இடங்கள் பலவும் பேணிச் சென்று, திருக்காளத்தி மலையை அடைந்தார். மட்டி

லடங்காத பேரன்பினால் கண்ணப்பி நின்ற திண்ணப்ப ரின் துன்பம் களைந்து ஆட்கொண்டருளும் இறைவனார் மகிழ்ந்தெழுந்தருளி யிருக்கும் காளத்தி மலையின் அடியை அடைந்து பணிந்து, பெருமானருளால் அம் மலைமேல் ஏறித் திருமுன் சென்று, மலைமேல் மருந் தைக் கும்பிட்டார். கும்பிட்டு அன்புருக, நம்பியா ரூரர், " இறைவரே, என் இடர்த்துணையே, என்னுடைய குருவே, உம் குற்றேவல் செய்வேன். நும் அடியார் நினைக்கும் திருக்காளத்தியுள் அறிவே, உம்மை யல்லால் அறிந்தேத்த மாட்டேனே ! அடியேன் பொய்யவனைப் போவதற்கு வேறு நெறி யொன்றறியேன். கடியேன் உம் திருவடி அறியாத அடியேன். உள்ளமே குடியாக் கோவில் கொண்ட என் குணக் கடலே, நாவதனால் நும்மை யன்றி மற்றுக் கூறேன். வண்டொலிக்கும் பொழில்சூழ் திருக்காளத்தி யுள்ளிருந்த ஒளியே, உம்மை யல்லால் இனி ஒன்றும் உணரேனே !" என்று புகழ்ந்து பாடினார். பின்பு கண்ணப்ப நாயனாரது மலர்ச்சேவடியை யும் பணிந்து, வாழ்வடைந்து, அவ்வூரிலே தொண்டர்க ளோடும் இன்புற்றிருந்தார். அந்நாளில் ஒரு நாள் அம் மலைக்கு வடக்கே இருந்த திருப்பருப்பதத்தை நினைந்து, " மானும், மறையும், மயிலினமும் கலந்து பல இடங் களிலும் தாமாகவே சென்று மேய்ந்து, தடஞ்சுனை நீரைப் பருகி, பூமா மரங்களில் உரிஞ்சி, பொழிலின் உள்ளே புகுந்து, நிழலில் தூங்கு மிடம் சீபருப்பத மலையே. தினைப் புனங் காக்கும் மகளிர், தினைக்கதிரை உண்ணவரும் கிளிகளைப் பார்த்து, ' அப்போது நீங்கள் வந்துண்டீர்கள். நான் கூவாதிருந்தேன். எப்போதும்

வந்துண்டால் எங்களை யமைச்சேர்ந்தோர் முகம் சுளித்துக் கண்டியாரோ? இப்போதும் வந்து உண்ண வந்தீர்," என்று கூவி, ஓடிக் கிளிகளை ஓட்டு மிடம் சீபருப்பத மலையே," என்று புகழ்ந்து பாடினார். மற்றொரு நாள் சீபருப்பதத்திற்கு வடக்கே இமய மலையின் அடிவாரத்திலேயுள்ள திருக்கேதார மலையை நினைந்து,

"வாழ்வாவது மாயம்இது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய்த பறிதான்
தாழாதறம் செய்மின்தடங் கண்ணான்மல ரோனும்
கீழ்மேலுற நின்றான்திருக் கேதாரமெ னீரே."

வயிற்றையும் வாயையும் கட்டிப் பணத்தை ஈட்டி, அதனை இழப்பாரும் சிலராவர். தவமாவது செய்ம்மின். கடல் சூழ் இலங்கைக்கு இறை மலங்குமாறு மலையை மிதித்து, அவனுக்கு வரம் தந்திருந்த பெருமானிடம் கேதார மெனீரே," என்று பாடி, "நாவின்மிசை அரையரொடுந் தமிழ் ஞான சம்பந்தர் யாவர் சிவனடியார்களுக்கு அடியான் அடித்தொண்டன்," என்று தம்மைச் சிவனடியார்களுக்கு அடிமையாகவும் கூறினார்.

திருக்காளத்தியிலே சில நாள் தங்கி யிருந்த பின், அதனை நீங்கி, வழியி லிருந்த பல இடங்களையும் வணங்கிப் பாடிக்கொண்டு, கடற்கரையிலே சிவலோகம் விளங்கிக்கொண்டிருக்கும் திருவொற்றியூரை அணுகினார். அதனை அறிந்த அவ்வூரார் அனைவரும் வாழை, கமுகு, தோரணங்களால் ஊரை அணி பெறச் செய்து, நல்லியம் முழங்க எதிர் கொண்டனர். அன்பரும் அவர்களோடும் அவ்வூரினுள்ளே புகுந்தார். புகுந்து, கோயிலை யடைந்து, வானுற ஓங்கி அதனை அளந்து

நின்ற கோபுரத்தைப் பணிந்து, கோவிலை வலம் கொண்டு, பெருமானார் திருமுன்பெய்தி, ஊனும் உயிரும் கரைந்துருக, உச்சியிற் குவித்த செங்கையுடன் பேரன் போடும் கீழே வீழ்ந்தார். வீழ்ந்தவர் எழுந்து நின்று, தம்மைப் பெருமான் மனைவியாரைப்போலக் கருதி, பெருமானை நோக்கி, "பாட்டிப் பல பாடி வணங்கித் திரியும் அடியார்களுடைய வினைகளைத் தீர்ப்பார் எழுந்தருளியிருக்கும் கோவில், பல மரக்கலங்கள் வந்தேறும் கரையினையுடைய திருவொற்றியூரே. பாவையாகிய என் சிந்தை கவர்வார், தம்மை முன்னம் நினைக்கத் தருவார், அடைவார் வினைகள் அறுப்பார், வரையை எடுத்த அரக்கன் இற்று முரிய விரலால் அடர்த்தார், என்னை யுடையார் உறையுமிடம் திரைகள் மோதும் கரையதான ஒற்றியூரே," என்று பதிகம் பாடினார். பின்பு, பேரன் போடும் கோவிலிலே கூடும் காலங்கள்தோறும் சென்று, பெருமானைப் பணிந்து, அவ்வூரிலே மகிழ்ந்திருந்தார்.

இவரைத் திருமணம் செய்வதற்காக முன்பே கயிலை மலையின் நீங்கிச் சிவனார் பேரருளாற் போந்த அநிந்திதையார் அவ்வூர்க்கடுத்துள்ள ஞாயிறு என்ற ஊரிலே, வேளாண் குலத்திலே, பெருஞ்செல்வத்தை யுடையவராகிய ஞாயிறு கிழவருக்கு அன்புறு மகளாராகிப் பிறந்திருந்தார். அவருக்குச் சங்கிலியார் என்ற திருப்பெயர் இடப்பெற்றது. அவ்வம்மையார் சிறு பருவத்தில் மகளிராடும் விளையாடல்களை எல்லாம் ஆடி மகிழ்ந்து, வளர்ந்து, திருமணப் பருவத்தை அடைந்தனர். அப்போது அவர் தாயாரும் தந்தையாரும் அவருக்கு மணவினை எண்ணினர். அதனை அறிந்த சங்கிலி

யார் வெருவுற்று, உணர்வுமயங்கி, மிக அயர்ந்து, அவனி மேல் விழுந்தார். உடனே அவருடைய இருமுது குர வரும் உளம் பதைத்து, எடுத்து, முகத்திற் பனி நீர் தெளித்து, அந்நோய் நீங்கச் செய்து, மயக்கம் தெளிந் தெழுந்த தம் மகளாரைப் பார்த்து, "உனக்கு என்னுற் றது?" என்று வினவினர். அவ்வினவிற்கு மறு மொழி யாக அம்மையார், "இப்பொழுது நீங்கள் என்னைப் பற்றி மொழிந்த செய்தி என் நிலைமைக்கு இசையாது. சிவபெருமானார் யாரை மணக்க ஆணையிடுகின்றாரோ, அவருக்கே நான் உரியேன். நான் இனிமேல் திரு வொற்றியூர் சென்று பெருமானுக்குப் பணிவிடை செய்து வாழ்வேன்," என்று இசைத்தனர். அச்சொல் லைக் கேட்ட தாய் தந்தையரும் அச்சமும் அதிசயமும் அடைந்து, திருமகளார் இசைத்த மாற்றத்தை வெளி யிடாது. வாழ்ந்திருந்தனர்.

அச்செய்தி அறியாத ஒருவன், சங்கிலியாரை மணக்க வெண்ணி, அவருடைய தந்தையாரிடத்தில் சிலரை அனுப்பினன். ஞாயிறு கிழவரோ, உண்மை யைக் கூறாது, வேறு சாக்குச் சொல்லி, அம்மணத்திற்கு இசையாது, வந்தவர்களை அனுப்பிவிட்டார்.

அவர்கள் திரும்பிப் போன உடனே, அவர்களை மணம் பேசி அனுப்பியவன் இறந்துவிட்டனன். அவ னோடு அவர்களும் மாண்டு போனார்கள். இதனை அறிந்த ஞாயிறு கிழவரும் அவர் மனைவியாரும் மனம் மருண்டனர். இத்திருவருள் நிகழ்ச்சியைக் கண்டு அவர்கள், "உயிரோடு வாழவேண்டுமெனு நினைவுடைய வர்கள் சங்கிலியாரை மணம் பேசி வருதல் கூடாது,"

என்று உலகறிய நடந்த செய்திகளை எடு
கள். பின்பு அவர்கள் அவ்வம்மையார் தங்களிடம் கூறியபடி அவரைத் திருவொற்றியூருக்கு அழைத்துப் போக நினைந்து, வேறு செயலொன்றும் அறியாது, அவ்வூருக் கழைத்துச் சென்றார்கள். அத்திருவொற்றி யூரில் சிவபெருமானது கோவிலுக்குப் பக்கத்திலே அவ்வூரவர் உதவியால் கன்னி மாட மொன்றமைத்து, அதிலே அம்மையாரை விடுத்து, அவரடி பணிந்து, "நீர் இந்தக் கன்னி மாடத்திலே பரம சிவனுக்குத் திருத்தொண்டு செய்துகொண்டிரும்," என்று சொல் லிப் பிரிவினால் ஏற்படும் துன்பக் கண்ணீர் கண்ணி னின்றும் தாரை தாரையாக ஓடி வர, விடை பெற் றுத் தம்மூரை அடைந்தனர். சங்கிலியாரும் அன்பு மிகுந்து தவம் புரியும் எண்ணத்தோடு அங்கே இருந்த னர். அவர் காலம் தவறாமல் கோவிலுக்குப்போய் ஒவ் வொரு நாளும் கறைமிடற்றண்ணல் கழலடி வணங்கி வந்தனர். மேலும் ஒவ்வொரு நாளும் கோவிலிலே மலர் தொடுக்கும் மண்டபத்திலே திரையிடப் பெற்ற ஓரிடத்திற் சென்றிருந்து, தாம் கயிலை மலையிற் செய்து வந்த பணிவிடையின் உணர்வு உள்ளத்தே தலை நிற்ற லாலே, பலமலர்களை எடுத்து, மாலைகளாகத் தொடுத்து, அவ்வக்காலங்களுக் கேற்பப் பெருமான் திருமுடிமேல் அணியத் தந்து, அவ்வணி கண்டு வணங்கி, அமர்ந் திருந்தார்.

அந்நாளில் ஒரு நாள் அவ்வூரில் வந்தமர்ந்திருந்த சுந்தரனார், முந்தை விதி கூட்டுவிப்ப, முதல்வர் கோவி லுட் புகுந்தார். அங்கே அவர் நெற்றியங்கண்ணரைப்

பணிந்து, பாடி வெளியே வந்து அவ்விடத்தில் தொண்டர்கள் செய்யும் சிறந்த பணிவிடைகளைக் கண்டு, அவர்களை வணங்கிச் சென்றவர், பூத்தொடுக்கும் மண்டபத்தை அடைந்தார். அங்கே அப்போது பூமாலையைச் சிவனாருக்குச் சாத்தும்படி கொடுப்பதற்காகத் திரையை நீக்கி வெளியே வந்து கொடுத்து விட்டு மறுபடியும் திரையினுள் மின்னலைப்போல மறைந்த சங்கிலியாரைக் கண்ணுற்றார். அவ்வம்மையாரைக் கண்டவுடனே அவரைத் தாம் மணம் செய்துகொள்ள நம்பியாரூரர் விரும்பினார்.

உடனே அவர் வெளியே வந்து, அங்கிருந்தாரிடம் அவர் யாரெனக் கேட்டனர். அருகு நின்றார் சங்கிலியார் வரலாற்றை அவருக்கெடுத் தியம்பினர். அதனை உணர்ந்த சுந்தரனார், "கறை மிடற்றண்ணல் அடியேனை இரண்டு பெண்களை மணந்திருந்து திரும்பக் கயிலை மலைக்கு வரும்படி ஆணை தந்து என்னை இம்மண்ணுலகில் பிறக்கச் செய்தார். அப்பெண்களில் ஒருத்தி பரவை. இவள் மற்றையவள் போலும். ஆதலின், இவளைத் தலைவனாரிடம் சென்று வேண்டி, அவர் அருளாலே பெறுவேன்," என்று நினைந்து, கோவிலினுள்ளே திரும்பவும் புகுந்தார். திருவொற்றியூர் அமர்ந்த பரம்பொருளை நம்பியாரூரர் இறைஞ்சி நின்று, "மலை மகளை ஒருபால் கொண்டு மகிழ்ந்தது மன்றி, மணி முடிமேல் கங்கைதன்னை வைத்தருளும் காதலுடையீரே, இங்கே உமக்கு மாலை தொடுத்துப் பணி செய்திருக்கும் சங்கிலியை அடியேனுக்கு மணம் முடித்து வையும்," என்று தெரிவித்தார். பின்பு வெளியே வந்து, "அருட்கடலே

அடியேன் வேண்டுதலுக்கிரங்கி அருளும்,'' என்று எண்ணி, மனவருத்தத்தோடும் கோவிலின் பக்கத்திலே வந்திருந்தார். அப்போது கதிரோன் மேலைக் கடல்வாய் வீழ்ந்தனன். தம்பிரானாரும் தம் தோழனாராகிய வன்றொண்டரை அடைந்து, “ உனக்குச் சங்கிலியைத் தருகின்றோம். கொண்ட கவலை யொழிக, '' என்றருளினார். அது கேட்ட வன்றொண்டர், “ திருவெண்ணெய் நல்லூரில் அன்று ஒன்றுமறியா நாயேனை வலிய ஆண்டு கொண்டருளி உறுதியளித்தீர். இன்றும் இவளை மணம் செய்துதர இசைந்து நின்றீர்,'' என்று போற்றி, மகிழ்ந்தார். உடனே மங்கை பங்கர் அவ்விடையிருள் யாமத்தே அவரைப் பிரிந்து, கன்னி மாடம் சென்று, அங்கே தூங்கியிருந்த சங்கிலியாருக்குக் கனவிலே தோன்றி, “ சிறந்த தவத்தைச் செய்திருக்கும் சங்கிலியே, கேள் : என்னிடத்தில் மிகுந்த அன்புடையவனும், திருவெண்ணெய் நல்லூரில் யாரும் அறிய எம்மால் ஆட்கொள்ளப் பெற்ற அடியானுமாகிய சுந்தரன், உன்னை மணம்செய்து தரும்படி வேண்டுகின்றனன். ஆதலால் நீ அவனை மணம் செய்து மகிழ்ந்திரு,'' என்றார். அது கேட்ட சங்கிலியார் தொழுது, “எம் பெருமானே, நீர் கட்டளையிட்ட படியே செய்கின்றேன். ஆனால், தாம் கூறமவர் திருவாரூரின்கண் வாழ்வுடையவ ரன்றோ ? இத்தன்மை அறிந்தருளும்,'' என்று வேண்டிக்கொண்டார். அதனை உணர்ந்த தம்பிரானார், “ அப்படியானால், நீ அவன் உன்னை விட்டுப் பிரிந்து போகா வண்ணம் கட்டுரை ஒன்று பெறுக,'' என்று புகன்றார். பின்னர்க் கடவுள் தம் தோழனார்பால் அடைந்து, “அன்பனே, சங்கிலியிடம்

உனது விருப்பத்தைத் தெரிவித்தோம். அவள் தனக குள்ள ஒரு குறை உன்னால் நீக்கப்பெற வேண்டும் என்று கூறினாள். ஆதலின், நீ இவ்விரவே அவள் முன்பு சென்று, அவள் குறையை நீக்கக் கட்டுரை செய்," என ஆணை தந்தார். நம்பியாரூரர், "நான் நினைத்தது முடிவு பெற வேண்டுவதை உமதருளால் செய்வேன். தாம் அடியேனுக்குத் திருவருள் செய்ய வேண்டும்," என்றுரைத்தார். பெருமான், "உனக்கு இனி யாம் யாது செய்யவேண்டும்?" என்று வினவினார். வன்றொண்டர், நான் சங்கிலியைப் பிரிவதில்லை எனக் கட்டுரைக்கின், பிற தலங்களிற் சென்று வழிபாடியற்று தற்கு அது தடையாகும்," என எண்ணிச் சிவனை நோக்கி, "அடியேன் அவளோடு அவளை விட்டுப் பிரியா வகை சபதம் செய்வதற்கு உமது திருமுன்பு வந்தால், நீர் அப்பொழுது இவ்விடத்தை விட்டு நீங்கி மகிழின் கீழ்த்தங்கி யருளவேண்டும்," எனத் தாழ்ந்தார். அதற்கு உம்பர் நாயகரும் உடன்பட்டவராய், "நம்பீ, நீ சொன்னபடி நாம் செய்வோம்," என்றுரைத்தனர். தம்பிரான் தோழரும், "இனி எனக்கு அரியதாவது எது?" எனத்தொழுது, சிரமேற் கரம் குவித்து, வெளியே வந்தனர். நெற்றியங்கண்ணனார், தம் தோழரிடத்தில் திருவிளையாட்டுப் புரிந்து மகிழவோ, சங்கிலியார் திருத் தொண்டின் பெருமையினை நினைந்தோ, திரும்பவும் சங்கிலியாருடைய கனவிலே தோன்றியருளி, "நங்காய், ஆரூரன் உன்னைப் பிரியேனெனச் சூளுரைக்க எமது எதிரே வருவான். அப்போது அதற்கு நீ இசையாது அச்சூளுரையை மகிழின்கீழ்க் கொள்வாயாக," என்ற

னர். அது கேட்ட சங்கிலியார், "அடியேன் பெற்ற பேறுதா னென்னே!" எனக் கண்களில் தாரை தாரையாக நீர் பொழிய, மழவிடையார் சேவடிக்கீழ் வீழ்ந்து பணிந்தார். உடனே சடை முடி உடையார் மறைந்தருளினர். அப்போது மிகுந்த அதிசய மடைந்து, அவ்வம்மையார் துயிலுணர்ந் தெழுந்து, கடவுளின் அருளை நினைந்து, அதன் பின் கண் துயிலாராய்த் தம் மருகே தூங்கியிருந்த சேடியரை எழுப்பி, தாம் கனவிலே கண்ட செய்திகளை யெல்லாம் விவரமாக மொழிந்தனர். சேடியரோ, அச்செய்தி கேட்டு, அச்சமும், வியப்பும், மகிழ்ச்சியும் எய்தி, சங்கிலியாரைப் பணிந்தனர்.

பெருமான் திருப்பள்ளி யெழுச்சிக்கு மலர் தொடுக்கும் பொழுதும் வந்தது. அதனை அறிந்த சங்கிலியார், தம் சேடியரோடும் கோவிலுக்குச் சென்றனர். அவர் அங்கே சேர்வதன் முன்னர் நம்பியாரூரர் சென்று, சூளுரைக்க அவரது வரவை எதிர்பார்த்திருந்தார். சங்கிலியார் அங்கே வந்ததும், ஆரூரர், பெருமான் ஆணையை அவரிடம் கூறினர். அவ்வம்மையாரும் அதற்குடன்பட்டு, எதிர் விளம்பாது, நாணொடும் ஒதுங்கிக் கோவிலினுள்ளே சேடியரோடும் புகுந்தனர். அவர்களின் பின்னே சென்ற ஆரூரர், அவர்களை நோக்கி, "நான் பிரியாமைக்கு இசையும்படி இயம்பப் பிறை முடியார் திருமுன் போவோம்," என்றனர். அதற்கு மறு மொழியாகத் தாதியர், தம் தலைவியாரிடம் கனவில் நிகழ்ந்ததைத் தெரிந்திருந்தா ராதலின், "தலைவரே, தாம் தம் பெருமான் திருமுன்பு சாற்றுவது தகாது," என்றுரைத்தனர். அதற்கு வன்றொண்டர்

சிவபெருமானுடைய செயலை அறியாது, "அப்படி யாயின், நான் எவ்விடத்தில் சூளுரைப்பது?" என்று கேட்டனர். அதற்கு அப்பெண்டிர், "மகிழ மரத்தின் கீழ்ச் சொன்னாற் போதும்," என்றனர். அதைக் கேட்ட நம்பியாரூரர், மனம் மருண்டன ரேனும், "இப்பெண் கள் சொன்னபடி செய்ய மறுத்தால், திருமணம் நின்று விடவும் கூடும். அதனால், உடன்படுவதே அமையும்," எனத் துணிந்து, அவர்களை அழைத்துக்கொண்டு, மகி ழின்கீழ்ச் சென்றார். சென்றவர் பெருந்தவத்தைச் செய்த சங்கிலியார் கண் காண அத்திரு மகிழை மூக் காலும் வலம் வந்து, "உன்னை யான் பிரியேன்," என்று அதன் முன் நின்று சூளுரைத்தனர். அது கண்ட அம் மையார், மிக மனம் கலங்கி, "தம்பிரான் பணியால் பாவியேன் இதனைக் கண்டேனே!" என்று ஆவி சோர்ந்து, அங்கு ஒரு மருங்குறைந்து நின்று அயர்ந் தார். திருநாவலூரர் தம்முடைய செயலை நிறைவேற் றிக் கோவிலினுள்ளே புகுந்து, கும்பிட்டு, "நாளும் அடி யேனுக்கு அருள் செய்திருக்கும் பெருமானே, நீர் செய்த வாறு மிக அழகிது!" என்று போற்றிப் பெருமகிழ்ச்சி யுடன் தம் இடம் போந்தார். சங்கலியாரும் மாலை மண்ட பத்தே தமது பணி செய்து முடித்து, நீல கண்டரை இறைஞ்சி, அழகு மிகுந்த கன்னிமாடத்தில் விடிவதன் முன் புகுந்தார்.

அன்றிரவே ஒற்றியூர்ப் பெருமான் அவ்வூரிலுள்ள தொண்டர்களுக்கெல்லாம் கனவிலே தோன்றி, "நம்பி யாரூரனுக்கு நங்கை சங்கிலிதன்னை இவ்வுலகில் பலரு மறிய நம் ஏவலினால் மண வினை செய்து அளிப்பீர்,"

என்று உணர்த்தினார். திருத்தொண்டர்கள் அனைவரும் அவ்வாணையைத் தலைமேற் கொண்டெழுந்து, அவ்வூரவர் அனைவரோடும் கூடி, நிறைந்த மகிழ்ச்சியுடன் சுந்தரருக்குச் சங்கிலியாரைக் கண்ணிறைந்த பெருஞ் சிறப்பில் கலியாணம் செய்தளித்தார்கள். தம்பிரான் தோழரும் பெருமானைப் பணிந்து, அவ்வூரிலே இனிது வாழ்ந்திருந்தார்.

## 13. கண் கெட்டதும் கண் பெற்றதும்

வசந்த காலம் வந்தது. தமிழ் மலையாம் பொதிகையில் தோன்றி, சந்தன மரங்களின் நறுமணம் கவர்ந்து, இனிய தென்றல் வீசிற்று. அப்பொழுது நம்பியாரூரர், திருவாரூரர்ப் பெருமான் வசந்தன் திருநாளை நினைந்தார். உடனே திருவாரூருக்குப் போகத் துணிந்தார். அவர் ஒரு நாள், "பக்தியோடும் அடிமை செய்து பரவாமே மூர்க்கனேன் எத்தனை நாள் பிரிந்திருக்கேன் என்னாரூர் இறைவனையே ?

'சங்கலங்கும் தடங்கடல்வாய் விடஞ்சுடவந் தமரர்தொழ
அங்கலக்கண் தீர்த்துவிடம் உண்டுகந்த அம்மானை
இங்கலக்கும் உடற்பிறந்த அறிவிலியேன் செறிவின்றி
எங்குலக்கப் பிரிந்திருக்கேன் என்னாரூர் இறைவனையே?'

துன்பத்தை விளைவிக்கின்ற இப்பிறப்பை அடைந்து அடியேன் வருந்தாமல், என்னை ஆட்கொண்டார். முன் வெற்றியோடும் அடியானாகிய மார்க்கண்டன்மேல் வந்த கூற்றின் வலி அழிய உடல் கிழியக் கலால் மிதித்தார். அவரை எங்ஙனம் நான் பிரிந்திருக்கேன் ?

" ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யுந் துரிசுகளுக் குடனாகி
மாழையொண்கண் பரவையைத்தந் தாண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கேன் என்னாரூர் இறைவனையே."

" வங்கமலி கடல்நஞ்சை வானவர்கள் தாம்உய்ய
நுங்கிஅமு தவர்க்கருளி நொய்யேனைப் பொருட்படுத்துச்
சங்கிலியோ டெனைச்சேர்த்த தத்துவனைச் சழக்கனேன்
எங்குலக்கப் பிரிந்திருக்கேன் என்னாரூர் இறைவனையே?"

என நினைந்தார். பின்னொரு நாள் திருவாரூரரை மிக நினைந்து, திருவொற்றியூரில் எழுந்தருளியிருக்கும் நினைப்பவர் மனத்தே இனிமையைத் தந்தருளும் கடவுளைக் கும்பிட்டு, அவ்வூரை அகன்று போயினர். அப்போது அவர் செய்த சூளுரை பிழைத்தது. அதனால், அவர் கண் தெரியாது மூர்ச்சித்தார். செய்வதின்னதென அறியாது திகைத்துப் பெருமூச்சு விட்டு, தமது சூளுறவு தவறியதால் அக்கேடு தமக்கு வந்துற்றது என நினைந்து, 'இத்துயர் நீங்க எம்பெருமானைப் பாடுவேன்,' எனத் துணிந்தார். உடனே அவர், "அழுக்கு மெய்கொடு உம் திருவடி யடைந்தேன். அடியேன் பிழை செய்தேனாயினும், உம் திருவடி மறவேன். வழுக்கி விழுந்தாலும் உம் திருப்பெயரே அல்லால், மற்றுநான் அறியேன். ஒற்றியூரெனும் ஊர் உறைவாரே, என் கண்ணுக்கு ஒரு மருந்து உரைத்தருள் செய்யும். அடியேன் உமக்காளாய்ப் பிறந்தேன். சங்கிலி காரணமாக எனக்கு இத்துயர் தந்தீரே ! கரும்பே, பலர்க்கும் களைகண்ணே, அத்தரே, என் இடரினை யார்க்கெடுத்து உரைக்கேன் ? மூன்று கண்ணுடையீர், அடியேன் கண் கொள்வதே கணக்கு

வழக்காகில், ஒற்றியூர் உறைவாரே, எனக்கு ஓர் ஊன்று கோலாவது தந்தருள்க. ஒருவன் கோல் பற்றிக் கரகர வென்று இழுத்துப் போதலை ஒழித்தருள வேண்டும். உம்மை மறந்து மற்றுத் தேவரை நினையேன். மலைமங்கை யாரை மணந்ததோடு ஆயிர முகமுடைக் கங்கையாரை யும் சிரமிசைக் கொண்டீர் என்று சொல்லிய புக்கால், தொழும்பனேனுக்குஞ்சொல்லலுமாமே? மனமே, நீவாடி இருந்து என் செய்தி? யான் உற்ற வல்வினைக்கஞ்சி வருந்தி ஊடினால், இனி ஆவதொன்றுண்டோ? மகத் தில் புக்கதோர் சனி எனக்கானாய். வீட்டில் பெண்களை நோக்கி, நான் ஒன்று சொன்னால், அவர்கள் 'அழையேல் போ குருடா,' எனச் சொல்வாராயின், உயிர் தரியேன். முகத்தில் கண் இழந்து எங்ஙனம் வாழ்கேன்? உற்ற நோய் உறு பிணி தவிர்த்தருளீர்; தண்கடல் ஒற்றியூ ரெனும் ஊர் உறைவாரே," என்று கடவுளை நோக்கிப் பாடி வேண்டிப் பல பல நினைந்து நின்றார். எப்படியா வது திருவாரூர் தொழ வேண்டும் என்ற பேராவல் தூண்ட, உடன் வந்தார் வழி காட்ட நடந்து, சென்று திருமுல்லைவாயிலை அடைந்தார்.

அவ்வூரில் நெற்றியங் கண்ணர் திருமுன்பு சென்று,

"திருவும்மெய்ப் பொருளும் செல்வமும் எனக்குன்
சீருடைக் கழல்கள்என் றெண்ணி,
ஒருவரை மதியா துறுமைகள் செய்தும்
ஊடியும் உறைப்பனாய்த் திரிவேன்
முருகமர் சோலை சூழ்திரு முல்லை
வாயிலாய்! வாயினா லுன்னைப்
பரவிடும் அடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே!

"விணபணிந் தேத்தும் வேதியர் மாதர்
வெருவிட வேழமொன் றுரித்தாய்!
செண்பகச் சோலை சூழ்திரு முல்லை
வாயிலாய்! தேவர்தம் அரசே!
தண்பொழில் ஒற்றி மாநக ருடையாய்!
சங்கிலிக் காஎன்கண் கொண்ட
பண்ப!நின் அடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே!"

பாலி ஆற்றின் வட கரையிலே உள்ள திருமுல்லை வாயிலீர், மாசிலா மணியே, அடியேன் கள்ளமே பேசிக் குற்றமே செய்யினும், அவைகளைக் குணமெனக் கொள்ளும் கொள்கையால், பகை பல செய்தேன். வள்ளலே, நான் பெற்றது யார் பெற வல்லார்? அன்று வெண்ணெய் நல்லூரில் வந்து நாயினேன்தன்னை ஆட்கொண்ட சம்புவே, உம் அடி வணங்கும் தொண்டன்மேல் மதியாமல் கட்டுவான் வந்த காலனை மாளக் காலினால் ஆருயிர் செகுத்த நம்பரே, சொல்லரும் புகழான் தொண்டைமான் களிற்றைச் சூழ் கொடி முல்லையால் கட்டிட்டு அளவற்ற இன்பத்தை அவன் பெற வெளிப்பட்டருளிய இறைவரே, திருமுல்லை வாயில் நாதரே, அடியேன் படு துயர் களையீர். பாசு பதத்தரே, பரஞ் சுடரே," என்று புகழ் மாலை பாடிப் போற்றிசைத்தார். பின்பு அவர் அவ்வூரை அகன்று போய்ச் சோலைகள் சூழ்ந்து மாட மாளிகைகள் ஓங்கும் திருவெண்பாக்கத்தை அணுகினார். அவர் வருவது கண்ட அவ்வூரவர் அனைவரும் அவரை எதிர் கொண்டனர். அவர்களோடும் நம்பியாரூரர் அவ்வூரினுள்ளே புகுந்து, பாம்பணி பரமர் அடைந்தார்.

கோயிலில் சிவ பெருமான் திருமுன்பு எய்திக் குவித்த கை தலைமேற் கொண்டு நின்று, "நீர் மகிழ்ந்து இக்கோயிலில் உள்ளீரோ?" என்று வன்றொண்டர் வினவினார். அதற்கு மறுமொழியாகத் திருவெண்பாக்கத்துத் தலைவனார், அவருக்கு ஊன்றுகோலொன்றருளி, "இங்குள்ளோம்; நீர் போகீர்," என்று பகைவரைப் போல இயம்பினார். அச்சொல்லைக் கேட்டு நம்பியாரூரர், 'நான் செய்யும் பிழைகளைக் கடவுள் பொறுத்தருள்வர் என்றெண்ணி, நான் பிழை செய்தக்கால், பழி அதனைப் பாராமல் படலம் என் கண் மறைப்பித்தீர். 'இக்கோயிலில் உள்ளீரோ?' என்று நான் கூற, பெருமான் உள்ளிருந்து 'உள்ளோம்; நீர் போகீர்,' என்றீரே! எனை உடையார் திருவடியே சரணென்று பொய்யடியேன் பிழைத்திடினும், நீர் பொறுத்திட வேண்டாவோ? 'இங்கே இருந்தீரோ?' என்று நான் கேட்டலுமே, நான் உய்யும்படி அருள் செய்ய வல்லீர், 'உள்ளோம்; போகீர்,' என்றீரே!

பொன்னவிலும் கொன்றையினாய்! போய்மகிழ்க்கீழ் இருவென்று
சொன்னஎனைக் காணாமே, 'சூளுறவு மகிழ்க்கீழே
என்னவல்ல பெருமானே! இங்கிருந்தா யோ?'என்ன
ஒன்னலரைக் கண்டாற்போல், 'உளோம்போகீர்' என்றானே!
"மான்திகழும் சங்கிலியைத் தந்துவரு பயன்களெல்லாம்
தோன்றஅருள் செய்தளித்தாய் என்றுரைக்க, 'உலகமெலாம்
ஈன்றவனே! வெண்கோயில் இங்கிருந்தா யோ?' என்ன
ஊன்றுவதோர் கோலருளி, 'உளோம் போகீர்,' என்றானே."

என்று பதிகம் பாடினார்.

பின்பு, "என்னுடைய பிரான் அருள் இங்கு இவ்வளவுதானோ!" என்று நினைந்து, தொண்டர்களோடும்

புறப்பட்டுப் பழயனூர் அடைந்து தங்கினர். அவ்வூருக்கு அயலே திருவாலங்காடு விளங்குகின்றது. அத்திருவாலங்காடு காரைக்காலம்மையார் தலையாலே நடந்து வலம் கொண்ட ஊர் ஆதலின், அவ்வூரினுள்ளே புகாமல், அயலே நின்று தொழுது, "முத்தரே, முத்தி தர வல்ல உமை பங்கரே, சித்தரே, சித்தித் திறம் காட்டும் சிவனே, தேவர் சிங்கமே, பொய்மைகள் பல செய்தும் புறம்புறம் திரிவேன் தன்னைப் போகாமே மெய்யே வந்து இங்கு ஆண்ட மெய்யரே, மெய்யர் மெய்ப் பொருளே, பரமரே, பழயனூர் மேய அய்யரே, ஆலங்காடரே, உம் அடியார்க் கடியேன் ஆவேனே ! உம் நெறி மறந்து திரிவேன் தீவினைகள் பல தீர்க்கும் பரமரே, ஏழ்படிகால் எனையாண்ட பெம்மானே, எம்மானே, ஈமப் புறங்காட்டில் பேயோடாடல் புரிவாரே, பல சிறந்த மலர்களைக் கொண்டு அடியார் பலரும் ஏத்தும் பழயனூர் அம்மானே, ஆலங்காடரே, உம் அடியார்க் கடியேன் ஆவேனே !" என்று புகழ் மாலை புனைந்தேத்தினர்.

நம்பியாரூரர் அவ்வூரிலிருந்தும் புறப்பட்டுப்போய், திருவூறலை வணங்கிக்கொண்டு, மணி மாடங்கள் சூழ்ந்த காஞ்சி மா நகரை அடைந்தார்.

அவ்வூரில் திருக்காமக் கோட்டம் என்ற கோவில் அடைந்து, உயிர்க ளெல்லாம் உய்யும்படிக்காக அறம் பலவும் புரிந்தருளும் அம்மையார் திருக்கோயிலின் முன் வணங்கி, எழுந்து துதித்துப்போய், உலக முழுதும் ஆக்கி அளித்து அழிக்கும் முதல்வர் எழுந்தருளியிருக்கும் திருவேகம்பத்தினுள், அடியார் முன்பு புக, தாம் பின்பு புகுந்து பணிந்தார். பணிந்தவர், "பெருமானே,

இழைதையேன் உமது திருமுன்பே என் மொழிவேன் ? விண்ணவர்கள் அமுதுண்ணத் தந்து அவர்களை வருத்திய மிக்க பெரு விடத்தை உண்டருளிய கண்ணுளரே, கச்சி ஏகம்பரே, கடைப்பட்டவனுகிய நான் எண்ணுமற் செய்த பிழையைப் பொறுத்து, இங்கு யான் உம்மைக் காணக் கண்ணளித்தருளீர்," என வேண்டிக் கீழ்வீழ்ந்து கும்பிட்டார்.

"பங்கயச்செங் கைத்தளிராற்
பனிமலர்கொண் டருச்சித்துச்
செங்கயற்கண் மலைவல்லி
பணிந்தசே வடிநினைந்து
பொங்கியஅன் பொடுபரவிப்
போற்றியஆ ரூரருக்கு
மங்கைதழு வக்குழைந்தார்
மறைந்தஇடக் கண்கொடுத்தார்."

இவ்வாறு இடக்கண் பெற்ற அடியவர், மறுபடியும் கீழ் வீழ்ந்தெழுந்து, களி மிகக் கொண்டு, " ஆலந் தாம் உகந்து அமுது செய்தாரை, உற்றவர்க்குதவும் பெருமானை, பாவிப்பார் மனம் பாவிக் கொண்டாரை, அற்றமில் புகழாள் உமை நங்கை ஆதரித்து வழி படப் பெற்ற கம்பர் எம்மானைக் காணக் கண் அடியேன் பெற்றவாறே! நண்ணினர்க்கு என்றும் நல்லவர்தம்மை, நாளும் நாம் உகக்கின்ற பிரானை, சிந்தித்து என்றும் நினைந்தெழுவார்கள் சிந்தையில் திகழும் சிவனார்தம்மை, சாம வேதம் பெரிதுகப்பாரை, எள்க லின்றி இமையவர் கோனை, ஈசனை வழிபாடு செய்வாள்போல உள்ளத்துள்கி உகந்து உமை நங்கை வழிபட்டச் சென்று நின்றவர் கண்டு வெள்

ளங்காட்டி வெருட்டிட, அஞ்சி வெருவி யோடித் தழுவி வெளிப்பட்ட கள்ளக் கம்பரை எங்கள் பிரானைக் காணக் கண் அடியேன் பெற்ற வாறே!" என்று புகழ்மாலை பாடி ஆடினார். அவ்வாறு மகிழ்ச்சி மிகக் கொண்ட அன்பருக் குக் கச்சி ஏகம்பர் தமது திருமேனியைக் காட்டி அருளி னார். நம்பியாரூரரும் ஆராத காதலுடன் இறைஞ்சித் தொழுது வெளியே வந்து, அவ்வூரில் இனிதமர்ந்தார்.

சில நாளின் பின் தம்பிரான் தோழர் அவ்வூரை விட்டுப் புறப்பட்டனர். அப்போது அவர் திருவாரூரை நினைந்து, "அந்தியும் நண் பகலும் ஐந்தெழுத் தோதி முந்தை வினை மூடா முன் தென் திருவாரூர் புக்கு என் றன் மனம் குளிர என்றுகொல் எய்துவதே?

"நல்ல நினைப்பொழிய நாள்களில் ஆருயிரைக்
கொல்ல நினைப்பனவும் குற்றமு மற்றொழியச்
செல்வ வயற்கழனித் தென்திரு வாரூர்புக்(கு)
எல்லை மிதித்தடியேன் என்றுகொல் எய்துவதே?"

பழைய வினை நீங்கும்படி இரு பொழுதும் நறு மலர் இட்டு வலம் செய்து தென்றல் மணங் கமழ் தென் திரு வாரூர்புக்கு ஏழுலகாளரை எண்ணிய கண் குளிர என்று கொல் எய்துவதே?" என்று சந்த இசைப் பதிகம் இசைத்து, அன்பருடன் மகிழ்ந்து வழிக்கொண்டார் வழியிலிருந்த பல பதிகளையும் வணங்கித் தமிழ் புனைந்து சென்று, திருஆமாத்தூரை அடைந்தார்.

திருஆமாத்தூரில் எழுந்தருளியிருக்கும் அழகரை அடி வணங்கி, "ஆமாத்தூரில் எழுந்தருளி யிருக்கும் எம் அடிகளுக்கு அடியேன் அடிமை பூண்டேன்; பிறரை

மதியேன்; என் குற்றம் அற்ற தென்ற குறிப்போடும் அவர் பொன்மையைக் கூடுவேன். என் உள்ளத்துள்ளே நின்ற ஒண் பொருளை ஓர்ந்து திருவொற்றியூர் புகுந்து, திருவருளால் சங்கிலியை மணந்தேன். ஏழுலகத்துயிர் களில் அவரைக் காண்டுமென்பார்தங்களுக்குக் கண்ணு யிருப்பவர்; பொன் போன்றவர் ; எனக்குப் பொன்னைத் தந்து என்னைப் போக விடாத என்னவர் ; நான் என் உற்றவர்தம்மை ஒழிந்து, அவர் அடியே உற்றுப் பற்றி னன்; ஆமாத்தூர் மேயாரது அடியார்க்கு ஆட்செய்யும் பேறு பெற்றனன்; அதனால், பெயர்த்தும் பெயர்த்தும் பிறவாமையே பெற்றனன்," என்னும் புகழ் மாலை தொடுத்தனர்.

பின்பு அவர் தொண்டை வள நாடு கடந்து, சோழன் செங்கண்ணன் பிறந்த நீர் நாடு என்னப் பெறும் சோழ நாட்டினை அடைந்தார். அந்நாட்டின் எல்லையி லிருந்த திருவரத்துறையை அடைந்து, நம்பியாரூரர் மழுவுடை யார் விரை மலர்த்தாள் பணிந்தெழுந்து, "கல்வாய் அகி லும் கதிர் மாமணியும் கலந்து உந்திவரும் நிவவு என்ற யாற்றின் கரைமேலுள்ள திருநெல்வாயில் திருஅரத் துறையில் வாழும் வெண்மதி சூடிய நின்மலனே, 'நல்வா யில் செய்தார், நடந்தார், உடுத்தார், நகைத்தார், இறந் தார்,' என்று நானிலத்தில் சொல்லாய்க் கழிகின்ற தறிந்து, அடியேன் தொடர்ந்தேன். வறிதே நிலையாத இம்மண்ணுலகில் என்னை நரனாக வகுத்தீர். நான் நிலை யேன். ஆதலின், அடியேனுக்குப் பொறி வாயிலிவை ஐந்தனையும் அவியப் பொருது, உம் அடியே புகும் சூழல் சொல்லீர்.

"புற்றுடர வம்அரை யார்த்துகந்தாய்!
புனிதா! பொரு வெள்விடை ஊர்தியினாய்!
எற்றேஒரு கண்ணிலன் நின்னையல்லால்
நெல்வாயில் அரத்துறை நின்மலனே!
மற்றேல்ஒரு பற்றிலன் எம்பெருமான்
வண்டார்குழ லாள்மங்கை பங்கினனே!
அற்றார்பிற விக்கடல் நீந்தியேறி
அடியேன்உய்யப் போவதோர் சூழல்சொல்லே."

நினைவார் மனத்தீர், இளமை ஓடு புனல் கரையாம்; இப் பிறவி உறங்கி விழித்தால் ஒக்கும். ஒரு நெல்வால் ஊன்ற வருந்தும் இவ்வுடம்பு. மணக் கோலமதே பிணக்கோல மதாம் பிறவி இதுதான். அகர முதலெழுத்தாகி நின்ற பெம்மானே, திண்டேர் நெடுவீதி இலங்கையர் கோன் திரள் தோள் இருபதையும் நெரித்தருளும் நின்மலரே, நான் பண்டு செய்த பாக்கியத்தால் நும் நாமம் பயிலப் பெற்றேன். அமரர்க்கு அமரர் பெருமானே, அடியேன் உய்யப் போவதோர் சூழல் சொல்லீர்," என்று புகழ்ந்து பாடி, அவ்வூரில் சில நாள் தங்கியிருந்தார். அவ்வூரி லிருந்தும் புறப்பட்டுப் பதிகள் பல வணங்கிச் சென்ற பேரன்பர், காவிரியாற்றை அடைந்து, அதிலே அன்ப ரோடும் நீராடி, திருவாவடுதுறையை அவ்வூரவர் எதிர் கொள்ள அடைந்தார்.

அவ்வூரிலே கோயிலை வலங்கொண்டு உள்ளணைந்து, "கங்கை வார் சடையீர், மண்ணின்மேல் மயங்கிக் கிடப் பேனை வலிய வந்து ஆண்டுகொண்டவரே, கண்ணிலேன் உடம்பில் அடும் நோயால் கருத்தழிந்து உமக்கே பொறை ஆனேன். திருவாவடுதுறையுள் அண்ணலே,

னை அஞ்சல் என்றருளீர். யார் எனக்கு உறவு? அமரர்களேறே, வந்த வாளரக்கன் வலி தொலைத்து வாழு நாள் கொடுத்தீர். வழி முதலே, மதியிலேன் உடம்பில் அடு நோயால் மயங்கினேன். உம்மை யன்றி மற்று உறவில்லேன். அடியேன் செய்த ஒரு பிழை பொறுத்தால், அதனால், உமக்கு இழிவுண்டோ? திருவாரூர்ச் செம்பொன்னே, வழித்துணை மருந்தே, திருவாவடுதுறையில் ஐயரே, என்னை அஞ்சலென்றருளீர். அமரர்களேறே, உம்மை யன்றி எனக்கு உறவு யார்?" எனத் திருப்பதிகம் பாடிப் பரவினார். உடல் நோவு அவரை வருத்திற்று.

அவர் மிகுந்த விருப்பத்தோடும் திருத்துருத்தி என்ற ஊரினை மேவி, விமலர் திருவடிகளை வணங்கி, "தலைவரே, அடியேன் மேலுற்ற பிணியாலாம் வருத்தத்தை ஒழித்தருள வேண்டும்," என்று வேண்டி நின்றார். கடவுள் மனமிரங்கி, அவரை நோக்கி, "உன் உடலுறு நோய் நீங்குதற்கு இங்குள்ள வட குளத்தில் குளி," என்று கட்டளையிட்டார். அதைக் கேட்ட அடியவர், அக்குளத்தின் முன்னே போய், அவ்வூரில் எழுந்தருளியிருக்கும் பெருமானைக் கை தொழுது, நீரில் மூழ்கினார். உடனே அவர் உடலில் புதிதாகத் தோன்றி வருத்திய பிணி நீங்கிற்று. அதனால், அவர் திருமேனி மிகுந்த அழகோடு ஒளி பெற்று விளங்குவதாயிற்று. அப்போது அவரைப் பார்த்தவர்களெல்லாரும் அதிசயிக்கும்படி அவர் கரையேறி, மாற்றுடையைப் புனைந்து, மண்டு பெருங்காதலினால் கோவிலுக்குப் போய், "மின்னும் மா மேகங்கள் பொழிந்து அருவியாக ஓடி அலைகளோடும் கரைகளில் மோதும் காவிரியாற்றின் கரையிலுள்ள

திருத்துருத்தி என்னும் ஊரிலும் திருவேள்விக் குடியி லும் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை, என் உடம் படும் பிணி இடர் கெடுத்தாரை அடியனேன் நாயேன் மறக்குமாறு என்னை? எம்பெருமானை, பழவினையோடு பற்றறுத்தாரைச் செடியனேன் பாடுமாறறிகிலேன். என் உடலில் தொடர்ந்து அடும் கடும்பிணித் தொடர்வு இற்றைய அறுத்தாரை, தொழுவன் ஆரூரன் மேலை நோய் இம்மையே வீடுவித்தாரைச் சொல்லுமாறறிகி லேன்," என்னும் அழகிய பாடல்களை ஏழிசையால் எ

அவ்வூரில் அடியார்களோடும் சில நாள் தங்கி, அவ் வூரை விட்டுப் புறப்பட்டு, வழியிலிருந்த பிற பதிகளை யும் வணங்கிக்கொண்டு சென்றார். சென்றவர், தமது திருமுன் திருவாரூர் தோன்றக் கண்டனர். தமது திருக்கண் ஒன்றால் அவ்வூரை முழுதும் கண்டு இன்புற முடியாதவராய், நிலமிசை வீழ்ந்து நின்று, பெருமூச்சு விட்டுக் கும்பிட்டு, வன்றொண்டர் மயங்கும் மாலைப் போதிலே திருவாரூரில் புகுந்தார். அவர் விரைந்து பரவையுண் மண்டளி என்ற கோயிலை அடைந்து, சுவாமியை நோக்கி, "தூவாயரே, தொண்டு செய்வார் படுதுக்கங்கள் காக்க மாட்டீரோ? புலவர்க்குப் பொன்னனவரே, நாமாறாது உம்மையே நல்லன சொல் லுவார் போமாறு என்?

"நோக்குவேன் நுன்னையே நல்லவினை நோக்காமைக்
காக்கின்றாய் கண்டுகொண் டார்ஐவர் காக்கிலும்
வாக்கென்னு மாலைகொண்(டு) உன்னை என்மனத்
தார்க்கின்றேன் பரவையுண மண்டளி அம்மானே!"

தண்டமிழ்ப் புல வாணர்க்கு ஓர் அம்மானே, கண் தனைக் கொண்டிட்டுக் காட்டீரோ? அடியேன் நல்லன செய்யாதேன்; கண்டதே கண்டதே விரும்பும் கொடி யேன்; பரவையுண் மண்டளி அம்மானே," என்று தம் துயர் களைந்து கண் காணக் காட்ட வேண்டிப் பாடி, அருந்தமிழ் புனைந்தார். பரவையுண் மண்டளியை வழி பட்ட தம்பிரான் தோழர், அடியார்களோடும் அக்கோயி லுக்கு வெளியே வந்து, நள்ளிரவிலே திருமூலட்டானத் தை அடைந்தார். அவர் வருவதை அறிந்து, அக்கோயிலி லிருந்த அன்பர் பலர் அவரை எதிர் கொண்டனர். அவர் அவர்களை நோக்கி, "அன்பர்களே, கருப்பஞ்சாறு ஒழுகிப் பாயும் வயல்களையுடைய குளிர்ந்த அழகிய திருவாரூர்ப் பெருமானை நான் பணிந்தேத்துமாறும் எனக்கு நீவிர் உணர்த்த வல்லீர்களோ? நான் அவரை என்றும் மறக்காமல், அவரையே நினைந்து நினைந்து, எப் போதும் உறக்க மில்லாம லிருக்கும் தன்மையை அவ ருக்கு நீங்கள் உணர்த்த வல்லீர்களோ? எனக்கு அவ ரைத் தவிரப்பற்று மற்றொன்று இன்மையையும், அவரை நினைத்தலைத் தவிரப் பாடு மற்றின்மையையும், அதனால் அவரையே பரவிப் பாடி நான் வாடுவதனையும் அவர்க் குச் சென்று உணர்த்த வல்லீர்களோ?" என்று பதிகம் கைக்கிளையாகப்பாடி, அவர்களோடும் தேவாசிரிய மண்ட பத்தை அடைந்து பணிந்தார். அங்கிருந்து கோபுரத் தைக் கை தொழுது, கோயிலி னுள்ளே புகுந்து, அப் பூங்கோயிலை வணங்கிப் பெருங்காதலோடும் அவனி மேல் வீழ்ந்தார். வீழ்ந்தெழுந்து, முன்னின்று விம்மி, தமது மலர்க்கண் ஒன்றால் கண்டு மகிழாமல், அடியேன்

ஆழ்ந்து வருந்தும் துயர்க் கடலினின்றும் அடியேனை எடுத்தருளி, எனது கருத்தினை முடித்துக் கண்ணைத் தந்தருளும்,'' எனத் தாழ்ந்தார். பின்னும், "உமது திரு மேனியினழகை எனது இரண்டு கண்களாலும் பருகு தற்கு மற்றைக் கண்ணையும் தாரீரோ?'' என வணங்கினார். மறுபடியும் அவர் பெருமானை நோக்கி, "உமக்கே மீளா அடிமை கொண்டு உமக்கே ஆளாய்ப் பிறரை வேண் டாது மனம் வருந்தி முகம்வாடி உமக்கு ஆளாய் இருக் கும் அடியார், தமது துயரத்தை உம்மிடம் சொன்னக் கால், நீர் அதனை நீக்காது வாளா இருக்கின்றீர். திருவாரூரீர், நீர் வாழ்ந்து போம்.

''விற்றுக் கொள்வீர் ஒற்றி யல்லேன்
விரும்பி ஆட்பட்டேன்
குற்றம் ஒன்றும செய்த தில்லை
கொத்தை யாக்கினீர்
எற்றுக் கடிகேள்! என்கண் கொண்டீர்?
நீரே பழிப்பட்டீர்
மற்றைக் கண்தான் தாரா தொழிந்தால்
வாழ்ந்து போதீரே.''

துருத்தி உறைவீர், சோற்றுத் துறை ஆள்வீர், நீர் திருவாரூரே உமது இருக்கையாக உடையீர். அடியார் தம் கண் காணாது குன்றில் முட்டிக் குழியில் விழுந்தால், நீர் வாழ்ந்து போதீரே.

''பேயோ டேனும் பிரிவொன் றின்னா
தென்பர் பிறரெல்லாம்
காய்தான் வேண்டில் கனிதா னன்றோ
கருதிக் கொண்டக்கால்

நாய்தான் போல நடுவே திரிந்தும்
உமக்காட் பட்டோர்க்கு
வாய்தான் திறவீர் திருவா ரூரீர்!
வாழ்ந்து போதீரே."

திருமூலட்டானமே இடமாகக் கொண்ட பெருமானே, இருந்தும், நின்றும், கிடந்தும் உம்மை இகழாது ஏத்துவோம். அடியார் வருந்தி வந்து உமக்கொன்றுரைத்தால், அதை நீர் தீரேல், வாழ்ந்து போதீரே," என்று வேண்டிப் பாடினர்.

இவ்வாறு மனம் வருந்தி வேண்டி நின்ற வன்றொண்டருக்காக மனமிரங்கிப் புற்றிடங் கொண்டிருந்த புனிதர், அவருக்கு மற்றைக் கண்ணையும் கொடுத்தருளினர். அடியவரும் கண்ணிரண்டும் விழித்து, முகம் மலர்ந்து, உள்ளம் பரவசமாய்ப் பாத மலர்மேல் பணிந்து வீழ்ந்தார். கீழே விழுவார்; திரும்பவும் எழுந்து தொழுவார். இவ்வாறு பல முறை பணிந்து, மிகுந்த களிப்பினேடும் ஆடிப் பாடி, இன்ப வெள்ளத்தில் அழுந்தி, இரண்டு கண்ணுலும் புற்றினிடை எழுந்த சிவக்கொழுந்தின் அருளைப் பருகினர். கோயிலில் காலமும் நிரம்பிற்று. நம்பியாரூரர் விருப்பினேடும் வலம் கொண்டு புறம் போந்து, தேவாசிரிய மண்டபத்தை அடைந்தார்.

பரவையார் தம்மை நம்பியாரூரர் பிரிந்து போன பின்பு சில காலம் தனியே மனம் வருந்தி இருந்தார். பின்பு, சிலரை அனுப்பித் தம் கணவனர் செயலை ஆராய்ந்து வரச் செய்தார். அவர்கள் திருவொற்றியூரை அடைந்து, அங்கே சுந்தரர் சங்கிலியாரைக் கடி மணம் புரிந்து வாழும் செய்தியை அறிந்து வந்து, அவரிடம்

கட்டுரைத்தனர். அதனால், பரவையார் மட்டிலடங்காத வெகுளி கொண்டு, மனம் தளர்ந்திருந்தார். அவருடைய மாளிகையை ஆரூரருடன் வந்த சிலர் வழக்கம் போல அடைந்தனர். அவர்கள் அம்மாளிகை வாயிற் கதவங்கள் அடைத்திருந்தமையின், உள்ளே புகுதப் பெறாது, வெளியே நின்றார்கள்.

அவர்களில் சிலர், இதன் காரணத்தை அறிந்து, நம்பியாரூரரை அடைந்து, "திருவொற்றியூரில் நிகழ்ந்த செய்கையெல்லாம் அறிந்து, பரவையார் தமது மாளிகையை அடைத்துள்ளார். அதனால், யாங்கள் உள்ளே போக முடியவில்லை," என்று கூறிப் பணிந்தனர். அது கேட்ட வன்றொண்டர், "இதனுக்கு இனி என்னோ செயல்!" என்று ஆராய்ந்து, உலகியல்பு கற்ற மாந்தர் சிலரைப் பரவையார் வெகுளி தணிக்க அனுப்பினார். அவர்கள் மாளிகையை அடைந்து, பரவையாரைநோக்கி, "எம்பெருமாட்டியார்க்கு இது தகுமோ? சினம் தணியும்," என்று பல நீதியும் எடுத்துரைத்தனர். பரவையாரோ, செற்றம் தணிந்திலராய், "குற்றம் செய்த அவருக்காக மற்றொரு முறை நீவிர் இந்த மாற்றம் இயம்பில், எனதுயிர் போதல் திண்ணம்," என்று கூறினார். அவர்கள் அஞ்சிப் போய், நடந்தபடி யெல்லாம் நம்பியாரூரருக்கு விளம்பினார்கள். முனைப்பாடி வேந்தர், அச் செய்தி அறிந்து, வெருவுற்று அயர்ந்தார்.

இடை யாமம் கழிந்தது. பேயும் உறங்கும் அவ் வேளையிலே அவரைச் சூழ்ந்தார் பலரும் துயின்றனர். இளமதியணிந்தாருக்குத் தோழர் அப்போது, "முன்னை வினையால் இச்செயலுக்கு மூலமான பரவைபால் நான்

போக, நீர் இந்த யாமத் தெழுந்தருளி அவள் புலவியினை அகற்றினால் பிழைப்பேன்; அன்றேல், உய்யேன்," எனக் கடவுள் பொன்னடிகளை நினைந்தார். அடியார் இடுக்கண் கண்டு மனம் தரியாதவராகிய கடவுள் தாமே வலிய வந்து தடுத்தாட்கொண்ட தோழருடைய குறையை முடியாதிருக்க வல்லவரோ? அவர் ஒரு நொடியில் தம் அடிகள் படி தோயத் தொண்டர் கண்முன் எழுந்தருளினார். அவரைக் கண்டு தாங்கரிய மகிழ்ச்சியோடும் உடல் புளகிப்ப நம்பியாரூரர் அவர் செய்ய அடித்தாமரையின் கீழ் வீழ்ந்தார். அவ்வாறு தமது அடி பணிந்தெழுந்த நண்பரை நோக்கி, "உனக்கு வேண்டுவ தென்ன?" என்று கடவுள் கேட்டருள, தோழரும், "சிவபெருமானே, திருவொற்றியூரில் உம்முடைய கட்டளைப் படியே நான் சங்கிலியை மணம் செய்து வந்த விதமெல்லாம் பரவை அறிந்து, தன்பால் யான் குறுகின் மடிவேன் என்று துணிந்திருந்தாள். ஆதலின், தலைவரே, நான் உமக்கு இங்கு அடியேனாகவும், நீர் எனக்குத் தாயைப்போல மிக நல்ல தோழராகவும் தலைவராகவு மிருப்பது உண்மையாகில், எனது மனத் தளர்வை நீக்கி, இவ்விரவே சென்று, பரவையின் வெகுளியைத் தீர்த்தருளும்," என்று வேண்டினார். கடவுளும் அவரை நோக்கி, "நீ துன்பம் ஒழி. யாம் உனக்கு ஒரு தூதனாகி இப்பொழுதே பரவைபால் போகின்றோம்," என்றருளினார். வன்றொண்டர் கடவுளைப் பணிந்து நின்று, தமக்குத் தெரிந்தவாறெல்லாம் புகழ்ந்து, விரைவில் தமது வேண்டுதலை நிறைவேற்றியருளும்படி கேட்டுக்கொண்டார்

உலக மெல்லாம் காண்பதற்கரிய புற்றிடங்கொண் டார், தூதராகிப் பரவையார் மாளிகையை நோக்கி நடந் தார். பூத கண நாதர்களும் முனிவர்களும் யோகிகளும் அவர் முன்னே நடந்தார்கள். நட்பின் மிக்க நிதிக் கோனும் பிறரு மகிழ்ந்தேத்தத் தெரு நிறைந்த கூட்டத் தோடும் பரவையார் திருமாளிகையை நோக்கி அவர் விரைந்து சென்றார். அவர் சென்ற அத்தெரு, சிவ லோகம் போல விளங்கிற்று. மாளிகையைச் சேர்ந்ததும், அவர் உடன் வந்தோரெல்லாரும் தலைவாயிலில் நின்ற னர். சிவ பெருமான் தம்மைப் பூசிக்கும் சீலமுடைய மறை முனிவரைப் போல உருக் கொண்டு, தனியே சென்று, அழகிய வாயிற் கதவைத் தட்டி, "பரவாய், கதவைத் திறவாய்," என்று அழைத்தார். பெருமானைப் பூசனை செய்யும் புரி நூல் மணி மார்பர் அழைத்தார் போலும் எனத் துயிலாது அமர்ந்திருந்த பரவையார் துணிந்து, 'இவர் இப்பாதி இரவில் இங்கணைந்ததென் னோ!' என்று அச்ச மெய்திப் பதைத்து வந்து, கதவைத் திறந்தார். பின்பு தம் முன் நிற்கும் தூதரை வணங்கி, "நீவிர் யாது வேண்டி இங்குற்றீர்?" என்று வினவி னார். அது கேட்ட சிவ பெருமான், "நாம் சொல்லுவ தற்கு நீ மறாது இசைந்தால், வந்த துரைப்போம்," என்னப் பரவையாரும், "நீர் கூறுவது எனக்கு இசையு மானால், செய்வேன். சொல்லி யருளும்," என்று வேண் டினார். உடனே பெருமான், "நம்பியாரூரன் இங்கு வர நீ மன மிசையவேண்டும்," என்றார். பரவையார் அதற்கு மறு மொழியாக, "நும் பெருமை சால நன்று! பங்கு னித் திருநாளுக்கு முன் போல வருவதாகச் சென்று,

திருவொற்றியூருக்குப் போய், அங்குச் சங்கிலியை மணந்திருப்பவருக்கு இங்கொரு சார்பும் உண்டோ? நீர் இவ்விரவில் சொன்ன காரியம் அழகிது!" என்று கூறினர். அதனை நாதர் கேட்டு, "அம்மே, நீ நம்பிசெய்த குற்றங்களை மனத்துக் கொள்ளாமல், கொண்ட வெகுளி நீங்கித் துன்பம் ஒழிதற் கல்லவா உன்னை நாம் வேண்டிக்கொண்டது? ஆதலின், நீ மறுப்பது அடாது," எனப் புகன்றார். அம்மொழி செவிப் புகலும், அம்மையார், "இச்செயலை மேற்கொண்டு நீர் இத்தலை வாயிலில் வந்தது உமது பெருமைக்குத் தகுவதன்று. அவர் இங்கே வருவதற்கு இசையேன். நீர் வந்த வழியே போம்," என மறுத்துரைத்தனர். அதனைக் கேட்டுப் பெருமான் புன்முறுவலோடும், தம்மை இன்னாரென அறிவியாமல், தம் தோழனார் இருக்கும் இடத்திற்கு மீண்டார்.

தூதருடைய வரவை எதிர் பார்த்திருந்த நம்பியாரூரர், "உலக நாதரை அறிவில்லாதவனாகிய நான் தூதனுப்பினேனே!" என்று மனம் வருந்தினர். பின்பு, "பரவை மனையில் நண்ணிய புண்ணியர் என் செய்தாரோ! நாயனார் வேண்டுதலுக்கும் பரவை மறுப்பாளோ! பெம்மான் அவளுடைய பிணக்கைத் தீர்த்தன்றி மீளார்," என்று நினைந்து, எதிர் கொண்டு போவார்; தமது தலைவர் வரவு காணாது திரும்புவார்; அறிவு மயங்கி நிற்பார்; 'கடவுள் தாழ்த்தமைக்குக் காரணம் என்னோ!' என அயர்வார்; கடவுள் திரும்பித் தம் முன் வருவதைக் கண்டு, அணை கடந்த வெள்ளம் போல மிக்கெழுந்த களிப்பினோடும் எதிர் சென்று,

தம்பிரான் முன் தாழ்ந்து, அவர் திருமுகத்தே முறு வல் கண்டு, அவர் தம்மிடத்துச் செய்யும் திருவிளை யாட்டை ஓராமல், பரவையார் சினம் தணித்து வந்தார் என நினைந்து, "இன்று இவள் வெகுளி யெல்லாம் தீர்த்து எழுந்தருளினீர். இஃது அன்று நீர் அடியேனை ஆண்டு கொண்ட அதனுக்கு ஏற்றதே," என மொழிந் தார். அம்மொழி கேட்ட சிவபெருமான், "உனது சொல்லின்படி நாம் போய்ப் பரவை இல்லம் நண்ணி, உன் திறமெல்லாம் அவளுக் குரைத்தோம். அவள் அவைகளை ஏற்றுக்கொள்ளாமல், வெஞ்சொற் புகன்று, நாம் வேண்டுகின்றோம் என்பதனையும் எண்ணுமல், மறுத்தாள்," என்றார். அச்சொல் செவி நுழைவதன் முன்னே நம்பியாரூரர் துண்ணென நடுக்க முற்றுத் தொழுது, "அடியவளான பரவையோ நீர் அருளிச் செய்த வண்ணமும் மறுப்பாள்! வானவர் உய்ய நஞ்சை யுண்டீர், தானவர் முப்புரங்கள் வேவ அம் மூவரையும் ஆட்கொண்டீர், காலனைக் காய்ந்து நான் மறைச் சிறுவனை ஆண்டீர், நான் உமக்கு மிகையா னல், என் செய்வீர்? இன்று என் அடிமையை நீர் வேண்டாவிட்டால், பாவியேனாகிய என்னை அன்று வலிய ஆட்கொண்ட பற்று என்? என் மன நோவும் கண்டீர். இன்று பரவைபால் நான் மேவுமாறு செய் யீராகில், என்உயிர் நீங்கும்," என்று அவரடியில் வீழ்ந் தார். தம்பிரான் அதனைக் கண்டு, மனம் தரியாது, நம்பி யாரை அருளால் நோக்கி, "நாம் இன்னம் அவள்பாற் போய், அவளை நீ இப்போதே குறுகுமாறு கூறுகின் றோம். துயர் நீங்கு," என்று சொன்னார். அதனால், நம்பி

யாரூரர் கலக்கம் நீங்கி, "உம் அடித்தொழும்பனாகிய என்னை இவ்வாறன்றோ பயங் கெடுத்துப் பணிகொள்ள வேண்டும்?" என்று போற்றினர். ஆண்டவர், அருளோ டும் மீண்டும் செல்லத்தொடங்கினர். நம்பியார் அவர் பின் சென்று இறைஞ்சிப் பேதுறவோடும் மீண்டார். பெருமானுர் பரவையார் மாளிகையை அணுகினர்.

பரவையார், தம்மைவிட்டு மறையவர் போன பின்பு தோற்றிய பல அதிசயங்களால் முதிர்மறை முனிவராய் வந்தார் முதல்வரே என அறிவுற்று, அஞ்சி, "ஐயோ! கெட்டேன்! எம்பிரான் கட்டளையை மறுத்து எதிர் மொழிந்தேன்! பாவியேன்! தம் தோழருக்காக மறைய வர் கோலங் கொண்டணைந்த தம்பிரானாரை உட்கொண் டிலேன்!" என்று மனமழிந்து, கண் துயிலாமல், தோழிய ரோடும் தலை வாயிலையே பார்த்திருந்தார். அப்போது கொன்றை வேணி விமலர், தாமாம் தன்மை அறிவுறு கோலத்தோடும், அளவில்லாத பூத நாதர்களும் விண்ண வரும் முனிவரும்சூழவந்து, அம்மாளிகையுட் புகுந்தார். அவரைக் கண்ட பரவையார், அச்சத்தால் நடுங்கி மிகுந்த மகிழ்ச்சி பொங்க, அவர் பொன்னடியில் விரைந்து பணிந்தார். நான்முகனுக்கும் திருமாலுக்கும் அறிய அரியாராகிய பெருமான், அவ்வம்மையாரை நோக்கி, "எம்மிடத்தி லுள்ள உரிமையால் நம்பியாரூரன் ஏவ, நாம் மீளவும் உன்பால் வந்தோம். முன்பு போல, இன் னம் நீ மறுதே. உன்னைப் பிரிந்து வருந்தும் அவன் உன்பால் வரப்பெற வேண்டும்," என்றிசைத்தார்.

பரவையாரும் பிரான் முன்பு மிகவும் அஞ்சி, வருந்திய உள்ளத்தோடும் மலர்க் கரம் குழல்மேற்

கொண்டு, " அடியேன் செய்த இருந்தவப் பயனும் என்ன எய்திய நீரோ, முன் அருந்திரு மறையோராகி அணைந்தீர்? உமது செய்ய பாதம் வருந்த அன்பர்க்காக ஓர் இரவுமுழுதும் நீரே அங்குமிங்கும் இவ்வாறு உழல் வீராஞல், அடியேன் அவர் இங்கு வர இசையாது என் செய்கேன் ?" என்று கண்ணீர் வாரத் தொழுது, விண் ணப்பம் செய்தார். அதனால், மங்கை பங்கர் மகிழ்ந்து, "நின் தன்மைக்கேற்கும் நன்மையே மொழிந்தாய்," என் றுரைத்து, விரைந்து போகப் புறப்பட்டார். பரவை யார் அவர் பின் சென்று, வணங்கி மீண்டார்.

பல கணநாதரோடும் திருவாரூர் மன்னவனுர் நம்பி யாரூரர்பால் வந்துற்றார். மனமயர்ந்திருந்த தொண்டர், " எம்பெருமானே, என்ன விடை கொண்டுவந்தீர்? கூறி யருளும்," என்று வேண்டிநின்றார். பெருமான், "அவள் செற்றம் தணிவித்தோம். நம்பி, நீ இனி அம்மாளிகைக் குப் போய்ச் சேர்," என்றார். அதைக் கேட்ட அடியார் களிப்பெய்தி, " எந்தை பிரானே, பந்தமும் வீடும் நீர் அருள் செய்யும்படி செய்தீர். இனி என்பால் இடர் என் ?" என்று அவரடியில் வீழ்ந்தார். தம் நண்பர் அன்புக்கு எளி வந்தவராகிய கடவுள், " நீ இனி மாளி கைக்குப் போ," என்றருள் செய்து, கோயில் புகுந்தார்.

நம்பியாரூரர் மகிழ்ச்சிப் பெருக்கோடும் பரவையார் மாளிகையை நோக்கிப் புறப்பட்டார். அப்போது துயில் நீங்கி எழுந்த அவர் பரிசனங்கள், அவரைச் சூழ்ந்து மொய்த்தார்கள். விண்ணவர் பூமாரி பொழிந்து வாழ்த்தினர். இவ்வகையாக அவர் பரவையார் மாளி கையை அணுகினர்.

பரவையாரும் தமது மாளிகையைப் பலவாறு அலங்கரித்து, நெய் வளர் விளக்கும் நிறை குடமும் அமைத்துத் தோழியர் சூழ வாயில் முன்பு வந்து, அவரை எதிரேற்று நின்றார். வன்றொண்டர் அருகே வந்ததும், பரவையார் நாணமும் அச்சமும் மிக, அவரை வணங்கினார். நம்பியாரூரர் அவ்வம்மையாரோடும் மாளிகையினுட் புகுந்தார். அன்று தொட்டுத் தம்பிரான் தோழர் நாடோறும் பூங்கோயில் புகுந்து, செஞ்சொற் பதிக மாலைகள் பாடிப் பணிந்து, மகிழ்ந்திருந்தார்.

## 14. ஏயர்கோன் கலிக்காம நாயனார்

வளப்பம் மிக்க சோழ நாட்டிலே வளம் பெருக்குவது காவிரியாறு. அவ்வாற்றின் வடகரையிலே திருப்பெருமங்கலம் என்ற பெயரையுடைய ஓர் அணி நகர் இருக்கிறது. அப்பெருநகரில் வாழ்வார் பலர், செல்வம் மிக்குடையோர். அவ்வூரில் வாழ்ந்த பல குடிகளுள் ஏயர் கோக்குடி என்பது ஒன்று. அது சோழ மன்னர்களுக்குச் சேனைத் தலைவராம் உரிமை யுடையது. அக்குடி மிகவும் தொன்மையானது.

வேளாண்மையில் உயர்ந்த அப்புகழ்க் குடியிலே கலிக்காமர் என்பவர் ஒருவர் தோன்றினார். அவர் இறைவர் அடிக்குத் தொண்டு பல புரியும் ஒழுக்கத்திற் சிறந்தார். அவர் தாம் பிறந்த திருப்பெருமங்கல நகருக்கு அணித்தாயுள்ள திருப்புன்கூரில் கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் சிவலோக நாதரிடம் மெய்யன்பு கொண்டு, அவர் கோயிலுக்குத் திருப்பணிகள் எண்ணி

லாதன மாண இயற்றினார். அவர் தமக்கு நிதியமாவன திருநீறு உகந்தணிந்த பெருமானார் பொன்னடிகளே என உண்மை யுணர்ந்து, அவைகளை நித்தலும் இடை யறாது போற்றிப் புகழ்ந்து வாழ்ந்திருந்தார்.

தம்பிரான் தோழர், நெஞ்சில் நடுக்கம் ஒன்றின்றி நின்று, தம் மனைவியாராகிய பரவையார்பால் தம்பிரானைத் தூதுவிட்டார் என்னும் செய்தியை ஏயர்கோன் கலிக்காமர் கேட்டனர்; கேட்டு, மனம் மிக வெம்பினார்; அதிசயித்தார்; வெருவினார். அவர், "உடையாரை அடியான் ஏவும் செயல் சால நன்று! இச்செயலைச் செய்வான் தொண்டனாம்! பொறுக்க முடியாத இப்பிழையினைப் பேயனேன் செவியால் கேட்ட பின்னரும், என் ஆவி மாயா திருந்ததே! தன்னுடைய மனைவிபாலுள்ள அன்பு தூண்ட, அவளை இணக்குமாறு ஒருவன் கட்டளையிட, அதற்கிணங்கித் தமது சிவந்த அடிமலரிணைகள் நோவத் தரைமேல் நடந்து தேரோடும் தெருக்களினூடே போவதும் வருவதுமாகி, ஓர் இரவெல்லாம் தூதாகி உழன்றாரே ஒப்பற்ற பெருமானார்! தமக்கு வேறடியான் ஒருவனும் இன்றி இவனொருவன் கிடைத்தானென்று மகிழ்ந்து, அவர் அவனுடைய வேண்டுதலுக் கிசைந்தால் அவரை ஏவுவது மிக அழகிதே! இத்தீய செயலுக்கு நெஞ்சம் நடுக்குறாத அந்நம்பியாரூரனை யான் என் முன் காணுநாள் எந்நாள்? பெண்ணுக்காகத் தன்னை ஆளுடைய பெருமானையே இரவில் தூது போக ஏவி மகிழ்ந்திருந்த அவன் இங்கே வர என்முன் காண்பேனேல், எனக்குத் தீமை யாது விளையுமோ!" என்று சின மிகக் கொண்டு, புலம்பி மனமுடைந்திருந்தார்.

இவ்வாறு ஏயர்கோன் கலிக்காமர் எண்ணமிட்டிருப்பதை நம்பியாரூரர் அறிந்து, "அடியார் அகத்தில் துன்பம் தோன்றத் தீராப் பிழை செய்தேனே! இதற்குத் தீர்வும் உண்டோ?" என்று கவலை கொண்டு, சிவபெருமான் திரு முன்பு சென்று நின்று, தமது குறையை விண்ணப்பஞ் செய்தார். நாடோறும் அவர் பணிந்து குறையிரப்ப, நாதனார் அதனைக் கேட்டுத் தம் பெருந்தொண்ட ரிருவரை ஒருமைப்பாட்டுடன் பழகும் நண்பராக்க விரும்பினார். அதற்காக அவர் ஏயர்கோன் கலிக்காமருக்கு உடலை வாட்டும் சூலை நோயருளினார். அஃது அவரைச் சென்று பற்றியது. அந்நோய் தமது வயிற்றிற் புகுந்து நெருப்புப் பொறியை வீசும் வேல் குடைவது போன்று வேதனையை மேலும்மேலும் செய்ய, அவர் உளமுடைந்து, கீழ் வீழ்ந்தார். "ஏழைகளாகிய எங்களுக்கு நீரே தஞ்சம். பெருமானே, காத்தருளும்," என்று அவர் போற்றிசைத்தார். அடியார் அன்பால் உருகுங்கால் தரியாத வள்ளலாகிய கறைமிடற் றண்ணலார், அவர்முன் தோன்றி, "உன்னை வருத்தும் இச்சூலை நோய் நம் வன்றொண்டன் தீர்க்கில் அன்றித் தீராது," என்று மொழிந்தருளினார். அதனைச் செவியேற்ற அன்பர், "எம்பெருமானே, என் தந்தை, அவர் தந்தை, மற்றும் எம்மைச் சேர்ந்த சுற்றத்தாரும் உமக்கே அடிமை பூண்டு வழி வழித் தொண்டு செய்யும் வாழ்க்கையையுடைய அடியேனை வருத்தும் சூலைநோயை நேற்று வம்புக்கு ஆண்டு கொண்ட ஒருவனா தீர்ப்பான்? அவன் வந்து தீர்ப்பதிலும், இது தீராதொழிந்து அடியேனை வருத்துவதே நன்றாம். பெருமானே, நீர் செய்யும் இச்

செயலின் பெருமையை அறிந்தார் யாரோ? அவ்வன் றொண்டனுக்கு ஆகும் நன்மையையே செய்தீர்," என மறு மொழி புகன்றார். உடனே சிவனார் திருவுருக் கரந்தார்.

கலிக்காமரை நீங்கிய கடவுளார், தம் தோழர் பாற் சென்று, "இன்று நீ நம் ஏவலாலே ஏயர்கோன் இருக்குமிடம் சென்று, அவனை வருத்தும் சூலை நோயைத் தீர்ப்பாயாக," என்றருளினார். அவ்வாணையைச் சிரமேற் கொண்ட நாவலூரர், சிந்தை மகிழ்ந்து, புகழ்ந்து, தலைவர் அடியில் வீழ்ந்து பணிந்தார். பெருமானும் உடன் மறைந்தார். நம்பியாரூரர், நொடிப் பொழுதும் தாமதிக்காமல், திருவாரூரை விட்டுப் புறப்பட்டு, ஏவலின் வண்ணம், திருப்பெருமங்கலத்தை நோக்கி விரைந்து சென்றார். அவர் கலிக்காமரிடத்துத் தாம் கொண்டுள்ள அன்பின் பெருக்கால் அவருடைய சூலை நோயைத் தீர்க்கும் பொருட்டுத் தாம் வருவதைச் சிலரிடம் அவருக்குச் சொல்லி யனுப்பினார்.

கடவுளருளால் தமக்குச் சூலை நோய் வந்ததையும், தமது வேண்டுதலுக் கிணங்கிச் சிவனார் தோன்றித் தமது மனம் வருந்துமாறு இசைத்த மாற்றத்தையும் எண்ணி எண்ணி வருந்தி யிருந்த கலிக்காம நாயனார் நெஞ்சம், வன்றொண்டர் வருகையைக் கேட்டதும் துணுக்குற்றது. அப்போது அவர், "எம்பிரானைத் தூதனுக ஏவினேன் இந்நோயைத் தீர்க்கும் குற்றம் என்னைச் சேர அவன் இங்கு வருகின்றான். யான் செய்வதென்னோ, அறிகிலேன்! அவன் இங்கு வந்து இந்நோயைத் தீர்ப்பதன் முன்னர் மாயமாக என்னைப்

பற்றி நீங்காது வருத்துகின்ற இக்கொடிய சூலை நோயை இது தங்கும் வயிற்றினோடும் கிழிப்பேன்,'' என்று புலம்பினார். உடனே அவர் தம் உடை வாளால் தமது வயிற்றைக் கிழித்தனர். அதனால், அப்பொழுதே அவருடைய உயிரோடு சூலை நோயும் தீர்ந்தது.

நினைக்கவும் முடியாத பெருமையையுடைய கலிக்காமர் மனைவியார், தம் கணவனார் இறந்தமை கண்டு, உடனே அவரோடு தாமும் செல்லக் கருதினார். அப்பொழுது அங்குவந்தார், நம்பியாரூரர் அருகணைந்தமையைப் புகன்றனர். அச்செய்தியை யறிந்த அவ்வம்மையார், அங்கு ஒருவரும் அழுதல் கூடாதென விலக்கி, தம் அருங்கணவர் மடிந்த செய்தியை மறைத்து, அங்கு நின்றிருந்த தம் உறவினரை நோக்கி, “நம்பியாரூரர் வரும்பொழுது நமது வீட்டை நன்றாக அலங்கரித்து அவரை எதிர்கொண்டழையுங்கள்,'' என்று ஏவினார். அவர்கள் தலை வாயிலில் விளக்கேற்றி வைத்து, மலர் மாலைகளைத் தூக்கி, அணி செய்து, எதிர் கொள்ளச் சென்றனர். அவர்களைக்கண்டு, நம்பியாரூரர், நகைமுகங் கொண்டு, இன்புற்று, உண்மை யன்போடும் வந்து, கலிக்காமருடைய வீட்டினுட் புகுந்து, அங்கு அவருக்கென இடப்பெற்றிருந்த உயர்ந்த தவிசின்மேல் முக மலர்ந்திருந்தார். அவர்கள் அவருக்கு இன்சொற் கூறிப் பணிந்து, புகழ்ந்தார்கள். அப்புகழுரைகளை அவர் இனிது ஏற்று, “என் மனம் மிக வருந்துகிறது. ஏயர் கோன் கலிக்காமர் உற்ற சூலை நோயை உடனேபோக்கி, யான் அவருடன் இருக்க விரும்புகின்றேன்,'' என்றார். ஏயர்கோன் கலிக்காமருடைய மனைவியார் ஏவ, வேலைக்

காரர்கள் அவரை நோக்கி, "இங்குக் குற்ற மொன்றும் இல்லை. உடையவர் வீட்டினுள்ளே பள்ளி கொள்ளுகின்றார்," என்றார்கள். அவ்வுரை கேட்டும் நம்பியாரூரர் மனம் தெளியாமல், "தீமை யொன்று

அவரை நான் காண வேண்டும்," என்றருளிச் செய்தார். ஏவலர் அவரை உள்ளே அழைத்துச் சென்று, புண்ணீர் சொரியக் குடர் சரிந்து இறந்து கிடந்த ஏயர்கோன் கலிக்காமரைக் காட்டினர். அவரைக் கண்டவுடன் வன்றொண்டர் நெஞ்சம் துணுக்குற்று, "புகுந்தவாறு மிக நன்று! நானும் இவர் முன்பு இறைவர் பொன்னடியை நண்ணுவேன்," என்று கூறிக் கலிக்காமர் கையிலிருந்த உடைவாளைக் கையிற் பற்றினர். அப்பொழுது சிவபெருமானுடைய திருவருளினாலே ஏயர்கோன் கலிக்காமர் உயிர்பெற்றெழுந்து, "உமக்கு நண்பனேயாகிக் கெட்டேனே!" எனக் கூறி, அவர் கையிலிருந்த வாளினைப் பிடித்துக்கொண்டார். இது கண்ட நம்பியாரூரர், அவர் காலில் வீழ்ந்து வணங்கினர். கலிக்காமர் வாளினைத் தூர எறிந்துவிட்டுத் தம்பிரான் தோழருடைய திருவடிகளில் வீழ்ந்து பணிந்தார். பின்பு இருவரும் எழுந்து, ஒருவரை யொருவர் மார்புறத் தழுவிக்கொண்டு, இணை பிரியா நட்பினராகி, ஒப்பற்ற மகிழ்ச்சி கூர்ந்து, திருப்புன்கூரை அடைந்தனர். அடைந்து, கோவிலுட் புகுந்து, பெருமானார் கழலிணை போற்றினர். அப்பொழுது வன்றொண்டர் பெருமானை நோக்கி, "அந்தணனாகிய மார்க்கண்டன் உம் அடைக்கலம் புகுத, அவனைக் காப்பது காரணமாக, அவனுயிரை வாங்குவான்

வந்த காலன் உயிரைக் காலால் மிதித்து வாங்கிய உம் வள்ளன்மை கண்டு, அடியேனும் திருப்புன்கூர் உளாரே, என்னை நமன் தமர் வந்து நலியும்போது, 'இவன் என்னடியான்,' எனக் கூறி விலக்கிக் காத்தருள்வீர் என்னும் சிந்தையால் வந்து உம் திருவடி யடைந்தேன். ஏயர்கோன் உற்ற இரும்பிணி தவிர்த்தீர். பசுக்களின் பாலைக் கறந்து ஆட்டிய அழகான வெண்மணலால் ஆகிய சிவன்மேல் சென்ற தன் தந்தையின் தாள் அற எறிந்த தண்டிபடிகளுக்கு உம் சடைமிசை மலர் அருள் செய்தீர். நற்றமிழ் வல்ல ஞான சம்பந்தரும் திருநாவினுக்கரையரும், திருநாளைப் போவாரும், திருக்கண்ணப்பரும், கணம்புல்லரும் என்ற இவர்கள் குற்றமே செய்யினும், குணமெனக் கருதும் கொள்கை நீருடையீர். கடலிலெழுந்த நஞ்சினை யுண்டு கண்டத்தே வைத்தீர். பித்தரே, திருப்புன்கூருளாரே, உம் சீலம் கண்டு உம் திருவடி யடைந்தேன். முப்புரம் எரித்தபோது பிழைத்த அம்மூவரில் இருவரை நும் திருக்கோயிலின் வாயில் காவலாளரென்றேவிய பின்னர் மற்றொருவனை உம் திருநடனம் கண்டு அதற்கியைய மணி முழா முழக்க அருள் செய்தீர். இலங்கையர் கோனைத் துலங்கமால்வரைக்கீழ் அடர்த்திட்டு, அவனுடைய பாடலின் இன்னிசை கேட்டிரங்கி, அவனுக்கு அழகிய வாளோடு நீடிய வாழ் நாளும் கொடுத்தீர். செழும்பொழில் திருப்புன்கூருளாரே, செம்பொன்னை ஒக்கும் திருவுருவினரே, உம் திருவருட் செறிவு கண்டு, உம் திருவடி யடைந்தேன்," என்று புகழ்ந்து, பா மாலை பாடி, அவ்வூரில் சில பகல் கழித்தார்.

அவ்வூரிலிருந்து நம்பியாரூரர் தம்முடன் நிறைந்த நட்போடு வந்த ஏயர்கோன் கலிக்காமரோடும் புறப்பட்டுத் திருவாரூரை அடைந்து, பூங்கோயி லமர்ந்த பிரான் புனை மலரிணை பணிந்து, போற்றி யிருந்தனர். சில நாட்களின் பின் ஏயர்கோன் கலிக்காம நாயனர், நம்பியாரூரரிடத்து விடை பெற்றுத் தம்மூரை யடைந்தார். அங்கே அவர் தமக்கு ஏற்ற பல தொண்டுகளும் செய்திருந்து, சிவபெருமானுடைய திருவருளினலேயே அவருடைய பூங்கழலிணைகளைச் சிறப்பினேடுஞ் சேர்ந்தனர்.

## 15. சேரமான் பெருமாள் நாயனர்

பெருவளஞ் சிறந்த மலை நாட்டிலே பழம்பதியாவது திருவஞ்சைக்களம். அப்பதி கொடுங்கோளூர் என்றும் சொல்லப் பெறும். அம்மூதூர், சேரர் தலைவர் வீற்றிருந்து அரசு புரியும் பெருமையை யுடையது. அவ்வூர் மகோதை யென்றும் பெயர் பெறும். உலகம் செய்த பெருந்தவத்தின் பயனக அரனருளால் மாக்கோதையார் என்பவர் அரசர் குலத்தில் பிறந்தனர். அதனல், அவ்வூரா ரனைவரும் பெரிதும் மகிழ்ச்சி யுற்றனர்.

மாக்கோதையார் முன்னைப் பிறவியிற் செய்த அன்பின் பயனக நெற்றியங்கண்ணனர் கழலைப் பேணும் கருத்தினராய், மிகுந்த உள்ளன்போடும் திருவஞ்சைக்களக் கோவிலிலே நித்தலும் சென்று, அரசர் தொழிலை மறந்து, திருத்தொண்டே புரிந்து வந்தார். இவ்வுலக வாழ்க்கையும் அரச வாழ்க்கையும் உறுதியல்ல என்ற உண்மையை யுணர்ந்த அப்பெரியார், புலரியில் எழுந்து, புனலில் மூழ்கிப் புனித வெண்ணீறு அணிந்து,

திருநந்தன வனத்திற் சென்று, வேண்டும் பணிகள் பல செய்து, மலரும் முகையும் கொணர்ந்து, திருமாலை புனைந்து மகிழ்வார்; அன்புடன் இன்பமும் அகத்தே ஊற்றெடுத்து ஓட, அவர் கோயிலில் திருவலகிட்டு, மெழுக்குமிட்டு, திருமஞ்சனமும் கொணர்ந்து, பெருமானை நீராட்டிப் பூ மாலைகளைச் சாத்திக் கைகள் சிரமேற் குவியக் கண்களில் அன்பு நீர் வடியக்கும்பிட்டு, இன்பக் கூத்தாடி நிற்பார்; பாமாலை பல பாடுவார். இவ்வாறு பல திருப்பணிகள் புரிந்து, மாக்கோதையார் வாழ்ந்து வந்தார்.

ஒரு நாள் அரசியற்றியிருந்த முடி மன்னராகிய அவருடைய தந்தையார், துன்ப மிகுந்த இவ்வுலக வாழ்க்கையில் வெறுப்படைந்தவராய், மெய்த் துறவியராயினர். அதனால், அவர் அரச வாழ்க்கையையும் துறந்து, என்றும் குன்ற இன்பப் பெருவாழ் வடைவதற்கு வழியாவது தவமேயென உணர்ந்து, அது புரிவான் விரும்பிக் காடடைந்தார். நாட்டை அரசாள்வதற்கு உரியவர் மாக்கோதையாரே ஆதலின், அமைச்சராவார் திருவஞ்சைக்களக் கோவில் புகுந்து, அங்கே பணி செய்திருந்த சேரமானது அடியிற் பணிந்து, முடி புனைந்தருளவேண்டிநின்றனர். இன்பம் பெருக்கும் திருத்தொண்டுக் கிடையூறாக மொழிந்த மதி மந்திரிகளின் மொழியைச் செவியேற்றருளி, "அன்பு நிலைக்கு இடையூறில்லாமல் அரசாளத் திருவருளுண்டேல், இதனை இறைவரிடம் தெரிவித்தறிவேன்," எனப் புகன்று, பெருமாள் திருமுன்பு சென்று தொழுது, விண்ணப்பம் செய்தார். அப்போது வேண்டுவார் வேண்டுவதே தந்

தருளும் கடவுள் திருவருளால், அவர் யார் யார் எதை எதை மொழிந்தாலும் உடன் அறியும அளவற்ற திற மும் இடையீடில்லா வழிபாட்டன்பும் மன்னற் குரி யனவாம் குடை, படை, ஊர்தி எல்லாமும் கைவரப் பெற்றார். பிறர் கழறிற்றெல்லாம் அறிதலினால், அன்று தொட்டு அவர், கழறிற்றறிவார் என்ற சிறப்புப் பெயரை உடையவ ராயினார்.

இவ்வாறு இறையவர் திருவருளைப் பெற்று வணங் கிக் கோயிலுக்கு வெளியே வந்து தமது திருத்தொண் டுக்கு அரசாட்சி இடையூறே ஆம் எனினும், உடையார் அருள் செய்தமையால், முடி புனைவதற்குத் தமது இணக்கத்தை அமைச்சரிடம் தெரிவித்தார். அவருடன் பாடறிந்த மந்திரிகள் அவரைப் பணிந்து மகிழ்ந்தார்கள். கணி மொழிந்த உரிமைநாளில் ஓரை நலம் எய்த, எல்லா உயிர்களும் இன்பம் பெற, கழறிற்றறிவார் இம்மை மறுமையாகிய இரண்டுலகங்களுக்கும் ஒரு முடி கவித் தருளினார்.

முடி புனைந்த கழறிற்றறிவாராகிய சேரமான் பெரு மாள், பெருமான் கோயிலை வலங் கொண்டு, திருமுன் தாழ்ந்தெழுந்து, வெளிப்போந்து, மத்த யானை மிசைக் கொண்டு, உரிமையாளர் கொற்றக்குடையும் சாமரையும் தாங்க, நலங்கொள் நகர் சூழ வலங் கொண்டார். அப் போது அவர் முன்பு உவர்ப்பொதி சுமந்து ஒரு வண் ணான் வந்தான். மழையிற் கரைந்த உவர் ஊறி, அவன் மேனி யெங்கும் படிந்து, காய்ந்து வெளுத்து விளங் கிற்று. அவ்வடிவைக் கண்ட சேரமானுக்கு மெய்யெல் லாம் வெண்ணீறு பூசிய மெய்யடியார் திருவடிவம்

நினைவுக்கு வந்தது. அதனால், அவர் உடனே யானையின் கழுத்தினின்றிழிந்து, பெருகும் காதலினால் விரைந்து சென்று, அவ்வண்ணான் முன்பு நின்று, கைதொழுதார். சேரர் பெருமான் தன்னைத் தொழக் கண்டு, அவ்வண்ணான் சிந்தை கலங்கி, அவர் முன் வணங்கி, "யாரென்றடியேனைக் கொண்டது? அடியேன் அடி வண்ணான்," என்றான். வேந்தரும், "அடியேன் அடிச் சேரன். திருநீற்றின் பெருமை சேர் உருவத்தை நீர் அடியேனுக்கு நினைப்பித்தீர். சிந்தை கலங்கி வருந்தாது ஏகும்," என மொழிந்தார். மன்னர் பெருமானிடம் விளங்கிய இம் மெய்யன்புச் செயலை மதி நீடும் அமைச்சரெல்லாருங் கண்டு, சென்னிமிசை அஞ்சலி செய்து, போற்றி நின்றனர். சேரமானும் மறுபடியும் களிறேறி, மூதூர் வலங் கொண்டு, மணி மாளிகை வாயிலை யடைந்தார். அவர் யானையினின்றிறங்கி, விளங்கும் மணி மண்டபத்தை யடைந்து, மேன்மை பொருந்திய அரியாசனத்தின் மேலேறி, பல அரசர் தம் அடிமிசைப் பன்மலர் தூவிப் பணிய, அரசு வீற்றிருந்தருளினார்.

சோழ நாட்டு முடிவேந்தருடனும் பாண்டி நாட்டு முடிவேந்தருடனும் சேரமான் நட்புக்கொண்டு, முறை தவறாமல் குடிகளுக்கு ஏற்படும் துன்பங்களை நீக்கி, அளவற்ற சிற்றரசர்கள் திறை கொணரத் திருநீற்றொளியை எங்கும் பரப்பி, அரசாண்டு வந்தார். இம் மண்ணிற் பிறந்த பயனும், தவமும், தேடும் பொருளும், பெருந்துணையும் தமக்குச் சிதம்பரத்தில் திருச்சிற்றம்பலத்துள் ஆடும் கழலே எனத் தெளிந்து, ஒவ்வொரு நாளும் அக்கழலை மலர் பல கொண்டு வணங்கி வந்தனர்

அவா அன்புக்கு மகிழ்ந்து கூத்துடைக் கடவுள் அவ ருக்குத் தமது திருவடிகளில் அணிந்துள்ள பொன்னூர் சிலம்பின் ஒலியை ஒவ்வொரு நாளும் கேட்பித்தார். சேரமான் பெருமாள் கடவுளுடைய திருவடிகளைக் கண்டு மகிழ் சிறந்து, தம்பிடம் வரும் இரவலருக் கும், ஏழைகளுக்கும் செம்பொன்னை மழையாமெனப் பொழிந்து, அவர்களைக் காத்து வந்தனர்.

இன்ன வண்ணம் அவர் ஒழுக, எழில் கொண்ட பாண்டி நன்னாட்டுத் தலை நகராம் மதுரையிலே திருவால வாய் என்னும் கோயிலில் எழுந்தருளி யிருக்கும் அழக மர் கடவுள் தம்பிடத்து மெய்யன்போடும் இசை பாடிப் பரவும் பாணனாகிய பத்திரன் என்பவனுக்கு நன்மை தரும் பெருஞ்செல்வம் நல்க விரும்பினார். அவர் பாணபத்திரனுடைய கனவில் எழுந்தருளி, "அன்பனே, உனக்குப் பைம்பொன்னும், பட்டாடையும், ஒளிவீசும் நவமணியும், நகைகளும் மற்றும் நீ வேண்டிற்றெல்லா மும் குறைவின்றிக் கொடுக்க, எம்பால் அன்பால் எப் பொழுதும் பரவும் சேரனுக்கு ஓலை தருகின்றோம். தாமதியாமற் சென்று, வாங்கி வருக," என்று கூறி, 'மதி மலி புரிசை,' என்று தொடங்கும் திருமுகப் பாசு ரத்தைத் தந்தருளினார். அதனைச் சிரமேற் கொண்டு, அப்பொழுதே புறப்பட்டுச் சென்ற பாண பத்திரன், மலை நாடணைந்து, வலிய கோட்டை மதில்களால் சூழப் பெற்றுள்ள கொடுங்கோளூரிற் புகுந்து, அரண்மனை முன் வந்து நின்று, தனது வரவை அரசருக்கு அறிவித்தான். அவன் வரவைக் கேட்ட பொழுதே அரசர் கிளர்ந்தெழுந்த பேரன்பால், கைகளைத் தலை

மேற் கொண்டு, கண்களில் இன்ப நீர் வழிந்து இழிய இழிந்து, விரைந்து வந்து, தலை வாயிலை யடைந்து, அங்கு நின்றிருந்த பாண பத்திரனைப் பலகால் பணிந் தார். "அடியேனை ஒரு பொருளாக மதித்துத் திரு முகம் கொண்டு வந்த தென்னை ?" என்று வினவிய சேரரிடம், பத்திரன், சிவ பெருமானுடைய திருமுகத் தைக் கொடுத்து வணங்கினன். அத்திருமுகத்தைக் கொற்றவனுர் பணிந்து வாங்கி, முடிமேற் கொண்டு, இன்பக் கூத்தாடிப் பலகால் அதனைத் தொழுது படித் துப் பெருமான் தமக்குச் செய்த திருவருளை நினைந்து, மனமுருகித் தமது அழகிய மாளிகையினுட் புகுந்தார். அவர் தம் சுற்றத்தாரை யெல்லாம் அழைத்து வரச் செய்து, அமைச்சரை நோக்கி, "நம் பண்டாரத்துள் நிறைந்து கிடக்கும் நிதிக் குவை யனைத்தும் தலைச் சுமை யாய் ஏற்றிக் கொணருங்கள்," எனப் பணித்தார். மந்திரி கள் அவ்வாறே அவைகளைக் கொண்டு வந்து பணிந்தார் கள். சேரமான், "இந்நிதிக் குவியல்களையும் இவ்வரசை யும் ஏற்றருள் செய்யும்," எனப் பத்திரனுக்கு மொழிந் தார். பாண பத்திரன் அவைகளைக் கண்டு வியப்பும் மகிழ்ச்சியுமுற்று, "நான் எனக்கு வேண்டுவன ஏற்றுக் கொள்வேன். நீர் கடவுள் தந்த இவ்வரசையும் அரச உறுப்புகளையும் கைக்கொண்டருளும்," என வேண்டி னன். பாணன் தனக்கு வேண்டும் பொருள்களையும் கரி பரிகளையும் பெற்றுக்கொண்டு, ஒரு களிற்றின்மிசை ஏறித் தன்னை நகர்ப்புறம் வரை வந்து வழி விட்ட சேர மானிடம் விடை கொண்டு சென்று, மதுரை மாநகர் புகுந்தான். பாண்டியமன்னரும் அதுதெரிந்து அங்கேகி,

அடியார்க் கடியராம் அழகர் அடியார்க்கருள் செய்யும் பான்மையின் பெருமையினை நினைந்து பணிந்தார்.

இவ்வுலகி லுள்ள எண்ணிறந்த உயிர்க ளெல்லாம் கழறிற்றறிந்து, அவைகளின் உளத்தை வருத்துந் துயரங்க ளனைத்தையும் அகற்றி, தமது நாட்டில் களவு கொலை முதலான குற்றங்களைக் களைந்து, அரசியற்றி வரும் நாளையிலே, ஒரு நாள் சேரமான் உண்மையன்போடு இயற்றிய பூசனையின் ஈற்றில் கூத்துடைக் கடவுள் தமது சிலம்பொலியைக் கேட்பியாதிருக்க, மதி மயங்கினார். அவர், "பெம்மானே, அடியேன் என்னே பிழைத்தது? உம் அன்பின் பயனே இன்பமாம். அதைத் தவிர அடியேனுக்கு இன்பம் வேறு ஏது?" என்று பொருமியழுது, தமது அழகிய உடை வாளை யுருவித் தமது திருமார்பில் நாட்டப் புகுந்தபோது, இறைவனார் ஒரு நொடியும் தாழாது தமது திருச்சிலம்பின் ஓசையை யிசைப்பித்தார். அவ்வொலி கேட்டலும், சேரர் பெருமான் உடை வாளை அகற்றி, கர மலர் சிரமிசைக் குவியக் கீழே விழுந்து, தொழுதெழுந்து, புகழ்ந்து, "விண்ணவர் பலரும் அறிய வொண்ணாத அண்ணலே, நீவிர் அடியேனுக்குத் திருவருள் முன்பு செய்யா தொழிந்தது என்?" என வினவினார். அப்போது இறைவர் அவருக்கு நேர் நின்று காட்சி கொடாது,விண்ணில் எழும் ஒலியால், "மன்றினிடை நமது தோழன் வன்றொண்டன் நம் கூத்தாடல் கண்டு வணங்கி ஒரு வழிப்பட்ட அன்போடும் நம்மைப் போற்றிப் பெருமை சேர் பதிகம் பாடினான். அதனை அங்கே நின்று கேட்டிருந்தோம். அதனால்,

இங்கே வரத் தாழ்த்தோம்,'' என்றுரைத்தார். இதனால், சிவ பெருமான் சுந்தரர் பெருமையை மன்னவருக்கு நினைப்பூட்டினார். உண்மையுணர்ந்த சேரமான், "அடியார்க்கிரங்கியருளும் இவர் கருணையிருந்தவாறென்னே! தில்லைமாநகரம் சென்று பொன்னம்பலத்தில் திருநடனம் கும்பிட்டு ஒப்புயர்வில்லா அன்பர் வன்றொண்டரையும் காண்பேன்,'' என விரும்பி, சோழ வள நாடு செல்ல எண்ணினார். உடனே அவர் தம் அமைச்சரை யழைத்து நன்னாட்கொண்டு, பயணம் எழுதற்கு ஆணை தந்தார். நல் ஓரையிலே சேரமான் திருவஞ்சைக்களத்துக் கொன்றை மலர்மாலை யணிந்த முடியார்தம்மை வலங்கொண்டு இறைஞ்சி, விடை பெற்று, வெங்களிற்றின்மிசை ஏறிப் புறப்பட்டார்.

நால்வகைச் சேனைகளும் புடைசூழச்சென்று, அந் நாட்டெல்லையைக் கடந்து, தம் அமைச்சர்களுக் கெல்லாம் விடை தந்தருளி, சேரர் பெருமான் தமக்கு வேண்டியவர்களை மட்டும் தம்முடன் அழைத்துக்கொண்டு, கொங்கர் நாட்டைக் கடந்து, நீர் நாட்டை யடைந்தார். அவர் போகும் வழியிலுள்ள ஊர்கள்தோறும் அடியார்கள் அவரை யெதிர்கொண் டழைத்தார்கள். பல குன்றுகளையும், கானகங்களையும், கான் யாறுகளையும், கற்காடுகளையும் கடந்து, சிவனார் எழுந்தருளி யிருக்கும் இடங்களி லெல்லாம் பணிந்து சென்று, அவர் காவிரியாற்றுக் கரையினை யடைந்தார். அங்கே அதில் மகிழ்ந்து நீராடி, வடக்குக் கரையில் ஏறி, சீரும் திருவும் விளங்கும் செம்பொன் மன்றுள் திரு நடனம் போற்ற எழுந்த அன்பால் உருகும் மனத்தோடும் சென்று தில்லை

மூதூரின் எல்லையைக் கண்டு வணங்கினார். தில்லைவாழந் தணர் அனைவரும் அவரை எதிர்கொண் டழைத்தனர். சேரமான் அவர்களைப் பணிந்து, தில்லைமா நகரினுட் புகுந்து, தெருக்களின் வழியே நடந்து சென்று, ஏழு நிலைகளையுடைய அழகான கோபுரத்தின் முன்னர் நில மிசை வீழ்ந்து பணிந்து, அன்புக் கண்ணீர் ததும்பக் கோவிலினுட் புகுந்து, சிறந்த மணி மாளிகைகளை வலங் கொண்டு, பேரம்பலத்தைப் பணிந்து, உலகெலாம் வாழ அருளுடைக்கூத்து நிகழும் திருச்சிற்றம்பலத்தைக் கண் டார். அளவில்லாத இன்பத்தை விளைவிக்கின்ற கூத்தர் தாம் ஆடும்படிக்குத் தூக்கிய திருவடியை அவருக்குக் காட்டியருளக் கண்ணாரக் கண்டு, தமது உளமும், புல னும் ஒருவழிச் சென்று உருக, சேரமான் கடவுளுடைய பேரருளை வழுத்தினார். அப்போது கழறிற்றறிவார் அடைந்த இன்பத்துக்கோ ரளவில்லை. அவர் இன்பக் கடலுள் ஆழ்ந்தவராய், பெருமானை நோக்கி, பொன் வண்ணத் தந்தாதி எனும் ஒரு பா மாலை நூல் பாடிப் புகழ்ந்தனர். உலக மெல்லாம் போற்றிப் பெருவாழ் வடையும் அத்தமிழ்ச் சொன்மாலையைத் தமது திருச் செவியில் ஏற்றருளிய கூத்தனார், அவருக்குப் பரிசிலா கத் தமது தூக்கிய திருவடிச் சிலம்பினின் றெழுந்த ஒலியை எதிரே கேட்பித்தார். அவ்வொலி கேட்ட மன்னவனார், அளவி லின்ப முற்றுக் கும்பிட்டு நின்று தொழுது, புறம் போந்து, அவ்வூரிலே தங்கினார். அவர் ஒவ்வொரு நாளும் திருக்களிற்றுப் படியின் மருங்கு சென்று, இரவும் பகலும் பணிந்தேத்தி, இன்பம் சிறந்து, அவ்வூரிலே சில நாளிருந்தார்.

ஒரு நாள் அவர் தமக்குத் திருச்சிலம்பொலி காட்டத் தாமதித்ததற்குக் காரணராயிருந்த நம்பியாரூரரைக் காண வேண்டுமென்று பேரவாக் கொண்டார். அதனால், திருச்சிற்றம்பலம் பணிந்து, விடை பெற்று, அவர் தில்லை யெல்லையைக் கடந்து, வழி நடந்து, திருஞான சம்பந்தப் பெருமான் தோன்றி யருளிய சீர்காழியைச் சேர்ந்து வணங்கினார்; அங்கிருந்து புறப்பட்டுப் பல கோயில்களையும் வழிபட்டுக் காவிரிக்கரையை யடைந்து, அவ்யாற்றைக் கடந்து, அக்கரை யேறி, அதற்கப்பாலுள்ள ஊர்களையும் வணங்கிக்கொண்டு, திருவாரூரைக்

சேரனார் வருவதற்கு முந்தியே, திருவாரூரிலே யிருந்த திருநாவலூரர், ஒரு நாள் பக்கத்தி லிருக்கும் திருநாகைக்காரோணம் என்ற ஊரை யடைந்தார். தமக்கு அழகிய மணிகள் பதித்த பொன்னணிகளும், நவ மணிகளும், பட்டாடைகளும், சாந்தமும், குதிரைகளும், பைம்பொன்னுலாகிய உடை வாளும் வேண்டிப் பெறுமாறே அவர் அவ்வூருக்கேகினார். எப்பொழுதும் திருமணக் கோலத்தோடு வாழ வேண்டுமென்று சிவபெருமானால் ஆணை யிடப்பெற்ற பெரு வாழ்வினை யுடையவராகிய சுந்தரர், அவ்வூர்க் கோயிலை யடைந்து, "கடற் கரையி லுள்ள திருநாகைக்காரோணம் மேவியிருந்தீரே, நீர் செத்தார்தம் எலும்பணிந்து, சேவேறித் திரிவீர். செல்வத்தை மறைத்து வைததீர். எனக்கு ஒரு நாளிரங்கீர். பாம்பினொடு படர் சடைகள் அவை காட்டி என்னை வெருட்டிப் பகட்ட நான் உம்மை ஒட்டுவேனோ? பல காலு முழன்றேன். எனக்கு முத்

தாரம் இலங்கி மிளிர் மணி வயிரக் கோவை இவை நான் பூணத் தந்தருளி, என் மெய்க்கு இனிது நாறும் கத்தூரியும், மணம் கமழ் சாந்தும் பணித்தருள வேண்டும். தொண்டாடித் திரிவேனைத் தொழும்பு தலைக்கேற்றும் சுந்தரரே, நீர் நும்மைக் கண்டார்க்கும் காண்பரியராய்க் கனலாகி நிமிர்ந்தீர். கடல் நாகைக் காரோணம் மேவியிருந்தீரே, பரவை என்னிடம் கொண்ட ஊடல் தொலையாத காலத்து ஒரு சொற்பாடாய் வந்தீர். இலங்கையர் கோன் வரையெடுக்க, அவனை அடர்த்தீர். பின்பு அவன் திப்பிய கீதம் பாட, அவனுக்குத் தேரோடு வாள் தந்தீர். திருவீழிமிழலையிலே அடியார்கள் வருந்தாதுண்ண நித்தலும் காசருளிச் செய்தீர். எனக்குப் பட்டோடு சாந்தம் பணித்தருளாதிருக்கின்ற பரிசு என்ன படிறோ! கடல் நாகைக் காரோணம் மேவியிருந்தீரே, மாற்றம் மேல் ஒன்றுரையீர், வாளாநீரிருந்தீர். வாழ்விப்பன் என ஆண்டீர். நான் உமக்கு வழியடியேன். நீரோ, பெருஞ் செல்வர்; நல்கூர்ந்தீர் அல்லீர். திருவாரூரில் உமக்குள்ள அருநிதிய மதனில் முக்கூற்றில் ஒரு கூறு எனக்கு வேண்டும். தாரீரேல், ஒரு பொழுதும் அடியெடுக்கலொட்டேன். நான் காற்றனைய கடும்பரிமா ஏறுவது வேண்டும். திண் என என் உடல் விருத்தி தாரீரேயாகில், திருமேனி வருந்தவே நானே வளைக்கின்றேன். கண்ணறையன் கொடும்பாடன் என்றுரைக்க வேண்டா. என்னை மாநிதியம் தருவனென்று வல்லீராய் ஆண்டீர். பொற் சுரிகைமேல் ஒரு பொற்பூவும் பட்டிகையும் புரிந்தருள வேண்டும். கறி விரவு நெய் சோறு முப்போதும் வேண்டும். பண் மயத்த மொழிப் பரவை சங்கிலிக்கும்

எனக்கும் பற்ருய பெருமானே, மற்றுரை யுடையேன்? உமக்கடியேன். 'நுறை தீர்க்க வேண்டும்,'' என்று பணிந்து பாடித் தாம் வேண்டியன வெல்லாம் பெற்றுர். பின்பு அவர் அங்கிருந்து புறப்பட்டு, வழியிலிருந்த பல ஊர்களையும் கும்பிட்டுக்கொண்டு, திருவாரூரில் வந்திருந்தார்.

சேரர் பெருமான் திருவாரூர் எல்லையில் சார்ந்ததை நம்பியாரூரர் அறிந்து, எதிர் கொண்டு சென்றுர். சேரமான், தம்பிரான் தோழர் திருவடியில் வீழ்ந்து பணிந்தார். தம் முன்பு பணிந்த பெருமானைச் சுந்தரர் தாமும் பணிந்து, விருப்பினேடும் தமது மணங் கமழும் மார்போடு அன்பு பெருகத் தழுவ, மன்னவரும் அவரை ஆர்வத்தோடும் தழுவி, இன்ப வெள்ளத்திடை மூழ்கி, என்புருக, இருவரும் உயிரொன்றி, உடம்பும் ஒன்றும் என நின்றனர். அந்நிலைமை கண்ட தொண்டர் குழாம் அளவில் மகிழ்வெய்திச் சேரர் பெருமானும் வன்றெண்டரும் கொண்ட சிறந்த நட்பைக் கண்டு, தம்பிரான் தோழருக்குச் சேரமான் தோழர் என்ற பெயரை வழங்கிற்று.

நண்ப ரிருவரும் ஒரு வழிப்பட்ட உணர்வுடையராய், ஒருவருக்கொருவர் இன்ப மொழியுரைத்து, கை கோத்துக்கொண்டு, பரமர் தாள் பணியுமாறு தெருக்களினூடே புகுந்து சென்று, திருக்கோயிலினுட் புகுந்தனர். தேவாசிரிய மண்டபத்தை முதலில் பணிந்து, திருமாளிகையை வலங் கொண்டு, அவர்கள் உள்ளே புகுந்தார்கள். சேரர் பெருமான், ஆரூடை நம்பி முன்பாக நின்று தொழுது, கண்ணில் இன்ப அருவி வீழ

நிலத்தின்மிசை வீழ்ந்து, தமக்கென்று மினிய தம்பெரு மான் பூங்கழல்க ளிறைஞ்சி, அப்பெருமானைத் திருமும் மணிக் கோவை என்றபாமாலையால் அணிபெறச்செய்து கேட்பித்தார். தம்பிரானாரும் அதனை ஏற்றருளினார். அவ்வாறு அருள் பெற்றெழுந்த தம் தோழரை உடன் கொண்டு, நம்பியாரூரர் வெளிப் போந்து, பரவையார் திருமாளிகைக்கு அழைத்துச் சென்றார். அங்கே பரவை யார் விளக்கேற்றி, நிறை குடமும் வைத்து, பூமாலைகளை நாலவிட்டு, மணமிகும் அகிற்புகை கமழப் பணிப் பெண் கள் எங்கும் புகழ் பாடத் தாமும் எதிர்கொண்டுவந்தார். அன்ப ரிருவரும் அம்மாளிகையி னுள்ளே புகுந்தனர். அங்கே ஒளி வீசும் பல மணி பதித்துச் செம்பொன்னா லாகிய பேரமளிமீது பெருமாள்தமை யிருத்தி, நம்பியா ரூரர் தாமும் அதன்மீதேறி உடனிருந்தார். குற்றமற்ற குண மாண்புடைய பரவையார், தம் கணவனாருக்கும் அவர் தோழருக்கும் முறைப்படி பூசனைகள் புரிந்தார். அவ்வம்மையார் பின் சேரர்குலப் பெருமாளுக்குத் துணை வராணையால் திருவமுதும் அமைத்து, அவருடன் வந்தார்க் கெல்லாம் விருந்தமைத்தார்.

தாம் உணவு சமைப்பித்ததைப் பரவையார் வந்து அறிவிக்க, நம்பியாரூரர், "நாம் செய்த தவத்தின் பயனாக நம் வீட்டில் அமுது செய்யச் சேரர் பெருமான் எழுந் தருளினார். ஒரு கொடியும் தாழாது அமுது செய்வி," என்றருளினார். அம்மையார் அதனைச் செவி யேற்று, தம் திருக்கரங்களால் இரண்டு படியாகப் பரிகலங்க ளிட்ட னர். ஆளுடைய நம்பியார் பெருமாளை நோக்கித் தம் முடனே அமுது செய்தருள வேண்டுமென வேண்டி

ஞர். உடனே பெருமாள் அவரை விரைந்து வணங்கி, வெருவுற, அந்நிலை கண்டருளி, அந்தணர் பெருமான் அவருடைய கையைப் பிடித்துக்கொண்டு மறுபடியும் வேண்டிக்கொள்ள, சேரமான் உடனுண்ண இசைந்த னர். பரவையார் அவ்விருவருக்கும் மிகுந்த விருப்பத் தோடும் அமுது செய்வித்தார். பரிசனங்களும் அறு சுவையால் தாம் விரும்பியவாறு விருந்துண்டு களி சிறந் தார்கள். கற்பூரம் கலந்த பனி நீர்ச் சந்தனக் கலவையும், பூமாலைகளும், இனிய மணமுடைய அடைகாயும், விருந் துண்டா ரனைவரும் பெற்று மகிழ்ந்தனர்.

மலை நாட்டரசர் பெருமானர் நம்பியாரை வணங்க, அவரும் எதிர் வணங்கித் தழுவி, அம்மாளிகையிற் றங்கி யிருந்தனர். இவ்வாறு சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் வன்றொண்டர் பாண்டிய நாட்டிலுள்ள மதுரை முதலிய மூதூர்களை வணங்க நினைந்தார். சேரர் பிரானும் நம்பியாரூரரைப் பிரிய மாட்டாமையாலும், தமக்குத் திருமுகம் கொடுத்தருளிய சொக்க நாதரை நேரிற் கண்டு பணிய எழுந்த பெருவிருப்பாலும், நம்பியாரூர ருடனே செல்லத் துணிந்தார். அவ்வாறு இருவர் திரு வுள்ளமும் இசைந்த பொழுது இருவரும் எழுந்து, அழ கமர் கோயிலுட் புகுந்து, ஒப்பிலா ஒருவர் திருத்தாள் இறைஞ்சி, விடை பெற்றுத் தெற்கு நோக்கிப் புறப்பட் டனர். அவர்களுடைய பரிவாரங்களும், ஊர்திகளும், பண்டாரம் கொண்டு போதுவாரும் அவர்களுடன் சென்றார்கள்.

அவர்கள் கீழ்வேளூரை யடைந்தார்கள். அங்கே பரமரைப் பணிந்து புறப்பட்டு, அழகான கடற்கரைச்

சோலைகள் சூழ்ந்த நாகைப்பட்டினத்தை யடைந்து, அந் நாகை நகரிலுள்ள காரோணம் என்ற கோவிலைக் கும்பிட்டார்கள். அங்கே நம்பியாரூரர், அன்பர் சிந்தையினை உருகச் செய்யும், 'திருக்காரோணத் திருப்பீரே,' என்னும் செந்தமிழ் மாலை பாடினார். அவ்வூரில் அவர்கள் சில நாளுறைந்தார்கள்.

அவ்வூரின் நீங்கிய அன்ப ரிருவரும் வழியி லிருந்த பல கோயில்களையும் வணங்கிக்கொண்டு, திருமறைக் காட்டிற்கு வந்தனர். கடற் கரையை யடுத்த அவ்வூர்க் கோயிலுக்குப் போய், ஆளுடைய அரசும் ஆளுடைய பிள்ளையாரும் திறக்கவும் அடைக்கவும் பாடிய திரு வாயிலை யடைந்து, கண்களில் அன்பு நீர் பொழிய, அந் நாயன்மார்களை நினைந்து வணங்கினர். பின்பு இருவரும் கோயிலினுள்ளே புகுந்தனர்.

நம்பியாரூரர், "யாழைப் பழித்தன்ன மொழி மங்கை யொரு பங்கர், எண் தோளினர், முக்கண்ணர் இடம், சங்கங்களும், இலங்கும் இப்பியும், வலம் புரிகளும் இடறி, வங்கங்களும் உயர் கூம்பொடு வணங்கும் மறைக் காடே," எனத் தமிழ்ப் பதிக மாலை பாடினார். சேர மன்னரும் சிறந்த திருவந்தாதி பாடித் திருமறைக் காடரைத் தொழுதனர். அவ்விரு பெருந்தொண்டரும் சில நாள் அவ்வூரிற்றங்கி, நீங்கித் திருஅகத்தியான்பள்ளி என்ற ஊரைப் பணிந்து, திருக்குழகர் கோடி என்ற ஊரை யடைந்தனர்; அங்கே குடிகள் வாழும் இடங்களிலெல்லாம் தேடிக் காணாது, பின் கோயிலினுள்ளே புகுந்து, தொழுதனர். நம்பியாரூரர்,

"கடிதாய்க் கடற்காற்று வந்தெற்றக் கரைமேல்
குடிதான் அயலேயிருந் தால்குற்ற மாமோ ?
கொடியேன் கண்கள்கண் டனகோடிக் குழகீர் !
அடிகேள் உமக்குஆர் துணையாக இருந்தீரே ?"

திருமறைக்காட்டின் தென்பால் பத்தர் பல பாட இருந்த பரமரே, காடேல், மிக வாலிது ; குடியில்லை. கொடியார் பலர் வேடர் வாழும் கரைமேல் எற்றால் தனியே யிருந் தீர்? எம்பிரானே," எனப் பாடிக் கண்ணீர்வாரப் போற்றி, அங்கு வைகினார்.

## 16. பாண்டி நாட்டுத் தலங்களை வணங்கியது

திருக்குழகர் கோடியிலிருந்து நம்பியாரூரரும் சேரமா னும் புறப்பட்டு, சோழநாட்டில் தம் வழியிலிருந்த பல இடங்களையும் பணிந்துகொண்டு, பாண்டி நாட்டினைச் சார்ந்தனர் ; முதலில் திருப்புத்தூரை யடைந்தனர். அங்கே இறைவரை இறைஞ்சிப் புறப்பட்டு, அவர்கள் உயர்ந்த மணி மாடங்கள் நிறைந்த மதுரை மூதூரைச் சேர்ந்தார்கள்.

சேரமானும் சேரமான் தோழரும் தமது நகரத்தை அணுகி வருவதை அறிந்த வழுதியார், பேரன்போடும் தமது மாநகரை அணிபெறச் செய்து எதிர்கொண்டு வந் தனர். தென்னவர் கோன் மகளாரை முன்னரே திரு வேட்டு அந்நகரின்கண் இனிதிருந்த சோழனாரும் அவ ருடன்கூட எதிரேற்றார். மன்னவர் அனைவரும் திருநாவ லூர்க் கோமானுடன் கோயிலை வந்தடைந்தனர். அவர் கள் அடியார்களுக்கு எளியராம் ஆலவாய்ப் பெருமான் புனை கழல் தாழ்ந்து, எழுந்து வாழ்த்தினர். வன்றொண்

டர், பெருவாய்மைத் தமிழ்ப் பாமலர் புனைந்து, பெரு மகிழ்ச்சி யெய்தினர். உலகம் புகழும் சேரர் பெருமா னும் பார்மிசை வீழ்ந்து, "அடியேனையும் ஒரு பொரு ளாக எண்ணித் திருமுகம் விடுத்த தமது அருளின் முடிவை இன்னதென் றறிந்திலேன்," என மொழிகள் தடுமாறப் பரவிக் களி கூர்ந்தார். சோழனுடன் செழி யர்பிரான் சேரரோடு நம்பியாரூரரையும் உடனழைத்துக் கொண்டு, தமது செம்பொன்மணி மாளிகையிற் புகுந்து, இன்சொற் கூறி, வேண்டுவன தந்து, இன்ப மளித்தார். நம்பியாரூரர் நாள்தோறும் சொக்கநாதரை உள மகிழக் கும்பிட்டு, மூவேந்தருடன் ஒரு மனப்பட்டு, அவ்வூரில் இனிதிருந்தார். அந்நாளில் அந்நகருக்கு அருகிலுள்ள ஊர்களுக்குச் சென்று, திரிபுரம் எரித்த விரிசடைக் கட வுளை நம்பியாரூரர் தொழ நினைந்தார்.

ஒரு நாள் தம்மை முடி வேந்தர் மூவரும் தொழுது வர, வன்றொண்டர் திருப்பூவணம் என்ற நகரைச் சேர்ந் தார். அவ்வூருக்கருகில் அவர்கள் போய்க்கொண்டிருக் கும்பொழுது, அவ்வூரிலிருந்து எதிர் கொள்ள வந்த தொண்டர்கள், அவருக்கு அவ்வூரைக் காட்டினார்கள். அப்போது நம்பியாரூரர், "திருவுடையார், அடைவார் வினை தீர்க்கும் புரிவுடையார் உறை பூவணம் ஈதோ?

" எண்ணி யிருந்து கிடந்து நடந்தும்
அண்ணல் எனநினை வார்வினை தீர்ப்பார்
பண்ணிசை யார்மொழி யார்பலர் பாட
புண்ணிய னார்உறை பூவணம் ஈதோ?"

முன் தம்மை நினையார் புரம் மூன்று எரியூட்டியவர், இறையளவேனும் உளம் நெக்கு நினைப்பவர்களுடை

நெஞ்சத்துள்ளே புக்குறைவார் எழுந்தருளி யிருக்கும் பூவணம் ஈதோ?" எனப் பாடி வினவிச் சென்று, திருப் பூவணத்திலே பெருமான் மகிழும் கோயிலை வலங் கொண்டு, திருமுன் பணிந்தெழுந்து நின்று,பரவிப் பாடி, அவ்வூரிலிருந்தார். சில நாள் அவ்வூரிற் றங்கியிருந்த பின் அவர் மூவேந்தருடன் புறப்பட்டு, மதுரைக்கு வந்து, திருவால வாயுடையார் மலர்த்தாள் எப்பொழுதும் பணிந்தேத்தி, இன்புற்று, அங்கு அமர்ந்திருந்தார். அவர் அந்நகரின் அருகிலுள்ள திருஆப்பனூருக்கும் திருவேடகம் முதலிய தலங்களுக்கும் போய், மறுபடியும் மதுரையில் வந்திருந்தார்.

தம்பிரான் தோழர் தம் நண்பர்களாகிய மூவேந்த ரோடும் திருப்பரங் குன்றத்திற்குப் போய்ப் பெருமானை வழிபட்டார். அவர், "அடிகேள், முண்டம் தரித்தீர்; முதுகாடுறைவீர்; முழு நீறு மெய் பூசுதிர்; மூக்கப் பாம் பைக் கண்டத்திலும் தோளிலும் கட்டி வைத்தீர்; உமக்கு ஆட்செய அஞ்சுதும். அடிகேள், தென்னத் தென தெத்தென என்று பாடிச் சில பூதமும் நீரும் திசை திசையன பன்னன்மறை பாடுதிர். கண் மூன் றுடையீர், கண்ணேயாயிருந்தால், அங்கத்து உறு நோய் களைந்து ஆளகில்லீர். மலையின் தலை யல்லது கோயில் கொள்ளீர். கூறையும் சோறும் தந்து ஆளகில்லீர். தேரோட வரை யெடுத்த அரக்கன் சிரம் பத்து இறுத் தீர். உம் செய்கை யெல்லாம் ஆரோடும் கூடா. அடி கேள், இஃது என்னை? அடியோம் உமக்கு ஆட்செய அஞ்சுதுமே!" என அஞ்சிப் பாடிய பாடல்களை மூவேந் தர்களும் கேட்டு, அவரைப் பணிந்தார்கள். வன்

ளுண்டர் பிற இடங்களையும் வணங்குவதற்காக வஞ்சி வேந்தருடன் புறப்பட்டார். இரு பெருவேந்தர்களும் தென்னுட்டில் அவர்களுக்கு வேண்டுவன செய்தமைப்ப தற்காகத் தக்காரை முன்னரே யனுப்பி மதுரைக்கு மீண்டார்கள்.

நண்ப ரிருவரும் வழியி லிருந்த பல பதிகளையும் பணிந்துகொண்டு, திருக்குற்றாலத்தை யடைந்தனர். அவர்கள் அங்கே எழுந்தருளியிருக்கும் கூத்துடைக் கடவுள் குரை கழல் இறைஞ்சி, சொன்மலர் புனைந்து, குறும்பலாவைத் தொழுது, இப்பால் மதி முடிப் பெரு மான் பதி பல பணிந்தனர். தோழரிருவரும் பின்னர்த் திருநெல்வேலிக்கு வந்து, நீற்றழகர்தம்மைப் பணிந்து பாடி, அவ்வூரை நீங்கி, பல் வேறு பதிகளை வணங்கிக் கொண்டு, திரு இராமேச்சரத்திற்கு வந்து சேர்ந்தனர். அங்கே நம்பியாரூரர் இராம நாதரைத் தமிழ்ப் பாமாலை புனைந்து கும்பிட்டார். அவர் அங்கிருந்துகொண்டே ஈழ மண்டலத்திலுள்ள மாந்தோட்டத்திலே திருக்கே தீச்சரத்து எழுந்தருளியிருக்கும் பரமர் பொன்னடிகளை நினைந்துருகி, "கறைக்கண்டர், பங்கம் செய்த பிறை சூடினர், தேவர், எனையாள்வார், பாலாவியின் கரை மேல் திருக்கேதீச்சரத்தாரே.

"அங்கத்துறு நோய்கள்அடி யார்மேல்ஒழித் தருளி,
வங்கமலி கின்றகடல் மாதோட்டநன் னகரில்
பங்கம்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேல்
தெங்கம்பொழில் சூழ்ந்ததிருக் கேதீச்சரத் தானே."

எனச் சொன்மலர் மாலைகள் சாத்தி, தூரத்தே தொழு தமர்ந்தார். வன்றொண்டர் மலை வேந்தரோடும் திரு

இராமேச்சரத்தை விட்டுப் புறப்பட்டுப் பிற பதிகளையும் வணங்கி, திருச்சுழியல் என்ற ஊரையடைந்தார். அங்கே அவர் கோயிலினுள்ளே சென்று, கீழ் வீழ்ந்திறைஞ்சி, "எம்பெருமான் எழுந்தருளி யிருக்கும் திருச்சுழியலை நினைவார்தமை நமன் தமர் நலியார். புரமெரியச் சிலை வளைத்தார் உறையும் இடமாகிய கடல் கொணரும் முத்தம் கரைக் கேற்றக் கொவ்வைத் துவர் வாயார் குடைந் தாடும் திருச்சுழியலை வழிபாடு செய்தெழுவார் அவ்வத் திசைக்கு அரசராவர். சைவத்த செவ்வுருவர், திருநீற்றர், திருமலையார்க்கு அயலருகே தேரூர்தரும் அரக்கன் சிரம் நெரித்தார் திருச்சுழியலை மெய் வைத்து அடி நினைவார் வினை தீர்த்தல் எளிதாமே," எனப் பாடிப் புகழ்ந்தார். அன்றிரவு அவ்வூரில் நம்பியாரூரருக்குப் பெருமான் கனவின்கண் காளையாம் திருவடிவத்தோடும் செங்கையினில் பொற்செண்டும் திருமுடியில் சுழியமுங் கொண்டு எங்குமிலாத் திருவுருவத்தை அவர் என்புருகக் காட்டி யருளினர். அவர், "யாம் இருப்பது கானப்பேர்" என்றுநம்பியாரூரருக்குக் கூறிமறைந்தனர். நம்பியாரூரர் விழித்தெழுந்து, அதிசயித்துத் தாம் கண்ட காட்சியைக் கழறிற்றறிவாருக்கு மொழிந்தருளி, அவருடன் திருக்கானப்பேரை நோக்கிப் புறப்பட்டார்.

நம்பியாரூரர், "சோதி இளம்பிறையும், தொண்டை யெனத்திகழும் கண்டமும், எண்டோளும், கோலநறுஞ் சடைமேல் வண்ணமும், கண் குளிரக் கண்டு அடியேன் அங்கையில் மாமலர் கொண்டு என்கண் அல்லல் கெடக் கற்றனவும் பரவிக் கை தொழல் என்றுகொலோ, கார் வயல் சூழ் கானப்பேருறை காளையையே? இறைவராம்

எந்தையாரையும் விரவி நண்ணுதலைப் படுமாறு எங்ஙனம்? அயலே நைகின்ற என்னை மதித்து உய்யும் வண்ணம் அருளும் கண்ணுதலை, கனியை, மெய்யே பற்றுமவர்க்கு அமுதை, நாளுடை மாடெனவே நன்மைதரும் பரமரை, வஞ்சமனத்து இறையும் நெஞ்சு அணுகாதவரை, தூதரை, என்றனையாளும் தோழரை, நாயகரை, நாயடியேன் எய்துவது என்றுகொலோ, கார்வயல் சூழ் கானப்பேருறை காளையையே?" என்று தண்டமிழால் உன்னி உள்ளுருகிப் பரவித் திருக்கானப்பேர் வளம்பதியில் வந்தெய்தினர். அங்கே அவர் அழகு மிக்க பெருங்கோயிலில் புகுந்து, முதல்வர்தம் சேவடி தாழ்ந்து, செழுந்தமிழ் மாலை பாடி, ஆராத காதலுடன் அவ்வூரில் சில நாள் அமர்ந்தருளினர்.

பின்பு அவர் தம் தோழருடன் திருப்புனவாயிலை யடைந்தார். அங்கே அவர் இறையவர் முன் சென்று,

"சித்தம் நீநினை என்னொடு சூளறும் வைகலும்
மத்த யானையின் ஈருரி போர்த்தமணாளனூர்,
பத்தர் தாம்பலர் பாடிநின் றாடும் பழம்பதி
பொத்தில் ஆந்தைகள் பாட்ட றாப்புன வாயிலே."

நல்லார், நமை ஆளுடையார் பழம்பதி, மற வேடுவர் பொருது சாத்தொடு பூசலறாததும் கள்ளி வற்றிப் புல் தீய்ந்து வெங்கானம் கழிக்கவே புள்ளிமான் இனம்புக்கு ஒளிப்பதுமாகிய புனவாயிலை," எனத் தமிழ் பாடி, அவ்வூரில் அமர்ந்திருந்தார்.

சேரமான் தோழர், தம் நண்பருடன் அவ்வூரினின்றும் புறப்பட்டுப் பல பதிகளையும் பணிந்து, குன்றுகளோடு கானகங்களையும் கடந்து, காவிரி நாடணைந்து,

அங்கே பாம்பணி மாநகர்தன்னில் பாதாளீச்சுரம் என்ற கோயிலைக் கும்பிட்டு, மற்றும் பல ஊர்களையும் கண்டு தொழுது, மிகுந்த விசைவினோடும் திருவாரூரை யடைந்தார். அங்கே அவர் சேரரோடும் பூங்கோயில் பணிந்து, நெடும்பொழுது பரவி நின்று, பதிகம் பாடி, பரவையார் மாளிகைக்கு வந்து சேர்ந்தார். அவ்வம்மையாரும் தமது மாளிகையை அணி பெறச் செய்து, இனிய கறிகளோடு உணவு சமைத்துப் படைத்து, இன்சொற் கூறி, நண்பர் இருவரையும் மகிழ்வித்தார். அவ்விருவரும் காலந் தோறும் கோவிலுக்குப் போய் நம்பரைப் பணிந்து நிலைச் செண்டு, பரிச்செண்டு வீசுதலாகிய பல விளையாடல்கள் விளையாடி, இனிதிருந்தனர். மேலும், அவர் ஒருவராலும் விலக்க முடியாதபடி போர்செய்யும் தகர்ப் பாய்ச்சலும் யானைப்போரும் சேவல் முதலிய பல புள்ளினங்களின் போரும் கண்டு இன்புற்றனர்.

## 17. சேர நாடு சென்றது

இவ்வாறு பல நாட்கள் சென்றன. வள்ளலாராகிய சேரளுர் தம் தோழரைத் தம் நாட்டிற்கு உடனழைத்தேக விருப்ப மீக்கூர்ந்து, அவரை இடை விடாமல் வேண்டி நின்றார். நம்பியாரூரரும் அவருடைய வேண்டுதலுக் கிணங்கினர். ஒரு நாள் நண்ப ரிருவரும் பரவையாரிடத்து விடை பெற்றுக்கொண்டு, பூங்கோயில் புகுந்து, தம்மை யாட்கொண்ட வள்ளலிடம் விடையேற்று, அவ்வூரை விட்டுப் புறப்பட்டு, மேற்கு நோக்கிச் சென்றனர். அவர்கள் காவிரி யாற்றின் தென்கரை வழியே போய், அங்கே சிவனர் மகிழ்ந்தெழுந்தருளும்

கோயில் பல இறைஞ்சித் திருக்கண்டியூர் அடைந்து, அன்புருக்கும் சிந்தையுடன் பணிந்து, புறத்தே வந்தார்கள். அப்போது அவ்யாற்றின் வடகரையிலே திருவையாறு தோன்றிற்று. அவர்கள் தங்கள் உடலும் உள்ளமும் உருக, உச்சியின்மேல் மலர்க் கரங்கள் குவித்தருவிக் கடல்போலப் பெருகிவரும் அக்காவிரியைக் கடந்து, திருவையாற்றுப் பெருமானைத் தொழ நினைந்தார்கள்.

சேரமான் எவ்வாறாவது திருவை யாற்றிற்குப் போகவேண்டும் என நம்பியாரூரரை வேண்டினார். ஆறோ இரு கரையும் பெருகித் தோணிகளும் போகா வண்ணம் அலை மோதிச் சென்றது. அதனால், நம்பியாரூரர் யாற்றைக் கடந்துபோக வழியறியாராய்,

"பரவும் பரிசொன் றறியேன்நான்
பண்டே உம்மைப் பயிலாதேன்
இரவும் பகலும் நினைந்தாலும்
எய்த நினைய மாட்டேன்நான்."

ஐயாறுடைய அடிகளே, வழி நின்று ஒழிந்தேன். பிழைத்த பிழையொன்று அறியேன் யான். பிழையைத் தீரப் பணியீரே. காவிரிக் கோட்டத்து ஐயாறுடைய அடிகளே, கதிர் கொள் பசியை ஒத்தே நான் கண்டேன். ஐயாறுடைய அடிகளே, கூடி அடியார் இருந்தாலும் குணம் ஒன்றில்லீர், குறிப்பில்லீர். ஊடியிருந்து உம்மை உணர்கிலேன்; தேடி எங்கும்காண்கிலேன்; திருவாரூரே சிந்திப்பன்," என்று பெருவிருப்புடன் அழைத்துப் பெருமை விளங்கும் திருப்பதிகம் இசைத்தனர். அதனைக் கேட்ட செம்பொன் ஒளியார், ஆற்றின் அக்கரையில் தனது கன்று தடையுண்டு எதிரழைக்கக் கேட்டுக்கதறிக்

கனைக்கும் புனிற்றுப் போல, அனைவரும் கேட்க 'ஓலம்,' எனமொழிந்தார். அப்போது அப்பெருக்காறுமேல்பால் பளிங்குவெற்பென நின்றது. கீழ்பால் நீரோவடிந்து விட்டது. நல்ல வழி யுண்டானது கண்ட நண்ப ரிருவரும், இன்பக் கண்ணீர் மழைபோல வடித்து, உடல் புளகித்தனர். நம்பியாரூரர், "இத்தன்மையைப் பெருமான் உமக்கே அளித்தார்," என்று மகிழ்ந்து, தம்பிரானுரைப் புகழ்ந்துகொண்டு, சேரர் பிரானோடும் காவிரி யாற்றில் இறங்கிப் பரிசனங்களோடும் சென்று, திருவையாற்றை யடைந்து ஐயாறுடைய அடிகள்முன் பணிந்து, எழுந்து பரவினர் இறைவர் திருவருளைப் பெற்ற தொண்டர் இருவரும் பின் வந்த வழியே திரும்பிப் போய்த் தென் கரையைச் சேர்ந்தனர். உடனே மேல்பால் நின்ற நீர் தொடர்ந்து பெருகிச் செல்வதாயிற்று. இச்செயலைக் கண்டு இருவரும் வியப்பெய்தி, திருவையாற்றைத் தொழுது, மேற்கு நோக்கிப் போய், வழிக்கண்ணிருந்த பிறபதிகளையும் கும்பிட்டு, கொங்கநாட்டையும் கடந்து, சேர நாட்டை யடைந்தனர்.

தோழரிருவரும் வருவதை யுணர்ந்த மலைநாட்டினர் அனைவரும் தம் ஊர்களி லெல்லாம் தோரணங்களும் பந்தல்களும் அமைத்து, அழகுறச் செய்து, முழவொலி யோடும் எதிர் கொண்டனர். பெருமை மிக்க அமைச்சர், சேனை வெள்ளத்தோடும் எதிரேற்றனர். சேரமான் தம் தோழரை யழைத்துக்கொண்டு, எல்லா விதமான அணிகளும் பெற்றுத் திகழ்கின்ற தமது தலை நகர மாகிய கொடுங்கோளூரை நகரமாந்தர்கள் எதிர்கொள்ள நண்ணினர். அரண்மனையை அடைவதன் முன்னர் இருவரும்

திருவஞ்சைக்களம் புகுந்தனர். அங்கே நம்பியாரூரர் சிவபெருமான் பொன்னடி புகழ்ந்து, "முடிப்பது கங்கை; திருக்கைகளில் பிடிப்பது பாம்பன்றி யில்லையோ எம்பிரானுக்கே? வெள்ளேறன்றி ஏறுவதில்லையோ எம்பிரானுக்கே? தொண்டர்காள், எம்பிரானை வெட்டெனப் பேசன்மின். ஆதியும் அந்தமும் ஊரும் ஒன்றில்லை. தொழ விரும்புவார் எம்பிரானுக்குப் பேரும் ஓராயிரம் என்பரால். இனி எம்பிரானுக்கு எரியின்றி அங்கைக்கு ஒன்றில்லையோ?" எனப் புகழ் மாலை புனைந்து போற்றினார். கோயிலின் முன்றிலில் வந்த சேரமான், அங்கு நின்றிருந்த யானைமீது நம்பியாரூரரை ஏற்றித் தாமும் ஏறிக்கொண்டு, நகரை வலங் கொண்டு வந்தார். அவ்வூரவர் என்றுங் காணு அக்காட்சியைக் கண்டு, அவர்களைத் தொழுது, இன்பக்கடலினுள் ஆழ்ந்தனர். அரண்மனைவாயிலை யடைந்தவுடன் அரசர் பெருமான் தம் தோழரைக் கீழே இறக்கி, மாளிகையினுள்ளே அழைத்துச் சென்று, அங்கிருந்த பொன் மயமாக விளங்கிய அரியாசனத்தின் மேலே அவரை எழுந்தருளுவித்து, தாம் கீழே நின்றார். அரசர் பெருமான் மனைவியார் செம்பொற் கரகத்து வாச நீர் கொணர்ந்தனர். அதனால், அவர் நம்பியாரூரருடைய பொன்னடிகளை விளக்கப் புகுந்தார். சுந்தரரோ, தம் அழகிய திருவடிகளை மேலே தூக்கிக்கொண்டு, "நீர் இது செய்வது தகாது," என்றருளினர். உடனே மன்னர் பெருமான் தரணியில் வீழ்ந்து, "அடியேன் செய்வன வெல்லாம் இசைந்து ஏற்றருள வேண்டும்," என்று வேண்டினார். நம்பியாரூரர் அன்பின் பெருக்கால் எதிர் மறுக்க மாட்டாராய், உதியர் பிரான் செய்த

எல்லாம் கண்டிருந்தார். சேரமான் பெருமாள் வேண்டும் பூசனைக ளெல்லாம் செய்து மகிழ்ந்து, அவருடன் திருவமுது செய்து உவந்நார். பின்பு நம்பியாரூரர் கலவைச் சாந்தணிந்து, உயர்ந்த பட்டாடைகளை உடுத்து, மணிப் பூண் பல அணிந்து இன்புற்றார். தோழ ரிருவரும் அங்கே செண்டாடல், நீர் விளையாடல் ஆடி, ஆட்டுப் போர், யானைப்போர், மற்போர் கண்டு, நாடொறும் களி சிறந்தனர்.

இவ்வாறு சில நாட் செல்ல, ஒரு நாள் நம்பியாரூரர் திருவாரூரை நினைந்தார். அவர், "பொன்னும் மெய்ப் பொருளும் தந்து திருவும் இன்பமும் புணர்ப்பாரை, பின்னை என் பிழையைப் பொறுப்பாரை, பிழையெலாம் தவிரப்பணிப்பாரை, எளிவந்த பிரானை, துன்பமும் பிணியும் களைவாரை, விரவினால் விடுத்தற்கரியாரை, அணி ஆரூரரை மறக்கலு மாமே? அழியும் தன்மையாகிய இவ்வுடலைப் பொருளென்று, பொருளும் சுற்றமும் போகமுமாகிச் செய்வனவெல்லாம் வாராமே தவிர்க்கும் விதியாரை, வருத்தம் களைவாரை, உகந்து உள்கி நண்ணுதார்க்கு அரியாரை, காரிகையின் காரணமாக ஆரூரை மறத்தற் கரியாரை, செல்வ ஆரூரரை மறக்கலு மாமே?" என்று பாடி, திருவாரூரை நோக்கி, நண்பரிடம் விடை பெற்றுச் சென்றார். சேரனாரோ, அவரை விட்டுப் பிரிய மனமிலராய், பிரிவாற்றாமல் கைதொழுது பின் சென்று, வன்றொண்டர் முன்பெய்தி, "இன்று உமது பிரிவாற்றேன். என் செய்கேன் யான்?" எனப் பணிந்தார். நம்பியாரூரர், "நீர் ஒன்றும் வருந்தாமல், உமது பதியின் கண்ணிருந்து அரசாளும்," என மொழிந்தார். சேர

மான், "உமது அடி மலரிணை பணிவதே எனக்கு அரசாட்சி. ஆனால், நீர் திருவாரூருக்கு எழுந்தருளுவதை நீக்கவும் அஞ்சுகின்றேன்," என்றனர். அது கேட்ட வன்றொண்டர், "என்னுயிர்க்கு இன்னுயிராம் எழிலாரூர்ப் பெருமானை வன்னெஞ்சக் கள்வனேன் மறந்திரேன். நீர் மதி யணிந்தார் இன்னருளால் அரசளிக்க ஈண்டு இருப்பீர்," எனப் பணித்தார். அதற்கு மன்னவனார் இசைந்தருளி, அமைச்சரை யழைத்துத் தமது பண்டாரத்தில் அன்று வரை சேர்ந்த பொருள்களை யெல்லாம் கொண்டுவரப் பணித்தார். அவ்வாறே அவர்கள் மாநிதியங்களைப் பொதி விடைகள்மேலேற்றிக் கொண்டு வந்தார்கள். அவைகளை யெல்லாம் மன்னர்பிரான் நம்பியாரூரருடைய பரிசனங்களுக்கு முன் அனுப்பிப் பணிய, சுந்தரரும் அவரைத் தொழுது, வாரியெடுத்து, மார்புறத் தழுவி, விடையளித்தார். சேரலனார் மகோதை நகரில் புகுந்து நம்பியாரூரரை இடைவிடாது நினைந்து, அரசுரிமை புரிந்திருந்தார்.

நம்பியாரூரர், மலை நாடு கடந்து, கற்காடுகளையும் கான் யாறுகளையும், பல கானகங்களையும் தாண்டி, திருமுருகன் பூண்டி என்ற ஊருக்கருகே வந்தார். அப்போது விடைமே லழகியார் நம்பியாரூரருக்குத் தாமே பொருள் கொடுப்பதல்லால் மற்றொருவராகிய சேரமான் கொடுப்ப அவர் வாங்கி வருவதைத் தடுத்து, அதனைத் தாமே வாங்கிக் கொடுத்தருள எண்ணினார். அதனால், அவர் தம் பூதங்களை வேடர் வடிவாய்ச் சென்று வன்றொண்டருடைய பண்டாரத்தைக் கவர ஆணை தந்தார். அவ்வாறே அவர்கள் வேட்டுவப் படையாய்ச் சென்று,

செயிர்த் தெழுந்து, வில் வாங்கி, அம்பு தொடுத்துத் தாக்கி, "உங்களைக் கொல்வோம். இப்பொருள்களை இட்டுப்போங்கள்," என ஆரவாரித்து அப்பொருள்களை யெல்லாம் கவர்ந்துகொண்டார்கள். பறியுண்டார் அல்ல லுற்று, அழுங்கி, ஆரூரர்தம்பால் நிகழ்ந்த துரைத்த னர். சிவபெருமானுடைய திருவருளினால் அவ்வேடர் கள் நம்பியாரூரரை அணுகாமல் அகன்றார்கள்.

நிகழ்ந்தமை யுணர்ந்த தம்பிரான் தோழர், உடனே அத்திருமுருகன் பூண்டியில் புகுந்து, கோயிலைத் தேடிச் சென்று, தொழுது, திருமுன்பு நின்று, உருகிய அன் போடு கைகள் குவித்து, "எம்பிரானீரே, கொடுகு வெஞ் சிலை வடுக வேடுவர் குத்திக் கல்லினால் எறிந்து மோதிக் கூறை கொள்ளுமிடம்; நீர் மங்கைதன்னொடும் எத் துக்கு இங்கிருந்தீர்? எம்பிரானீரே, முல்லைத் தாது மணங் கமழ் இம்முருகன் பூண்டி மாநகர்வாய் எல்லை காப்பதொன்று இல்லையாகில், நீர் எத்துக்கு இங்கிருந் தீர்? நீர் முடவரல்லீர். இடரிலீர். மோதி வேடுவர் கூறை கொள்ளும் இம்முருகன் பூண்டி மாநகர்வாய் நீர் இடவ மேறியும் போவதாகிலில் எம்பிரானீரே, ஏது காவல் கொண்டு நீர் எத்துக்கு இங்கிருந்தீர்?" என்று பதிகம் பாடினார். அப்பொழுது சிவபெருமானுடைய திரு வருளினால் வேடுவர் தாம் பறித்த பொருளெல்லாம் திரு வாயிலின் முன்பு குவித்திட்டனர். நம்பியாரூரர் அவை களை யெல்லாம் அப்படியே கைக்கொண்டார்.

அவர் பெருமானை வணங்கி, அவ்வூரை யகன்று, கொங்கு நாட்டைக் கடந்து, மெய்க்காதலினால் விரைந் தேகித் திருவாரூரை யடைந்தார்.

## 18. திருக்கைலாய மலைக்கு எழுந்தருளியது

"படியில் நீடும் பத்திமுதல் அன்பு நீரில் பணைத்தோங்கி
வடிவு நம்பி யாரூரர் செம்பொன் மேனி வனப்பாகக்
கடிய வெய்ய இருவினையின் களைகட்டெழுந்து கதிர்பரப்பி
முடிவி லாத சிவபோகம் முதிர்ந்துமுருகிவிளைந்ததால்."

நம்பியாரூரர் சில நாள் திருவாரூரிலே வாழ்ந்திருந்தார். ஒரு நாள் அவருக்குத் தம் உயிர் நண்பரான சேரமான் பெருமானைக் காண அவா எழுந்தது. உடனே அவர் பூங்கோயில் அமர்ந்த பிரான் திருமுன் சென்று, "ஆரூர் அப்பனே, நரம்பினோடு எலும்புகள் கட்டி நசையினோடு இசைவு ஒன்றில்லாக் குரம்பைவாய்க்குடியிருந்து, அடியனேன் குலத்தினால் வாழமாட்டேன். முதலில் மணமென மகிழ்வர். பின்னர்த் தாயும் தந்தையும் சுற்றத்தாரும் பிணமெனச்சுடுவர். நாயேன் இந்தப் பிறவியை வேண்டேன். நறு மலரும் நீருங் கொண்டு நாடொறும் வணங்குவாருக்கு அறிவினைக் கொடுக்கும் ஆரூரப்பனே, அடியேன் அஞ்சினேனே !

"ஊன்மிசை உதிரக் குப்பை ஒருபொரு ளிலாத மாயம்
மான்மறித் தனைய நோக்க மடந்தைமார் மதிக்கும் இந்த
மானுடப் பிறவி வாழ்வு வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்
ஆனல்வெள் ளேற்ற! ஆரூ ரப்பனே! அஞ்சி னேனே!"

என்று தமது உலக வாழ்வு வெறுப்பினைப் புலப்படுத்திப் புகழ் மாலை பாடினார். அவர் எம்பெருமானுடைய திருக்குறிப்பினை யுணர்ந்து, அவ்வூரை விட்டுப் புறப்பட்டுச் சோழ நாட்டிலே பல பதிகளையும் பணிந்து அகன்று, கொங்க நாட்டினை யடைந்தார்.

அங்கே அவர் திருப்புக்கொளியூர் என்ற ஊரில் புகுந்து போகும்போது, மறையோர் வாழும் தெருவிலே எதிர் மனைகளிரண்டில் ஒன்றில் மங்கல ஒலியும் மற்றொன்றில் அழுகை ஒலியும் எழுதலைக் கண்டார். "ஒன்றுக்கொன்று மாறுபட்ட இவ்விரண்டொலியும் உடன் எழ ஏது என்னே?" என அங்கு நின்ற மறையோரை அவர் வினவினர். அவர்களவரைப் பணிந்து, "ஐயாண்டு வந்த பிராயத்தினராகிய மைந்தர் இருவர் இவ்வூர் மடுவின்கண் குளித்தனராக, அவருள் ஒரு மகவை முதலை விழுங்கிற்று. பிழைத்து வந்த பிள்ளைக்கு இன்று முந்நூல் அணியும் திருமணம் இந்த வீட்டில் நிகழ்வது; அந்த மனையில் மைந்தனை இழந்தார் அழுகின்றனர்," எனப் புகன்றார்கள். இச்செய்தி யுணர்ந்த நம்பியாரூரர், மனமிரங்கினர். அப்போது பிள்ளையை யிழந்த மறையோனும் அவன் மனைவியும் மகவிழந்த மனநிலையை மாற்றி, வெளிவந்து, அவரது திருத்தாளில் வீழ்ந்து வணங்கினர். நம்பியாரூரர், முக மலர்ந்து, தம்மைத் தொழுவாரை நோக்கி, "இன்ப மைந்தன் தன்னை இழந்தீர் நீரோ?" என்று வினவ, அவர்கள் அவரைத் திரும்பவும் கும்பிட்டு, "சுவாமி, அது முன்பு புகுந்தது. அடியேங்கள் அன்பு பழுதாகாமல் உம்மை வணங்க இங்கு எழுந்தருளப் பெற்றோம்," என மொழிந்தார்கள். நம்பியாரூரர், "இவர்கள் தம் மைந்தனை யிழந்த துயர் மறந்து, நான் வந்தணைந்ததற்கே சிந்தை மகிழ்ந்தார்கள். யான் சிறுவனை அந்த முதலை வாயினின்றும் அழைத்துக் கொடுத்தே அவிநாசி எந்தை பெருமான் கழல் பணிவேன்," எனப் புகன்று, அம்மடு இருந்த

விடம் வினவிச் சென்று, அவ்வாழுமான பொய்கைக் கரையில் எழுந்தருளி, அச்சிறுவனைக் கவர்ந்த முதலை அவனை மீண்டும் கொண்டு வருவதற்குத் திருப்பதிகம் பாடத் தொடங்கினார். அவர், "எம்பெருமானை எத்தால் மறக்கேன்? உணர்ந்து உள்ளத்தால் உற்றார் என்று உம்மையே உள்குகின்றேன். அவிநாசியே பற்றாக வாழ்வேன். வாழப் போவார்தம்மொடும் உடன் வந்து கூடிய மாமணி நீர் இடையில் ஒழிவது அழகோ? சொல்லீர். எங்கே போகினும், எம்பெருமானை நினைந்தக்கால், கொங்கே புகினும் கூறைகொண்டு ஆறலைப்பாரில்லை. அவிநாசி என் கோனே, உம்மை வேண்டிக்கொள்வேன் பிறவாமையே.

'உரைப்பார் உரையுகந் துள்கவல் லார்தங்கள் உச்சியாய்!
அரைக்கா டரவா! ஆதியும் அந்தமும் ஆயினாய்!
புரைக்காடு சோலைப் புக்கொளி யூர்அவி நாசியே
கரைக்கால் முதலையைப்பிள்ளை தரச்சொல்லு காலனையே.'

எனப் பதிகம் பாடிக்கொண்டிருக்கும் பொழுது, மறலி, மைந்தன் உயிரைக் கொணர்ந்து, தரைப்பால் வளர்ந்ததென நிரம்புமாறு அம்முதலையின் வாயில் தருவித்தான். முதலை அப்பிள்ளையைக் கரையின்கண்ணே கொண்டு வந்து உமிழ்ந்தது. அம்மைந்தனை, உருகாநின்ற தாய் ஓடி எடுத்துக்கொண்டு வந்து, உயிரளித்த திருவாளர்தம் சேவடிக்கீழ்த் தன் கணவனோடு வீழ்ந்தனள். அவ்விந்தையைக் கண்டாரெல்லாரும் அதிசயித்துத் தமது மேலாடையை விண்ணின்மேல் எறவிட்டு ஆர்த்தனர். நம்பியாரூரர் அப்பையனைத் தம்முடன் அழைத்துக் கொண்டு, கோவிலுக்குப் போய்ப் பணிந்து, புகழ் மாலை

புனைந்து வந்து, அச்சிறுவனுக்கு முரசியம்ப வெண்ணூல் பூட்டித் திருமணம் முடித்தனர்.

தம்பிரான் தோழர் அவ்வூரை விட்டுப் புறப்பட்டுப் பல ஊர்களையும் வணங்கிக்கொண்டு, கானகங்களையும் கான் யாறுகளையும் கற்காடுகளையும் கடந்து, மலை நாடு புகுந்தார். அவர் வருகின்ற செய்தியைப் பலர் சென்றோடி அறிவிப்ப உணர்ந்த சேரமான், அவர்களுக்குப் பொன்னும் பூணும் பொழிந்தளித்துச் செய்வதொன்றும் அறியாது சிந்தை மகிழ்ந்து, "என் ஐயரணைந்தார்! எனையாளும் அண்ணல் அணைந்தார்! ஆரூரில் சைவரணைந்தார்! என் துணையாம் தலைவர் அணைந்தார்!" என்று உவகை முரசம் முழக்குவித்து, நகரை அலங்கரிப்பித்து, சேனை சூழ, எதிர்கொண்டு வந்தார். பிரிந்த நண்பர் இருவரும் ஒருவரை யொருவர் முன் கண்டு பணிந்து, தழுவிச் சிந்தை மகிழ்ந்தனர். அவர்க ளிருவரும் மத்தயானை மேலேறி, நகரினுட் புகுந்து, அரண்மனை வாயிலை யடைந்து, கரியினின்றிழிந்து, மாளிகை நடுவே சென்றனர். சேரனார், நம்பியாரூரரை அரியணைமீ தேற்றிப் பணிந்து, உரிமை நல்வினைகள் பலபுரிந்தனர். ஆரூரர், தம் தோழருடனே மலைநாட்டிலிருந்த பல பதிகளுக்கும் சென்று, பெருமானைப் பணிந்து, மறுபடியும் மகோதைக்கு வந்தனர். இவ்வாறு பல நாட்கள் கழிந்தன.

ஒரு நாள் சேரலனார் நீராடத் தொடங்கினார். அப்போது வன்றொண்டர் திருவஞ்சைக் களம் புகுந்தார். அங்கே அவர் தம்மைத் துன்புறுத்தும் மனை வாழ்க்கை தொலைந்தொழிய நினைந்து, "கடற்கரைமேல் மகோதை அணியார் பொழில் அஞ்சைக் களத்து அப்பனே,

தலைக்குத் தலை மாலை அணிந்த தென்னே? சிந்தித் தெழு வார்க்கு நெல்லிக்கனியே, பரவித் தொழுவார் பெறு பண்டம் என்னே ? பரமரே, பணித்தருளீர். இனி நான் உம்மை நன்குணர்ந்தேன்; மனை வாழ்க்கையை வெறுத்து விட்டொழிந்தேன். உமை நான் மறவேன்,'' எனத் தமிழ்ப் பாமாலை பாடிச் சூடினர். அதனைச் செவி யேற்ற பூங்கயி லைப் பெருமானர், அயன் முதலிய தேவர்களை நோக்கி, "நம் நம்பியாரூரனை வெள்ளை யானையின்மேல் ஏற்றி இங்கு அழைத்துக்கொண்டு வாருங்கள்,'' என்று ஆணை தந்தார். அவ்வாணையைச் சிரமேற்றாங்கிய அயன் முதலோர் திருவஞ்சைக் களத்தை யடைந்து வேண்டு தலும், திருநாவலூரர், “ இது பெருமான் திருவருள்,” எனப் போற்றி, அவர்களைப் பணிந்து, எதிரேற்றனர். அவர்கள் அவரை வெள்ளானையின்மிசை ஏற்றினார்கள். தம்பிரான் தோழர், தம் தோழராகிய சேரனரை நினைந்து கொண்டு, யானைமிசைப் புறப்பட்டார்.

சேரர், தம்பிரான் தோழர் செயலறிந்து, உடனே அங்கு நின்றதொரு பரிமிசை இவர்ந்து, திருவஞ்சைக் களம் சார்ந்தார். அங்கே அவர் அப்போதுதான் விண் ணில் வெள்ளானையின்மேற் சென்றுகொண்டு இருந்த மெய்த் தொண்டரைக் கண்டார்; ஒரு நொடியும் நின் றிலர். தமது புரவியின் காதில் ஐந்தெழுத்து ஓதலும், அஃது இருவிசும்பெழப் பாய்ந்து, வன்றொண்டர் செல் லும் யானையை வலம்வந்து, அதன் முன்பாகச் சென்றது.

சேரமான் பெருமானுடைய பெருஞ்சேனையினு டன் சென்ற படை வீரர்கள், சேரமான் பெருமாள் இவுளியின் மீதேறி விண்மிசை மறையக் கண்டதும், முதிர்ந்த அன்பின் காரணமாக உருவிய சுரிகை

யால் தத்தம் உடலை வீழ்த்தார்கள். அதனால், அவர்கள் வீர யாக்கையைப் பெற்றுப் போய்ச் சேரர் பெருமானுக்கு முன்சென்று, சேவக மேற்றார்கள். எல்லாரும் கைலாச மலையை நோக்கிச் சென்றனர். யானையின் மேற்கொண்டு செல்லுகின்ற தம்பிரான் தோழர், இந்திரன் மால் அயன் முதலிய இமையவர் குழாம் என்னும் தானை தமக்கு முன்னே செல்ல,

"தானெனை முன்படைத்தான் அதறிந்துதன் பொன்னடிக்கே
நானெனை பாடலந்தோ! நாயினேனைப் பொருட்படுத்து
வானெனை வந்தெதிர்கொள்ள மத்தயானை அருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தான் நொடித்தான்மலை உத்தமனே."

மந்திரம் ஒன்றும் அறியேன். அடியேன் சுந்தர வேடங்களால் மனை வாழ்க்கை மகிழ்ந்து துரிசே செய்யும் தொண்டன். நெஞ்சமே, நொடித்தான் மலை உத்தமர் எனக்கு அழகானை அருள் புரிந்ததும் தரமோ? மண்ணுலகில் பிறந்து பெருமானை வாழ்த்தும் வழியடியார் பொன்னுலகம் பெறுதல் திண்ணம் என்பதனைத் தொண்டனேன் இன்று கண்டேன்.

"இந்திரன் மால்பிரமன் எழிலார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ளஎன்னை மத்தயானை அருள்புரிந்து
மந்திர மாமுனிவர் இவன்யாரென எம்பெருமான்
'நந்தமர் ஊரன்'என்றான் நொடித்தான்மலை உத்தமனே."

நொடித்தான் மலையை நாவல் ஊரன் சொன்ன இன்தமிழால் இசைந்தேத்திய பாடல் பத்தினையும் ஆழிக் கடல் அரையா, வஞ்சையப்பர்க்கு அறிவிக்கவே," என்று பதிகம் பாடிக்கொண்டு சென்று, திருமலையின் தென்திசைத் திருவாயிலை யடைந்தார்.

அங்கே நண்ப ரிருவரும் யானை குதிரைகளினின்று இழிந்து, நடந்து சென்று, வெள்ளி மாமலையில் மணி வாயிலை எய்தினர். அவ்வாயிலிலே சேரர் பெருமான் தடையுண்டு நின்றனர். நாவலூரர், அண்ணலார் திரு முன்பு நண்ணினர். அங்கே அவர்கண்ணுதற் பெருமான் திருமுன்பு தாழ்ந்து எழுந்து, ஈன்ற தாயினைக் கண்ட கன்றுபோல விரைந்தெய்தி நின்றனர். அத்தனிப் பெருந்தொண்டரை நோக்கிக் குன்ற வில்லார், "ஊரனே வந்தனை," என்றருளினர். வன்றொண்டர், "அடிய னேன் பிழை பொறுத்து ஆண்டுகொண்டு தொடக்கினை நீக்கி முடிவில்லாத நெறி தரும் நுமது பெருங்கருணை என் தரத்ததோ?" என்று கூறி, பன்முறை பணிந் தெழுந்து, இன்ப வெள்ளத்து ஆழ்ந்தனர். அவர் பெரு மான் அருகெய்தி, "சேரலன் திருமணி வாயிலின் புறத்தினன்," எனச் செப்பினர். பெம்மான் அங்கு நின்ற பெரிய தேவரை நோக்கி, "சென்று கொணர்க," என் றனர். அவர் உடன் சென்று வணங்கி, சேரலரை உள்ளே யழைத்து வந்தனர். நெற்றியங்கண்ணரைச் சேய்மை யில் கண்டு வந்தித்து மகிழ்வெய்திச் சேரர் பெருமான் போற்றினர். கயிலை நாயகர் திருமுறுவலின் ஒளி காட்டி, "நாம் அழையாமே நீ இங்கு எய்திய தென்னை?" என அருள் செய்தனர். அரசர் பெருமான் கரங் குவித்து நின்று, "அடியனேன் ஆரூரர் கழல் போற்றி, யானை முன் சேவித்து வந்தனன். எம்பெருமானுடைய கருணை வெள்ளம் இங்குக் கொண்டு வந்து புகுத்தலினாலே திரு முன்பு வரப்பெற்றேன். இனி ஒரு விண்ணப்ப முளது: அளப்பரும் பெருமையீர், அடியேன் உம்மீது அன்பி

3083

ஞல் திருவுலாப் பாடினேன். திருச்செவி சாத்தியருள வேண்டும். அடியனேன் உய்யுமாறு வன்றொண்டர் கூட்டுறவைத் தந்த பெருமானே,'' எனப் பணிந்துரைத்தார். ஈசனும், "சொல்லுக,'' என்றருளினர். சேரனார், திருவுலாவைக் கேட்பித்தார். அப்பொழுது சிவ பெருமான், "நீ நமது ஊரனாகிய ஆலால சுந்தரனுடன் அமர்ந்து, இருவீரும் நம் கண நாதராய்த் தலைமை பெற்றுத் தங்கும்,'' என்றருள் செய்தார்.

உடனே தம்பிரான் தோழர் ஆலால சுந்தரராகித் தாம் முன்பு செய்து வந்த நல்வினைத் தொழிலில் வழுவாது தலை நின்றார். சேரர் பெருமானும் கண நாதராகி, அவர் செய்யும் விருப்புறு தொழிலை மேற்கொண்டார். எம்பெருமாட்டியார் திருவருளினாலே பரவையாரும் சங்கிலியாரும், வல்வினைத் தொடக்கு அறப் பெற்று, முன்போலக் கமலினி அனிந்திதையாகித் தம் தொழில் வழி நின்றனர். வருணன், தம்பிரான் தோழருடைய ஆணையின் வண்ணம் அவர் பாடியருளிய திருநொடித் தான் மலைத் திருப்பதிகத்தைத திருவஞ்சைக் களத்தில் உய்த்து உணர்வித்தான். சேரர் காவலர் விண்ணப்பம் செய்த திருவுலாவினைக் கயிலையிற் கேட்ட மாசாத்தனார் திருப்பிடவூரிலே வெளிப்படப் பகர்ந்தனராக, அஃது உலகினில் விளங்குவதாயிற்று.

வையம் நீடுக; மாமழை மன்னுக;
மெய்வி ரும்பிய அன்பர் விளங்குக;
சைவ நன்னெறி தான்தழைத் தோங்குக;
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே.

திருச்சிற்றம்பலம்

# கேள்விகள்

1. சுந்தர மூர்த்தி நாயனாருடைய பூர்வீக வரலாற்றை விளக்குக.

2. இறைவர் சுந்தர மூர்த்தி நாயனாரைத் தடுத்தாட் கொண்ட செய்தியைச் சுருக்கி வரைக.

3. தம்பிரான் தோழர், ஆளுடைய பிள்ளையார், வன்றொண்டர், சிங்கடியப்பர், நாவலூர்க்கோன் என்னும் பெயர்கள் சுந்தர மூர்த்தி சுவாமிகளுக்கு ஏற்பட்டதற்குக் காரணங் கூறுக.

4. சுந்தர மூர்த்தி சுவாமிகள் செய்தருளிய அற்புதச் செயல்களைக் குறிப்பிடுக.

5. குண்டையூர்க் கிழவர், கோட்புலி நாயனார், சேரமான் பெருமாள் நாயனார், ஏயர்கோன் கலிக்காம நாயனார் இவர்களைப்பற்றி நீர் அறிந்ததைச் சுருக்கி யெழுதுக.

6. 'திருத்தொண்டத் தொகை' என்பது எவ்விஷயத்தைப்பற்றிக் கூறுவது ?

7. பரவையார் திருமணத்தையும் சங்கிலியார் திருமணத்தையும் விளக்குக.

8. சுந்தர மூர்த்தி சுவாமிகளுக்குக் கண் கெட்டதற்குக் காரணம் என்னை ?

9. கெட்ட கண்ணை அவர் எத்தலத்தில் எவ்வாறு மீண்டும் பெற்றனர் ?

10. சுந்தர மூர்த்தி சுவாமிகளின் சரிதையினின்றும் நீவிர் அறிந்தன யாவை ?